*A History*
*that is burried*

உலகப் பெருமதங்களில்

# ஒரு புதையுண்ட வரலாறு

இந்தியாவின் ஆதி கிறிஸ்தவம் !

**M. CHRISTOPHER**

85

(உலகப் பெரு மதங்களில்)

# ஒரு புதையுண்ட வரலாறு

## இந்தியாவின் ஆதி கிறிஸ்தவம்!

M. CHRISTOPHER

(உலகப் பெருமதங்களில்)

**ஒரு புதையுண்ட வரலாறு**

*இந்தியாவின் ஆதி கிறிஸ்தவம்!*

**(In world Religions)**

*A History that is burried*

**India's Early Christianity**

**M. Christopher,** M.A., LL.B.
*Benaiah, Kallukatty, Kuzhithurai - 629 163,*
*K.K. Dist, TamilNadu, India.*
*Ph. 04651 - 260404.*

*First Edition :* **2005**
*Second Edition :* **2006**
*Third Edition :* **2009**



*Typesetting & Printing :* **South India Press, Marthandam.**
*No. of Pages :* **266**

# இந்நூலை படிக்குமுன்......

இதற்கு முன்னால் எழுதப்பட்ட பரிசுத்த வேதாகமத் துணைநூல் மற்றும் கர்த்தரின் நாள் ஆகிய இருநூல்களும் விவிலிய அடிப்படையில் ஆனவைகளாகும்.

ஆனால் இந்நூல் உலகப்பெரு மதங்களில் கிறிஸ்துவே வழி என்பதை எடுத்துக் காட்டுவதாகும். அதோடு ஆதி கிறிஸ்தவம் இந்தியாவில் புதையுண்ட வரலாற்றையும் குறிப்பிடுகிறது.

தோமா அப்போஸ்தலனால் இந்தியாவுக்கு கொண்டுவரப் பட்ட ஆதி கிறிஸ்தவம் திராவிட மக்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டு அது சைவ, வைணவ மதங்கள் என்று அழைக்கப்பட்டது. ஆனால் அது ஆரியர்களின் இந்துத்துவா என்ற ஜாதிக் கொள்கையால் புதைக்கப்பட்டுப் போயிற்று.

இவ்வரலாற்றை குறிப்பிடும் நேரத்தில் சிவன், சைவம், விஷ்ணு, வைணவம், பிரம்மா, பிராமணர், திராவிடர், ஆரியர், இந்து, இந்துத்துவா போன்ற அனேக சொற்கள் இந்நூலில் பயன்படுத்த வேண்டிய கட்டாயம் எழுந்துள்ளது. கிறிஸ்தவர் களால் பொதுவாக உபயோகிக்கப்படாத இவ்வார்த்தைகள் வாசகர்களுக்கு சில சந்தேகங்களை எழுப்பக்கூடும். என்றாலும் வாசகர்கள் அதை பொறுமையோடு சகித்து வரலாறுகளை புரிந்து கொண்டு கிறிஸ்துவின் பணியில் தொடர வேண்டிக் கொள்கிறேன்.

ஆசிரியர்.

# பொருளடக்கம்

# SUBJECT INDEX

# முகவுரை

வரலாற்று அடிப்படையில் உலகப்பெரு மதங்களை ஆராய்வதற்கு விவிலியம் பெரும் அளவில் பயன்படுகிறது. உலக வரலாற்றின் ஆரம்பம் குறித்து விவிலியத்தில் தான் காணமுடிகிறது. விவிலிய நிகழ்ச்சிகளைக் குறித்து இந்நூலில் தரப்பட்டுள்ள காலங்கள் The Rees Chronological Bible-ன் அடிப்படையிலாகும்.

உலகத்தின் படைப்பு முதல் தேவ திட்டங்களின் செயல்பாடுகள் காலாகாலங்களில் நடந்து கொண்டே இருக்கின்றன. தேவ திட்டங்களில் மிக முக்கியமானது வீழ்ச்சி அடைந்த மனிதனை தேவன் தேடி வந்து மீட்பது ஆகும். இது உலக வரலாற்றில் நிறைவேறிய நிகழ்ச்சியாகும். கிறிஸ்து ஒருவரே மனிதனை பரத்துக்கு கொண்டு சேர்க்கும் மார்க்கமானவர். உலக வரலாற்றில் நாம் பார்க்கும் இதர மதங்கள் அனைத்தும் மனிதர்களால் ஏற்படுத்தப்பட்டவைகளாகும். அவைகள் மனிதன் கடவுளை தேடிச் செல்லும் முறைகளாகும்.

கி.பி. முதலாம் நூற்றாண்டில் தோமாவால் கொண்டு வரப்பட்ட ஆதி கிறிஸ்தவத்தை திராவிட மக்கள் ஏற்றுக்கொண்டார்கள். அது சைவம் என்றும் வைணவம் என்றும் இரு பிரிவுகளாக அழைக்கப்படலாயிற்று.

ஆனால் பல காலங்களில் இந்தியாவுக்குள் நுழைந்த அன்னியர்கள் தங்களை ஆரியர்கள் என்று அழைத்துக்கொண்டு திராவிட மக்களை இந்துத்துவா என்ற ஜாதிக் கொள்கைக்கு கீழ்ப்படுத்தி அவர்களுடைய சைவ வைணவ மதங்களை இந்து மதம் என்ற போர்வைக்குள் புதைத்து விட்டார்கள். அதோடு திராவிட மக்களின் ஆதி இந்தியக் கிறிஸ்தவம் ஆகிய சைவ வைணவ மதங்கள் இந்துமதம் என்று அழைக்கப்படலாயிற்று. திராவிட மக்கள் இந்துத்துவாவுக்கு அடிமைப்படுத்தப்பட்டார்கள். அவர்களை இந்துத்துவாவிலிருந்து தப்பவிடாமல் இருக்க சங்கரமடங்களும் ஸ்தாபிக்கப்பட்டன.

நூற்றாண்டுகள் பல செல்ல செல்ல இந்தியாவில் பிராமணீயம் உச்சகட்டத்தை எட்டியது. திராவிடர்களின் ஆதி கிறிஸ்தவம் புதைக்கப் பட்டுவிட்டது. சைவ வைணவ இலக்கியங்கள் திசை திருப்பப்பட்டது. விக்கிரகங்களும் சடங்காசாரங்களும் புகுத்தப்பட்டது. மதமே இல்லாத பிராமணர்கள் பூசாரிகளாக்கப்பட்டார்கள். இன்று ஆதி இந்தியக் கிறிஸ்தவர்களான சைவ வைணவ திராவிட மக்கள் உண்மை அறியாமல் இந்துத்துவாவின் அடிமைத்தனத்தில் திண்டாடுகிறார்கள்.

சைவ வைணவங்களில் அடங்கியுள்ள கிறிஸ்தவ சத்தியங்கள் இந்துத்துவவாதிகளால் புதையுண்டு கிடக்கிறது. புதைக்கப்பட்ட உண்மைகளை திராவிட மக்களுக்கு எடுத்துக் கூற வேண்டுமானால் இவைகளைக் குறித்த தெளிவு கிறிஸ்தவர்களுக்கு இருக்க வேண்டும். இதைக் குறித்த சரியான தெளிவு கிறிஸ்தவர்களுக்கு இல்லாததால் கிறிஸ்தவம் இன்று ஒரு வெளிநாட்டு மதம் என்றே எடுத்துக்கொள்ளப் படுகிறது. எனவே மக்களை கிறிஸ்துவுக்குள் கொண்டுவர இயலவில்லை.

மக்களை கிறிஸ்துவுக்குள் கொண்டுவர வேண்டுமானால் கிறிஸ்தவர்களாகிய நாம் புதையுண்டு கிடக்கும் ஆதி இந்திய கிறிஸ்தவ மாகிய சைவ வைணவ மதங்களையும் அவைகளை அடிமைப்படுத்திய இந்துத்துவா என்ற ஜாதிக் கொள்கைகளையும் குறித்து வரலாற்று அடிப்படையில் அறிந்திருத்தல் வேண்டும். புதையுண்டு கிடக்கும் வரலாற்று உண்மைகள் இந்நூலில் விளக்கப்படுகிறது. கர்த்தர் இந்நாட்களில் சாத்தானின் கட்டாகிய இந்துத்துவாவை உடைத்து அதை ஏந்தி நிற்கிற சங்கர மடங்களை தகர்த்து புதையுண்டு கிடக்கும் ஆதி கிறிஸ்தவத்தை விடுவிக்கத் தொடங்கி விட்டார்.

நம் தேசத்தில் ஊழியம் செய்ய விரும்பும் கிறிஸ்தவர்களுக்கும் இந்துத்துவா என்ற ஜாதிக் கொள்கையின் பிடியிலிருந்து விடுதலை பெற விரும்பும் திராவிட மக்களுக்கும் இந்நூல் உதவியாயிருக்கும் என்று நம்புகிறேன். மட்டுமல்ல உலகப் பெருமதங்களில் கிறிஸ்துவே மார்க்கம் என்னும் உண்மையும் இந்நூலில் விளக்கப்படுகிறது.

- ஆசிரியர்.

# நன்றி

திராவிட மக்களின் சைவ வைணவ மதங்கள் தோமா அப்போஸ்தலனால் கொண்டு வரப்பட்ட ஆதி இந்திய கிறிஸ்தவக் கொள்கைகளால் ஏற்பட்டவை என்ற கருத்துக்களை குறித்தும் ஆரியர்களின் இந்துத்து வாவால் ஏற்பட்ட தீங்குகளைக் குறித்தும் தகுந்த ஆதாரங்களுடன் எடுத்துக்கூறி பல பயிற்சி வகுப்புகள் மூலம் இவ்வாராய்ச்சிகளில் என்னை உற்சாகமூட்டிய Dr. M. தெய்வநாயகம் M.A., Ph.D., அவர்களுக்கும் மற்றும் Dr. D.தேவகலா M.A., Ph.D., Dr. யா.தா. பாஸ்கரதாஸ் M.A., M.Phil., Ph.D., Dr. அலெக்ஸாண்டர் ஹாரிஸ் D.Sc. மற்றும் Dr. ஜான் சாமுவேல் M.A., Ph.D. ஆகியோருக்கும், இந்நூலின் எழுத்து பணிகளில் எனக்கு உதவிய சகோ. லிஷாராணிக்கும், இதற்காக ஜெபித்து உதவிய Mrs. தானம்மா கிறிஸ்டோபர், சகோ. ஜாயிஸ், சகோ. புஷ்பம் மற்றும் குழித்துறை நியூ இந்தியா பைபிள் இன்ஸ்டிட்டியூட் ஜெபக்குழு அங்கத்தினருக் கும், இந்நூலுக்கு வாழ்த்துரை அளித்து சிறப்பித்த Pr. சாம் M.A., M.Th. அவர்களுக்கும், இதை நன்முறையில் அச்சிட்டு உதவிய தென் இந்திய அச்சகத்தாருக்கும் எனது நன்றியை தெரிவிக்கிறேன்.

# வாழ்த்துரை

ஒரு புதையுண்ட வரலாறு என்னும் இப்புத்தகத்தை படிக்கும் வாய்ப்பு கிடைத்தபடியால் நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். கிறிஸ்தவ விசுவாசிகளும் ஊழியர்களும் இந்நாட்களில் அறிந்திருக்க வேண்டிய அனேக உண்மைகள் அடங்கியது இந்த புத்தகம்.

உலக வரலாற்றில் அவதரித்த தேவனாகிய இயேசுக்கிறிஸ்து ஒருவரே மார்க்கம் என்பதை இந்நூல் தெளிவாக காட்டுகிறது.

மேலும் பரி. தோமா அப்போஸ்தலரின் இந்திய ஊழியங்களும் அதனால் ஏற்பட்ட விளைவுகளும் இந்நூலில் விளக்கப்படுகிறது. தோமாவால் கொண்டுவரப்பட்ட ஆதி இந்திய கிறிஸ்தவம் ஆரியர் களின் இந்துத்துவா கொள்கையால் அடிமைப்படுத்தப்பட்டபடியால் ஏற்பட்ட சீர்கேடுகளைக் குறித்தும் இந்நூல் வரலாற்று அடிப்படையில் எடுத்துக் காட்டுகிறது.

இந்துத்துவாவிலிருந்து இந்திய மக்களை இயேசுக்கிறிஸ்துவின் அன்பினால் மட்டுமே விடுவிக்க முடியும். மாறுபட்ட பல கருத்துக் களின் அடிப்படையில் பேசப்படும் இந்துத்துவாவின் உண்மையான தன்மைகளை எளிதில் புரிந்து கொண்டு நம் தேச மக்களிடம் ஊழியம் செய்ய இந்நூல் மிகவும் பயனுள்ளதாக அமைந்துள்ளது.

இந்நூல் ஆசிரியர் பரிசுத்த வேதாகமத் துணைநூல் மற்றும் கர்த்தரின் நாள் போன்ற அரிய கருத்துக்களைக் கொண்ட நூல்கள் மூலம் நம் மக்களுக்கு நன்கு அறிமுகமானவர் ஆவார். இந்நாட்களில் நம் தேசத்தில் அனேக சபைகளிலும் வேதாகம கல்லூரிகளிலும் தேவன் அவர்களை வல்லமையாய் பயன்படுத்தி வருகிறார். அன்னாருடைய ஊழியங்களை கர்த்தர் மேன்மேலும் ஆசீர்வதித்து அனேகரை கிறிஸ்து வண்டை நடத்த உதவட்டும் என வாழ்த்துகிறேன்.

**Pr. T. Sam M.A., M.Th.**
*Chairman, Indian Beraccah Assembly,*
*Kollanchi, K.K. Dist., South India.*

சத்தியத்தையும்
அறிவீர்கள், சத்தியம்
உங்களை விடுதலையாக்கும்.

*(யோவான். 8 : 32)*

பிரிவு : I

# உலகப் பெரும் மதங்கள்

**அதிகாரம் 1**

## மதங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

உலக சமயங்களுள் மிக முக்கியமானவையாக கருதப்படுபவை 1. கிறிஸ்துமதம், 2. யூதமதம், 3. சுராஷ்டிரமதம், 4. சமணமதம், 5. புத்தமதம், 6. இஸ்லாமியமதம், 7. சீக்கியமதம், 'இந்துமதம்' என்று அழைக்கப்படும் 8. சைவ மதம், 9. வைணவமதம் ஆகியவை ஆகும். இவை யாவும் ஆசியா கண்டத்தில் தோன்றியவை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### பழங்கால தொழுகைகள்

ஆதி நாட்களிலிருந்தே மனிதனுக்கு கடவுளை குறித்த எண்ணம் இருந்து வந்தது. கடவுள் தங்களை விட பெரியவரும், தங்களால் முடியாத காரியங்களை செய்யக் கூடியவரும் ஆவார் என்று எண்ணினார்கள்.

தங்களை விட பெரிய சக்திகளை பார்க்கும்போது ஏற்படுகிற பயத்தால் கடவுளை சரியாய் புரிந்து கொள்ளாத மனிதர்கள் அவைகளை தெய்வங் களாக எண்ணி வணங்கினார்கள். மனித சக்திக்கு அப்பாற்பட்டவை களையும், இயற்கை சக்திகளையும் தெய்வங்களாக கருதினார்கள். காற்று, புயல், மழை, இடி, மின்னல், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் மற்றும் சகல வித ஊரும் பிராணிகள், மிருக ஜந்துக்கள், ஆறுகள், மலைகள், குன்றுகள், நிரூற்றுகள், மரங்கள் போன்ற எல்லாவற்றை யுமே மனிதன் வணங்கினான். இவைகளை தவிர ஆவிகளையும் வணங்கத் தொடங்கினார்கள். ஒவ்வொரு நாடுகளிலும் விதவிதமான தேவி தேவர்களை வைத்துக் கொண்டார்கள். தங்கள் தேவிகளையும், தேவர்களையும், ஆவிகளையும் திருப்திப்படுத்த ரத்தப்பலிகளையும் செலுத்தினார்கள். தாங்கள் வேண்டிக் கொண்ட வேண்டுதல்கள் கேட்கப்படும் பொழுது தங்கள் தெய்வங்களுக்கு நன்றி கடன்களையும் செலுத்தினார்கள்.

## மதமும், வழிபாடும்

வழிபாடு அல்லது தொழுகை என்பது மதத்திலிருந்து வேறுபட்ட தாகும். சூரியனையோ, சந்திரனையோ, மரத்தையோ, மண்ணையோ, இயற்கையையோ, வணங்குவது ஒரு தொழுகை மட்டுமே. ஒரு சமயம் என்பது தொழுகை வளர்ச்சி அடைந்த நிலை ஆகும். சமயம் என்பதற்கு அதற்கான நூல்களும், தத்துவங்களும், இறை கொள்கைகளும் மற்றும் இருக்க வேண்டும். வெறும் தொழுகைகளும் சடங்காச்சாரங் களும் இருந்தால் போதாது.

## சமயம்

ஒரு மனித வாழ்கையை பண்படுத்தி சீர்படுத்துவது சமயம் என்பார்கள். அதாவது ஒரு வாழ்க்கையை சுவைக்கச் செய்வது சமயம். சமயத்தை மதம் அல்லது மார்க்கம் என்றும் கூறுவார்கள். மார்க்கம் என்பது வழி. ஒரு மனிதனை கடவுளிடம் கொண்டு சேர்க்கும் வழியே சமயம் ஆகும்.

## மனிதர்கள் ஏற்படுத்தும் சமயங்கள்

உலகத்தில் தோன்றிய பல நல்ல மனிதர்களைக் குறித்தும் அவர்கள் கற்பித்த அரும் பெரும் உபதேசங்களைக் குறித்தும் அவர்கள் ஏற்படுத்திய நல்ல கொள்கைகளைக் குறித்தும் நாம் உலக வரலாற்றில் பார்க்கிறோம். அவை யாவும் மனிதர்களின் உயர்வுக்காகவும் நல் வாழ்வுக்காகவும் நல்லுள்ளம் படைத்த சிறந்த மனிதர்களால் போதிக் கப்பட்ட வழி முறைகளாகும். எனவே அவைகளையும் மதங்கள் என்ற தலைப்பில் நாம் படிக்கிறோம்.

## கடவுள் ஏற்படுத்திய மார்க்கம்

மனிதர்கள் ஏற்படுத்திய எல்லா சமயங்களும் மனிதன் கடவுளை தேடிச்சென்று முக்தி அடைவதைக் குறித்து விளக்குகிறது. ஆனால் தம்மை விட்டு விலகிப்போன மனிதனை கடவுளே தேடி வந்து மீட்டுக் கொள்வதைக் குறித்து விவிலியம் போதிக்கிறது. கடவுளே உலகத்தில் வந்து மனிதனை தம்மிடம் சேர்த்துக் கொள்வதற்காக ஏற்படுத்திய வழியே கிறிஸ்துவாகிய மார்க்கமாகும்.

## தேவனே வழியானார்

கடவுள் சருவசிருஷ்டிகர். மனிதனை தம்மோடு நித்திய காலமாய் வாழும்படி மகிமையாய் படைத்தார். ஆனால் மனிதன் சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு பாவத்துக்குள்ளானான். நித்திய ஜீவனை இழந்தான். பாவத்தில் விழுந்த மனிதனை மறுபடியும் தம்மிடம் சேர்த்துக் கொள்ள தேவன் சித்தமானார். அதற்காக தேவன் ஒரு வரலாற்று மனிதனாக இந்த உலகத்தில் அவதரித்தார். அவரே இயேசுக்கிறிஸ்து. அவர் மனுக் குலத்தின் பாவத்தை தாமே ஏற்றுக் கொண்டு தம் சிலுவை மரணத் தால் மனிதனை மறுபடியும் நித்திய ஜீவனுக்கு கொண்டு செல்லும் மார்க்கத்தை அதாவது இரட்சிப்பை ஏற்படுத்தி அவரே அந்த வழியானார்.

## கிறிஸ்தவர்களின் எதிர்பார்ப்பு

இயேசு கிறிஸ்து ஏற்படுத்திய இரட்சிப்பை ஏற்றுக்கொண்டவர் களை சேர்த்துக் கொள்ள அவர் மீண்டும் வருவார். அப்போது அவர் பூமியை ஆட்சி செய்வார். மட்டுமல்ல அவர் சர்வவல்ல நியாயாதிபதியாய் சகலவற்றையும் நியாயம் தீர்ப்பார். சாத்தானும் அவனோடு சேர்ந்தவர்களும் அக்கினி கடலிலே தள்ளப்படுவார்கள். சபிக்கப்பட்ட இந்த பூமியும் அதிலுள்ளயாவும் வெந்து உருகிப்போம். பரிசுத்தவான்கள் தேவனால் ஆயத்தம் பண்ணப்பட்ட நித்தியராஜ்யத்தில் தேவனோடு நித்திய சந்தோஷம் அனுபவிப்பார்கள். இதுவே கிறிஸ்தவர்களின் எதிர்பார்ப்பு.

## விவிலிய நிகழ்ச்சிகள் வரலாற்றில்

விவிலியத்தில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளில் பல நடந்து முடிந்தவைகளாகவும் பல நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருப்பவையாகவும், மேலும் பல நிகழ்ச்சிகள் இனிமேல் நடைபெற இருப்பவைகளாகவும் காணப்படுகிறது. இதுவரை நடந்த நிகழ்ச்சிகள் எந்தெந்த காலங்களில் எந்தெந்த தேசங்களில் நடைபெற்றன என்பதைக் குறித்து உலக வரலாற்றில் பார்க்கிறோம்.

## உலக மதங்கள் எந்தெந்த காலங்களில்

கிறிஸ்தவ மதத்தை வரலாற்று அடிப்படையில் அதாவது அது வளர்ச்சி அடைந்த காலங்கள், தேசங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் நாம் படிக்கும்போது உலகத்தில் இன்று காணப்படும் முக்கியமான எல்லா மதங்களின் நிலைகளைக் குறித்தும் அறிந்து கொள்ளலாம். உலக மதங்களின் வளர்ச்சியைக் குறித்து துல்லியமான கால அடிப்படையில் விளக்குவது கூடாத காரியம். ஆனாலும் விவிலியத்தின் அடிப்படையிலும் உலக வரலாற்றின் அடிப்படையிலும் உலகமதங்களின் வளர்ச்சியை நோக்குவது உகந்ததாகும். இந்நூலில் கிறிஸ்து மார்க்கத்தின் வளர்ச்சியில் எந்தெந்த காலங்களில் எந்தெந்த தேசங்களில் மனிதர்களால் ஏற்படுத்தப்பட்ட மதங்கள் வளர்ச்சியடைந்தன என்பதைக் குறித்தும் விளக்கப்படுகிறது.

## சமய வளர்ச்சிகள் வரலாற்று அடிப்படையில்

உலக வரலாற்றில் இந்தியா ஆதி காலங்களிலிருந்தே மிக முக்கியமான இடத்தை பெற்றிருந்ததாக காண முடிகிறது. மதங்களின் வளர்ச்சியில் ஆதிகாலங்களிலிருந்து அதிக ஈடுபாடு வகிப்பது இந்தியா, மத்திய மேற்கு ஆசியா, ஐரோப்பா மற்றும் மத்திய தரைகடலை ஒட்டிய நாடுகள் ஆகும். இந்த நாடுகளில் ஏற்பட்ட சமய வளர்ச்சிகளைக் குறித்து கீழ்கண்ட கால அடிப்படையில் காணலாம்.

1. கி.மு 20- ஆம் நூற்றாண்டுக்கு முன்
2. கி.மு 19 to 15 நூற்றாண்டுகள்
3. கி.மு 14 to 7 நூற்றாண்டுகள்
4. கி.மு 6 to 1 நூற்றாண்டுகள்
5. கி.பி 1 ஆம் நூற்றாண்டு
6. கி.பி 2 to 6 நூற்றாண்டுகள்
7. கி.பி 7 to 14 நூற்றாண்டுகள்
8. கி.பி 15 to 19 நூற்றாண்டுகள்
9. கி.பி 20 -ஆம் நூற்றாண்டுக்குப்பின்

## பிரிவு : II

# கி.மு 20 ஆம் நூற்றாண்டுக்கு முன்

*கி.மு. 20 ஆம் நூற்றாண்டுக்கு முன் நடந்த வரலாற்று சம்பவங்களைக் குறித்து எங்கேயும் தெளிவாக எழுதப் பட்டிருப்பதாக தெரியவில்லை.*

*ஆனாலும் ஆசியா கண்டம், அதிலும் குறிப்பாக இந்தியாவை ஒட்டிய நிலப்பகுதிகள் வரலாற்றுச் சிறப்புமிக்கதாய் விளங்கியது என்று சிந்திக்க இடமுண்டு.*

*உலகின் ஆரம்பகாலங்களைக் குறித்த வரலாற்று குறிப்புகளை நாம் விவிலியத்தில் தான் தேட வேண்டும்.*

*உலகத்தின் படைப்பு, மனிதனின் படைப்பு, மனிதனின் வீழ்ச்சி, மனிதனைக் குறித்ததேவ திட்டங்கள், திட்டங்களின் செயல்பாடுகள் ஆகியவற்றை குறித்து விவிலியத்தில் கண்டு கொள்ளலாம்.*

**அதிகாரம் 2**

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

*(தொடர் - 1)*

# விவிலியம் கூறும் வரலாறுகள்

பொதுவாக பரிசுத்த வேதாகமம் கிறிஸ்தவர்களின் மத நூலாக கருதப்படுகிறது. ஆனால் வேத புத்தகம் ஒரு மதநூல் மட்டுமல்ல. அது தேவ திட்டங்களின் நிறைவேறுதலைக் குறித்து வெளிப்படுத்தும் ஒரு வரலாற்று புத்தகமாகவும் காணப்படுகிறது. விவிலியத்தில் கூறப்படும் தேவ திட்டங்கள் உலக வரலாற்றில் எந்தெந்த தேசங்களில் எந்தெந்த காலங்களில் நிறைவேறுகிறது என்பதை நாம் பார்க்க முடியும்.

## படைப்பை குறித்த வரலாறு

படைப்பை குறித்து விஞ்ஞானிகள் பற்பல கருத்துக்களை கூறுகிறார்கள். ஆனால் வேதம் இதைக் குறித்து "ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்" என்று ஆதி. 1:1லும் " பூமியானது ஒழுங்கின்மையும் வெறுமையுமாய் இருந்தது "என்று ஆதி 1:2லும் கூறுகிறது. சில வேத பண்டிதர்கள் ஆதி1:1,2 வசனங்களுக்கிடையில் பல்லாயிரக்கணக்கான வருடங்கள் கொண்ட பெரும் இடைவெளி (gap) உண்டென்று கூறுகிறார்கள். அவர்கள் ஆதி 1:1ன் படி சிருஷ்டிக்கப்பட்ட முதல் பூமியும் அதிலிருந்த மனிதர்கள் மற்று யாவும் லூசிபரின் கலகத்தின் காரணத்தால் பாழாக்கப்பட்டது என்று

கருதுகிறார்கள். அவர்கள் கருத்துப்படி முதல் பூமி சிருஷ்டிக்கப்பட்ட காலம் கணக்கிட முடியாத காலங்களுக்கு முன் என்பதாகும்.

மற்றும் வேத பண்டிதர்கள், இன்றைய பூமி சிருஷ்டிக்கப்பட்டு 6000 ஆண்டுகள் ஆகிறது என்றும், சாத்தான் ஏதேன் தோட்டத்துக்கு வருமுன் பூமிக்கு வந்ததில்லையென்றும் கருதுகிறார்கள். இரண்டாம் கருத்துப்படி வேத சம்பவங்கள் அனைத்தும் நடைபெற்ற காலங்கள் The Rees Chronological Bible-ல் கொடுக்கப்பட்டுள்ளது. *இந்நூலில் தரப்பட்டுள்ள காலங்கள் அந்த அடிப்படையில் ஆனவையாகும்.*

## மனிதனின் படைப்பு குறித்த வரலாறு

தேவன் தமது சாயலாக மனுஷனை சிருஷ்டித்தார் என்று ஆதி 1 : 27 லும் தேவனாகிய கர்த்தர் மனுஷனை பூமியின் மண்ணினாலே உருவாக்கி ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார் மனுஷன் ஜீவாத்துமாவானான் என்று ஆதி 2 : 7 லும் வாசிக்கிறோம். முதல் ஸ்திரீயாகிய ஏவாளை ஆதாமின் விலா எலும்புகளில் ஒன்றிலிருந்து படைத்தார் எனறு ஆதி 2 : 21,22 வசனங்களில் பார்க்கிறோம். (The Rees Chronological Bible) படி ஆதாமின் படைப்பு கி.மு. 3975 என்று காணப்படுகிறது.

## பாவத்தைக் குறித்த வரலாறு

ஏதேன் தோட்டத்தில் வைக்கப்பட்ட ஆதாமும், ஏவாளும் மகிமையான தூய நிலையில் இருந்தார்கள். ஆனால் சாத்தானானவன் அவர்களை வஞ்சித்தான். அவர்கள் தேவ கட்டளையை மீறினார்கள். தேவன் புசிக்க வேண்டாம் என்று சொன்ன கனியை புசித்தார்கள். தேவ கட்டளையை மீறியபடியால் பாவத்தில் விழுந்தார்கள். நித்திய ஜீவனை இழந்து மரணத்துக்குட் பட்டார்கள். அவர்கள் நிமித்தம் பாவம் உலகத்தில் பிரவேசித்தது. அவர்களிலிருந்து பிறக்கும் சந்ததியும் பாவத்துக்குள்ளானார்கள். ஆதி மனிதனின் வீழ்ச்சியை குறித்து ஆதி 3- ம் அதிகாரத்தில் வாசிக்கிறோம்.

## வீழ்ச்சி அடைந்த மனிதனின் நிலை

வீழ்ச்சி அடைந்த ஆதாமும் ஏவாளும் தங்கள் பாவ நிலையை உணர்ந்தார்கள். தேவ சந்நிதியை விட்டு விலகி தோட்டத்தில் உள்ள விருட்சங்களுக்கிடையே ஒளித்துக் கொண்டார்கள். தேவனோடு உள்ள ஐக்கியத்தை விட்டுவிலகிப் போன ஆதி மனிதர்கள் ஏதேன் தோட்டத்தை விட்டே துரத்தப்பட்டார்கள்.

## தூய நிலையிலிருந்து பாவநிலைக்கு

மேலே கூறப்பட்டபடி உலகத்தின் படைப்பை குறித்தும் முதல் மனிதனாகிய ஆதாமின் படைப்பை குறித்தும் முதல் ஸ்திரீயாகிய ஏவாளின் படைப்பை குறித்தும் அவர்கள் ஆதியிலே வைக்கப்பட்டிருந்த தூய நிலையை குறித்தும் அவர்கள் சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு தூய நிலையில் இருந்து பாவ நிலைக்கு உள்ளானதை குறித்தும் அவர்கள் மூலம் மனுக்குலம் முழுவதும் பாவத்தில் ஆழ்த்தப்பட்டதை குறித்தும் விவிலியம் விளக்குகிறது.

## வீழ்ச்சி அடைந்த மனிதனை குறித்த தேவதிட்டம்

தூய நிலையில் இருந்த ஆதாமும் ஏவாளும் பாவத்துக்குள்ளாய் விட்டார்கள். அவர்கள் மூலம் அவர்களுடைய சந்ததியும் பாவத்துக்குள்ளாயிற்று. பூமியும் சபிக்கப்பட்டது. மட்டுமல்ல மனிதனை சாபத்துக்குள்ளாக்கிய சாத்தானும் சபிக்கப்பட்டான். ஆனால் வீழ்ச்சி அடைந்த மனிதனை மீண்டெடுக்க தேவன் சித்தங் கொண்டார். அதற்கான தமது திட்டத்தையும் அங்கே வெளிப்படுத்தினார். இதைக் குறித்து ஆதி *3:15*ல் வாசிக்கிறோம். கடவுள் மனிதனாக பிறப்பார். வார்த்தையாகிய தேவன் ஸ்திரீயின் வயிற்றில் மாம்சமாவார். அவர் ஒரு கன்னிகையின் வயிற்றில் ஸ்திரீயின் வித்தாக பிறப்பார். அவர் மனிதனின் வீழ்ச்சிக்கு காரணமான சாத்தானின் தலையை (கல்வாரி சிலுவையில் தம் மரணம் மூலம்) நசுக்குவார். அவர் மூலம் மனுக்குலம் மீட்பை பெறும். இதுவே அங்கே கூறப்படும் மீட்பின் திட்டம்.

## ஆதாம், ஏவாளுக்கு தோலுடை

பாவம் செய்த ஆதாமும் ஏவாளும் தேவ மகிமையை இழந்ததினால் தாங்கள் நிர்வாணிகள் என்று உணர்ந்தார்கள். தேவன் அவர்களுடைய நிர்வாணத்தை மறைக்கும் படி தோலுடைகளை உண்டாக்கி உடுத்தினார். அவர்களுக்கு பாவத்தால் ஏற்பட்டநிலையை மறைப்பதற்கு மிருகங்கள் பலியாக்கப்படவேண்டியதாயிருந்தது.

## ஆதாமின் சந்ததி பெருகுதல்

ஆதாமின் மகனான காயீன் தன் சகோதரனை கொலை செய்தான். காயீனின் சந்ததி துஷ்ட சந்ததியாயிருந்தது. ஆதாமின் மற்றுமோர் மகனான சேத்தின் வழியாகவும் ஆதாமின் மற்றும் மக்கள் வழியாகவும் மனிதர்கள் பலுகிப்பெருகினார்களென்று பார்க்கிறோம்.

ஆதாம் முதல் நோவா வரை பத்து தலைமுறைகள்.
அவையாவன :-

*ஆதாம் (கி.மு. 3975)*

*சேத் (கி.மு. 3845)*

*ஏனோஸ் (கி.மு. 3740)*

*கேனான் (கி.மு. 3650)*

*மகலாலெயேல் (கி.மு. 3580)*

*யாரேது (கி.மு. 3515)*

*ஏனோக்கு (கி.மு. 3353)*

*மெத்தூசாலா (கி.மு. 3288)*

*லாமேக்கு (கி.மு. 3101)*

*நோவா (கி.மு. 2919)*

இந்த தலைமுறைகளில் ஜனங்கள் பெரும் கூட்டமாய் பெருகினார்கள்.

## முப்பத்து முக்கோடி தேவர்கள்

தேவ கட்டளையை விட்டு விட்ட மனிதனும் அவன் சந்ததியும் தேவ உறவை இழந்து விட்டார்கள். சாத்தான் அவர்களை தொடர்ந்து வஞ்சித்தான். பயம் அவர்களை ஆட்கொண்டது. மனிதர்கள் சிருஷ் டிகரை மறந்து சிருஷ்டிகளை வணங்க ஆரம்பித்தார்கள். இயற்கையின் சத்துவங்களையும் சகலவித மிருக ஜீவன்களையும், பிராணிகளையும், கல்லையும் மண்ணையும் கூட தொழுது கொண்டார்கள் இவ்விதம் ஏற்பட்ட முப்பத்துமுக்கோடி (எண்ணற்ற) தேவர்கள் சாத்தானின் தூண்டுதலால் ஏற்பட்டவையேயாகும்.

**அதிகாரம் 3**

## யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

(தொடர் - 2)

# ஆதி மனிதனின் இருப்பிடம் - கிழக்கே

உலகின் முதல் மனித சமுதாயம் எங்கே ஆரம்பமானது? ஏதேன் தோட்டம் எந்த தேசத்தில் இருந்தது? இதை குறித்து வேத புத்தகம் கூறுவது என்ன ?

உலக நாகரீகங்களில் சுமேரியா நாகரீகம் மிகப் பழமையானது (B.C. 3500) என்றும் அதன் பின் அமைந்த நாகரீகம் நைல் நாகரீகம் (B.C. 3000) என்றும் மூன்றாவது நாகரீகம் சிந்துவெளி நாகரீகம் (B.C. 2500) என்றும் வரலாற்று ஆசிரியர்கள் முன்னால் கூறி வந்தார்கள். ஆனால், பரிசுத்த வேதாகமத்தின் அடிப்படையில் உலகின் முதல் நாகரீகம் இந்தியாவை ஒட்டிய பிரதேசங்களில் அமைந்திருக்க வேண்டும் என்று கூறுவதற்கு முகாந்தரம் உண்டு.

### வேதத்தில் கூறி இருப்பவை

வேதாகமத்தில் ஆதி 2 :8 -ல் "தேவன் கிழக்கே ஏதேன் என்னும் தோட்டத்தை உண்டாக்கினார்" என்றும் ஆதி 11:1,2 வசனங்களில் "ஜனங்கள் (ஆதாமின் சந்ததி) கிழக்கேயிருந்து பிரயாணம் பண்ணுகையில்

சினேயார் தேசத்திலே (சுமேரியா) சமபூமியை கண்டு அங்கே குடியிருந்தார்கள் என்றும் வாசிக்கிறோம். இந்த வசனத்தின் அடிப்படையில் பார்த்தால் ஜனங்கள் சுமேரியாவுக்கு கிழக்கில் இருந்து வந்திருக்க வேண்டும். சுமேரியாவுக்கு கிழக்கில் அமைந்துள்ள பழமையான தேசம் இந்தியாவோ அதை ஒட்டின தேசங்களோ ஆயிருக்க வேண்டும்.

### சமீப கால ஆராய்ச்சிகள்

சமீபகால ஆராய்ச்சிகள் வேத புத்தகத்தில் கூறியிருப்பது மெய் என்று உறுதிப்படுத்துகிறது. 17 -1 -02 ல் வெளிவந்த தினமலர் நாளிதழில் "உலகின் முதல்மனித சமுதாயம் இந்தியாவில் தோன்றிய தாம்" என்ற தலைப்பில் தகுந்த ஆதாரங்களோடு செய்தி ஒன்று வெளிவந்துள்ளது. அச்செய்தியில் குஜராத்தில், காம்பே வளைகுடாவுக்கு அடியில் உலகின் முதல் மனித சமுதாயத்தின் குடியிருப்புகள் இருந்ததற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன என்றும் பழங்காலத்தை சேர்ந்த நதி ஒன்றை குஜராத் கடற்கரையிலிருந்து 9 கிலோமீட்டர் தூரத்தில் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கடந்த ஆண்டு கண்டு பிடித்தனர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### தமிழகத்திலா ?

மேற்குறிப்பிட்ட செய்தியைத் தொடர்ந்து மேலும் 18-12-02 -ல் தினமலர் நாளிதழில் வெளிவந்த மற்றுமோர் செய்தியின் தலைப்பு "உலகின் முதல் நாகரீகம் பிறந்தது தமிழகத்தில் தான்" என்பதாகும். இந்த செய்தியில் பூம்புகார் அருகே கடலில் மூழ்கிய நகரம் ஒன்று கண்டு பிடிக்கப் பட்டுள்ளதாகவும் அந்த பிரமாண்ட நகரத்தில் தான் முதன் முதலில் நாகரீகம் தோன்றியது என்றும் இதை இங்கிலாந்தை சேர்ந்த கிரகாம் ஹான் கார்க் என்ற ஆழ்கடல் ஆராய்ச்சியாளர் 2001 ம் ஆண்டு கண்டுபிடித்தார் என்றும் கூறப்பட்டுள்ளது.

### வேதத்தில் கூறப்பட்டிருப்பது உண்மை

மேலே குறிப்பிடப்பட்ட ஆராய்ச்சிகள் பரிசுத்த வேதாகமத்தில் கூறப்பட்டபடி சுமேரியாவுக்கு கிழக்கே தான் முதல் மனிதரின் குடியிருப்பு என்பது உறுதிபடுத்தப்படுகிறது.

## லெமூரியா

ஒரு காலத்தில் சிறப்பு மிக்க பட்டணங்களைக் கொண்ட லெமூரியா என்ற கண்டம் இந்து மகா சமுத்திரத்தின் அடியில் அழிந்திருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கூறியிருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

## பூமி எங்கும் ஒரே பாஷை

ஆதி. 11 : 1 -ல் 'பூமி எங்கும் ஒரே பாஷை'யும் ஒரே விதமான பேச்சும் இருந்தது என்றும் எழுதப்பட்டிருக்கிறது. ஆதி மனித இனத்தின் இருப்பிடம் கிழக்கே அதாவது இந்தியாவை சேர்ந்த பகுதிகளில் தான் இருந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சிகளால் நிரூபிக்கப்பட்ட நிலையில் அங்கு பேசப்பட்ட ஒரே பாஷை எது என்னும் கேள்வி எழுகிறது. அது தமிழ்மொழியாகத்தான் இருக்க வேண்டும் எனறு சிந்திப்பதற்கு தகுந்த முகாந்தரம் உண்டு.

## அறிஞர் பி. ராமநாதன் என்பவர் கருத்து

தமிழக வெளியீட்டு புத்தகங்களில் ஒன்றான சிந்துவெளி தொல் தமிழ் நாகரீகம் என்ற நூலில் ராமநாதன் என்பவர் கூறியுள்ள சில கருத்துக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது :-

## மாந்தன் தொன் மொழிக்கு நெருங்கியது தமிழே

"இன்றுள்ள மொழிகளில் மாந்தன் தொன்மொழிக்கு மிக நெருங் கியது தமிழ் மட்டுமே. முதல் தாய் மொழி ஆய்வில் ஈடுபட்டுள்ள அறிஞர்களுக்கு ஒளி தர வல்லது தமிழே."

## ஒரே தொன் மொழி

'உலகின் மொழிகள் அனைத்தும் ஏழெட்டு மாபெரும் குடும்பங் களுக்குள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. அவை அனைத்தும் மாந்த இனத்தின் ஒரே தொன்மொழியில் இருந்து தோன்றி இருக்கலாம் என்று 19-ம் நூற்றாண்டின் இறுதியிலேயே மாக்ஸ்முல்லர் உன்னித்தார்'.

## தமிழே மூலமொழி

"மாந்தன் இன முதன்மொழி ஒன்றாகத் தான் இருக்க வேண்டும். மிக தொன்மை வாய்ந்த தமிழே அனைத்து மொழி குடும்பங்களுக்கும் மூலமான மொழியாக கருதப்பட வேண்டும்....."

## தமிழர் என்பதன் கொச்சை திரிவு 'திராவிடர்'

"திராவிடர் என்பது தமிழர் என்பதன் கொச்சை திரிவு வடிவமே... தமிழ் என்பதன் கொச்சைத் திரிவு வடிவமே திராவிடம் என்பதாகும். (தமிழ் , த்திரமிழ், திராவிடா)....."

## Dr. அம்பேத்கார் கருத்து

இந்தியா முழுவதும் பேசப்பட்ட ஒரே மொழி தமிழ் மொழி என்று டாக்டர் அம்பேத்கார் கூறியிருக்கிறார்

"The original 'Tamil' when imported into sanskrit became 'Damila' and later on 'Damila' became 'Dravida'. The word 'Dravida' is the name of the language of the people and does not denote the race of the people. The third thing to remember is that Tamil or Dravida was not merely the language of South India; but bfore the Aryans came it was the language of the whole of India and was spoken from Kashmir to cape comorin; in fact, it was the language of the Nagas throughout India"

*(Dr. Babasaheb Ambedkar writings and speeches, VOl V11, pg.300, 1990, Govt. of maharashtra)*

*- Indian Express, May 17, 1994*

## மற்றும் அறிஞர்களின் கருத்து

மேற்கண்ட கருத்துக்களை டாக்டர் மு. தெய்வனாயகம் மற்றும் அனேக ஆராய்ச்சியாளர்கள் தங்கள் ஆராய்ச்சிகளின் அடிப்படையிலும் வெளிப்படுத்தியிருக்கின்றார்கள்.

## இந்தியாவின் சிறப்பு

பரிசுத்த வேதாகமத்தின் அடிப்படையிலும் மேலே குறிப்பிட்ட ஆராய்ச்சிகளின் அடிப்படையிலும் உலகின் முதல் மனித சமுதாயம் சுமேரியாவுக்கு கிழக்கில் உள்ள இந்தியாவிலோ, இந்தியாவை சேர்ந்த பகுதிகளிலோ, லெமூரியா கண்டத்திலோ தோன்றியிருக்க வேண்டு மென்றும், அவர்கள் பேசியிருந்த ஒரே பாஷை தமிழ் என்றும், அந்த ஜனங்கள் தமிழர்கள் அல்லது திராவிடர்கள் என்றும் அவர்கள் இங்கிருந்து சுமேரியாவுக்கும் மற்று இடங்களுக்கும் சென்றார்கள் என்றும் சிந்திக்க இடமுண்டு.

**அதிகாரம் 4**

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

(தொடர் - 3)

## ஜனங்கள் கிழக்கிலிருந்து மேற்கே

### முற்கால இந்தியா

சமீப காலம் வரையில் கீழ் தேசமாகிய இந்தியாவைப் பற்றிய சரியான கருத்துகள் மறைக்கப்பட்டிருந்தது. உலகின் முதல் மனித சமுதாயம் கிழக்கே இந்தியா ஒட்டிய தேசங்களில் தோன்றியதென்று சமீபகால ஆராய்ச்சிகள் வெளிப் படுத்துகிறது என்று பார்த்தோம். இந்திய தேசத்தில் பேசப்பட்டமொழி தமிழ்மொழியாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்றும் பார்த்தோம். தமிழ் மொழி பேசிய மக்கள் திராவிடர்கள். திராவிட மக்கள் இந்தியா முழுவதும் பரவி இருந்தார்கள். அவர்களுக்கு ஒரு சிறந்த நாகரீகம் இருந்தது. இவைகளை குறித்து 20 -ம் நூற்றாண்டுக்குப் பின் அனேக காரியங்களை நாம் அறிகிறோம். திராவிடர்களின் நாகரீகம் சிந்துவெளி நாகரீகம் என்று அழைக்கப்படுகிறது. சமீபகாலம் வரையில் திராவிடர்கள் எந்த சிறப்பும் இல்லாதவர்கள் என்று வந்தேறிய அன்னியர்களால் இழிவுபடுத்தப்பட் டிருந்தார்கள்.

### சிறப்பான சிந்துவெளி நாகரீகம்

இதுவரை நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளின் அடிப்படையில்

உலகின் நாகரீகங்களில் மிகப்பழமையான ஒன்று சிந்துவெளி நாகரீகமென்று காணப்படுகிறது.

1920ல் ஹரப்பா, மொகஞ்சாதாரோ போன்ற இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சிகள் வழியாய் திராவிடர்களின் சிறப் பான பழங்கால நாகரீகத்தின் பல அம்சங்கள் வெளிக்கொண்டு வரப் பட்டுள்ளது. திராவிடர்கள் ஆதிநாட்களில் கற்களை கருவிகளாக கொண் டிருந்தார்கள். களிமண்ணைக் கொண்டு வீடுகள் அமைத்திருந்தார்கள். புல்லைக் கொண்டு கூரை அமைத்தார்கள். பிற்காலங்களில் சித்திர எழுத்துக்களை பயன்படுத்தினார்கள். செங்கற்களை பயன்படுத்தியிருந் தார்கள். நிலத்தை உழுது பயிர் செய்தார்கள். வாணிபத்தை வளர்த் திருந்தார்கள். சிறந்த பட்டணங்களை அமைத்தார்கள். சிறப்பான சமூக வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார்கள் மிக மேன்மையான வாழ்க்கை வாழ்ந்திருந்தார்கள். இதிலிருந்து திராவிடர்களின் சிந்துவெளி நாகரீகம் மிகப்பழமையானதென்றும் மிகச் சிறப்பானதென்றும் காணப்படுகிறது.

## திராவிடர்களின் ஞாபகக்கல் வழிபாடு

சிந்துவெளி நாகரீகத்தில் திராவிட மக்கள் ஞாபகக்கல் வழி பாட்டை செய்து வந்தார்கள் என்று காணப்படுகிறது. ஹரப்பா, மொஹஞ்சாதாரோ ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு களில் அனேக ஞாபகக்கற்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவைகள் பிற்காலங்களில் 'சிவலிங்கம்' என்று அழைக்கப்பட்டது. சிவம் = அன்பு, லிங்கம் = அடையாளம்; சிவலிங்கம்= அன்பின் அடையாளம். சிந்துவெளி நாகரீகத்தில் காணப்பட்ட ஞாபகக்கல் வழிபாடு இந்தியாவி லிருந்து மேற்காசியாவிலும் பரவிச் சென்றிருப்பதை பரிசுத்த வேதாகமத் தில் காண முடிகிறது.

## ஜலப்பிரளையம்

உலகத்தில் ஏற்பட்ட ஓர் பெரும் ஜலப்பிரளையத்தைப் பற்றி பரிசுத்த வேதாகமத்திலும் மற்றும் வரலாற்று புத்தகங்களிலும் கூறப் படுகிறது. ஜனங்கள் சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு பொல்லாத காரியங் களை நடப்பித்தார்கள். தேவன் மனிதனை உண்டாக்கினதற்காக மனஸ்தாபப்பட்டார். அது அவர் இருதயத்துக்கு விசனமாயிருந்தது (ஆதி.

*6 : 6)*. நோவாவின் காலத்தில் *(கி.மு.2319)* அந்த பொல்லாத மனித சந்ததி அழிக்கப்பட்டது.

## தேவனிடத்தில் கிருபை பெற்ற நோவா

நோவாவின் பேழைக்குள் பிரவேசித்த நோவாவுக்கு கர்த்தருடைய கண்களில் கிருபை கிடைத்தது - ஆதி. *6 : 8*. நோவா, சாம், காம், யாப்பேத் ஆகியோரும் அவர்கள் மனைவிகளும் ஆன எட்டுப்பேர் மட்டுமே காக்கப்பட்டார்கள். Edward Rees என்பவரின் Chronological Bible படி ஜலப்பிரளையம் BC 2319 ல் நடந்தது. ஜலப்பிரளயத்துக்குப் பின் நோவா பலி செலுத்தினானென்றும் அதன்பின் மனிதன் புலால் உண்பதை கர்த்தர் அனுமதித்தாரென்றும் பார்க்கிறோம். தேவன் அவர்களைப் பார்த்து நீங்கள் பலுகிப் பெருகி பூமியை நிரப்புங்கள் என்று கட்டளையிட்டார் *(ஆதி 9 : 1, 7)*. நோவாவின் சந்ததி திரளாய் பெருகினார்கள்.

## ஜனங்கள் மெசப்பட்டோமியாவுக்கு

திரளாய் பெருகின நோவாவின் சந்ததி, கிழக்கிலிருந்து பிரயாணம் பண்ணி மேற்கிலுள்ள சிநேயார் தேசத்தில் அதாவது சுமாரியாவில் வந்தார்கள். *(ஆதி 11 : 1 - 2)*

## பாபேல் கோபுரம் (2144 B.C.)

தேவ கட்டளைப்படி நோவாவின் சந்ததி பூமியை நிரப்ப வேண்டும். ஆனால் அங்கேயும் சாத்தான் ஜனங்களை வஞ்சித்தான். ஜனங்கள் ஒரே இடத்தில் கூடி வாழ்ந்தார்கள். மட்டுமல்ல அவர்கள் "நாம் பூமியின் மீதெங்கும் சிதறிப்போகாதபடிக்கு நமக்கு ஒரு நகரத்தையும், வானத்தை அளாவும் சிகரமுள்ள ஒரு கோபுரத்தையும் கட்டி நமக்கு பெயருண்டாகப் பண்ணுவோம்" *(ஆதி.11:4)* என்று சொல்லி ஒரு கோபுரத்தைக் கட்டத் தொடங்கினார்கள். அப்பொழுது தேவன் அவர்கள் பேசியிருந்த ஒரே பாஷையை தாறுமாறாக்கினார். ஜனங்கள் எல்லா தேசங்களுக்கும் பிரிந்து சென்றார்கள்.

### ஜனங்கள் நானா தேசங்களில்

ஆதி :10 -ம் அதிகாரத்தில் நோவாவின் வம்சத்தார் சிதறிப் போன தேசங்களைக் குறித்தும் அவர்கள் வம்சத்தார்களிலிருந்து உண்டான ஜாதிகளைக் குறித்தும் வாசிக்கிறோம். தேசங்கள், பட்ட ணங்கள், ஆகியவற்றின் பெயர்களும் அங்கு வசித்த நோவாவின் சந்ததி யின் வம்ச வரலாறுகளும் இன்றைய தேச வரலாறுகளோடு ஒத்திருப் பதைப் பார்க்கிறோம். பாபேலில் கட்டப்பட்ட கோபுரத்தின் இடிபாடு கள் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஜனங்கள் நாலா தேசங்களிலும் பிரிந்து சென்ற போது சாத்தான் மறுபடியும் தன் வஞ்சனையை ஆரம்பித்தான்.

## பாபிலோனிய இரகசியம்

சாத்தான் மனுக்குலத்தை ஏதேனில் வஞ்சித்த பின் மறுபடியும் பாபிலோனியாவிலும் வஞ்சித்தான். அது ‘பாபிலோனிய ரகசியம்’ என்றும் பாபிலோனிய மதம் என்றும் அழைக்கப்படுகிறது. இது சாத்தானால் ஏற்படுத்தப்பட்ட விக்கிரக மாற்கமாகும்.

### விக்கிரக வணக்கம்

நோவாவின் சந்ததியில் தோன்றிய கூஷ் -ன் குமாரன் நிம்ரோத் என்பவன் பராக்கிரமசாலியாயிருந்தான். அவன் பாபிலோனை ஸ்தாபித்தான். சாத்தானின் வஞ்சனையினால் அவன் தன்னை சூரிய கடவுள் ஆக்கிக் கொண்டான். நிம்ரோத்தை தேவனாகவும் சூரியக் கடவு ளாகவும் காண்பித்து பாபிலோன் நகரில் சொரூபங்கள் செய்யப்பட்டது. (அப்படிப்பட்ட ஒரு சொரூபம் இன்றும் லண்டன் மியூசியத்தில் உள்ளது.) சகல ஜனங் களும் சொரூபத்தை வணங்கினார்கள். அவனுக்கு பலிபீடங்கள் கட்டப்பட்டது. புரோகிதர்களும் ஏற்படுத்தப்பட்டார்கள்.

### விக்கிரகக் கடவுள்கள்

நிம்ரோதின் மரணத்துக்குப் பின் அவன் மனைவியான செமிறாமிஸ் என்பவள் நினஸ் என்ற மகனைப் பெற்றாள். தான் பெற்றெடுத்த நினசைக் குறித்து செமிறாமிஸ் ஜனங்களோடு : நிம்ரோத் தானே தனக்குள் குழந்தையாக பிறந்து இருக்கிறான் என்றும் நினஸ் என்னும்

குழந்தை ஏதேன் தோட்டத்தில் தேவனால் கூறப்பட்ட 'ஸ்திரீயின் வித்து' என்றும் அங்கே தேவனால் கூறப்பட்ட ஸ்திரீ செமிராமிஸ் என்றும் கூறினாள். செமிராமிஸின் இந்த வார்த்தையைக் கேட்ட ஜனங்கள் அதை ஏற்றுக் கொண்டார்கள். அதோடு செமிராமிஸ்-ம், நினஸ்-ம் தேவர்கள் ஆக்கப்பட்டார்கள். அவர்களுக்கும் பலிபீடங்கள் கட்டப்பட்டு புரோகிதர்களும் அமர்த்தப்பட்டார்கள். அனேக விக்கிரகங்கள் செய்யப்பட்டு விக்கிரக ஆராதனைகளும் பெருகிற்று.

செமிறாமிஸ் தாயாகவும், நினஸ் குழந்தையாகவும் உண்டாக் கப்பட்ட விக்கிரகங்களுக்கு செய்யப்படும் வழிபாடுகள் பல தேசங்களில் பரவியது.

## பற்பல பெயர்கள்

ஒவ்வொரு தேசங்களிலும் அந்தந்த தேசங்களுக்கு ஏற்ப இவர்கள் பெயர்கள் மாற்றப்பட்டு வழங்கப்பட்டது. தம்மூஸ், பால், தாகோன், பாக்கஸ், ஒசிறிஸ், ஜானோஸ், மாலோக், யூப்பிட்டர், புளூட்டஸ், டயோனிசஸ், இயக்கஸ், பெலூஸ், போன்ற பெயர்கள் சூரிய தேவனான நிம்ரோத் அல்லது நினஸ்க்கும் அத்தேனிஸ், டயானா, வீனஸ், சிபிலி, சீறிஸ், போர்ச்சுனா, மெடோனா, ஐசிஸ், அந்தோர், ஹெஸ்டியா, வெஸ்டா, டியூம், பெல்ஹிட்டிஸ், பீல்செமன், மெல்கட், ஆஸ்மின், போன்ற பெயர்கள் செமிராமிஸ்-க்கும் தேசங்களில் வழங்கப் பட்டது. இதோடு விக்கிரக ஆராதனை உலகெங்கும் கொண்டு செல்லப்பட்டது.

## விக்கிரகங்களுக்கு தலைமை இடம்

பாபிலோனியாவே; பாபிலோனிய மதத்தின் தலைமை இடமாய் இருந்தது. பிற்காலங்களில் பாபிலோனிய மதத்தின் தலைமை இடம் பாபிலோனியாவிலிருந்து வேறு தேசங்களுக்கு மாற்றப்பட்டது.

## பிரிவு : III

## கி.மு 19 - 15 நூற்றாண்டுகள்

*மத்திய மேற்கு ஆசியாவிலிருந்து, அதிலும் குறிப்பாக மெசப்பட்டோமியாவிலிருந்து ஜனங்கள் சிதறடிக்கப்பட்ட போதிலும் தேவன் தம் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக ஆபிரகாமென்ற மனிதனை தெரிந்து கொண்டார்.*

*ஆபிரகாமிலிருந்து தமக்கென்று ஒரு ஜனத்தை உலகத்தின் மையமான பாலஸ்தீனாவில் ஆயத்தப் படுத்துகிறார்.*

*ஆபிரகாமிலிருந்து எழும்பிய இரு ஜாதிகளான யூதர்களும், இஸ்லாமியரும் வரலாற்றில் இன்றும் மிக முக்கியமான பங்கு வகிக்கிறார்கள்.*

*இஸ்ரவேல் ஜனம் பலுகிப் பெருகி எகிப்தின் அடிமைத்தனத்தில் 430 ஆண்டுகள் தவித்தார்கள்.*

**அதிகாரம் 5**

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

*(தொடர் - 4)*

# தேவ திட்டங்களுக்காக ஒரு ஜனம்

கிழக்கிலிருந்து வந்த ஜனங்கள் சிநேயாரில் (மெசப்பட்டோமியாவில்) தங்கியிருந்தார்கள் எனறு பார்த்தோம். தேவ திட்டத்தின் படி வீழ்ச்சியடைந்த மனிதனை மீட்டுக் கொள்ள தேவன் மனு உரு எடுத்து ஒரு ஸ்திரீயின் வித்தாக தோன்ற வேண்டும். அதற்காக ஒரு ஸ்திரீ தெரிந்தெடுக்கப்பட வேண்டும். இத்திட்டங்களுக்காக தேவனுக்கென்று ஒரு ஜனம் ஆயத்தமாக வேண்டும். அதற்காக தேவன் ஆபிரகாம் என்ற ஒரு மனிதனை தெரிந்து கொண்டார். ஆபிரகாம் மெசப்பட்டோமியாவில் ஊர் என்ற பழங்கால பட்டணத்தில் வசித்திருந்தான். அங்கே தேவன் ஆபிரகாமை அழைத்து தமக்கென்று வேறுபடுத்தினார்

## ஆபிரகாமோடு உடன்படிக்கை

கர்த்தர் ஆபிரகாமோடு "நான் உன்னை பெரிய ஜாதியாக்கி உன்னை ஆசிர்வதித்து உன் பெயரைப் பெருமைப்படுத்துவேன். நீ ஆசிர்வாதமாயிருப்பாய். பூமியில் உள்ள வம்சங்கள் எல்லாம் உனக்குள் ஆசிர்வதிக்கப்படும்"*(ஆதி.12 :2 -3 )* என்று வாக்குப் பண்ணினார்.

கி.மு 1907 ல் ஆபிரகாம் தேவ கட்டளைக்கு கீழ்ப்படிந்து ஊரை விட்டு புறப்பட்டான்.

### ஆபிரகாம் பலஸ்தீனாவுக்கு

ஆபிரகாம் ஊரிலிருந்து ஆரானுக்கும் அங்கிருந்துபலஸ்தீனாவுக்கும் சென்றான். பாலஸ்தீனம் மத்திய தரைக்கடலின் கிழக்கே அமைந் துள்ளது. இது உலகத்தின் மையப் பகுதியில் காணப்படுகிறது. அங்கே தேவன் ஆபிரகாமை பெரிய ஜாதியாக்கினார். இவ்விதமாய் உலகத்தின் மையத்தில் தேவனுக்கென்று ஒரு ஜனம் எழும்புவதையும், அதிலிருந்து ஓர் ஸ்திரீ தெரிந்து கொள்ளப்படுவதையும் அந்த ஸ்திரீயின் வித்தாக (இயேசு) தேவன் மனு உருவாகுவதையும் பார்க்கிறோம். மட்டுமல்ல ஸ்திரீயின் வித்தாகப் பிறந்த இயேசுக் கிறிஸ்து உலகத்தின் மையத்தில் எல்லா ஜனங்களுடைய பாவ பரிகாரத்திற்காக பலியானார் என்றும் காண்கிறோம்.

## ஆபிரகாமிலிருந்து இரு ஜாதிகள்

### 1. ஆபிரகாமிலிருந்து அராபியர்கள்

ஆபிரகாமும் மனைவி சாராளும் பஞ்சத்தின் காரணமாக பலஸ் தீனாவிலிருந்து எகிப்துக்குச் சென்றார்கள். திரும்பி வருகையில் ஆகார் என்ற ஒரு எகிப்திய பெண்ணையும் கொண்டு வந்தார்கள். சாராளுக்கு பிள்ளைகள் இல்லாத காரணத்தால் சாராள் ஆகாரை ஆபிரகாமுக்கு கொடுத்தாள். ஆபிரகாமுக்கு ஆகாரில் இஸ்மவேல் என்னும் மகன் பிறந்தான்.

ஆபிரகாமுக்கு ஆகாரில் பிறந்த இஸ்மவேல் என்பவனை தவிர கேத்தூராளில் பிறந்த பிள்ளைகளும் இருந்தார்கள். ஆபிரகாம் அவர்களை கிழக்கே அரேபியாவுக்கு அனுப்பி வைத்தான். அங்கே அவர்கள் பலுகிப் பெருகினார்கள். இஸ்மவேல் ஆகாரின் கர்பத்தில் இருக்கும் போதே அவனைக் குறித்து தூதனால் உரைக்கப்பட்டதாவது:- "உன் சந்ததியை (ஆகாரின்)மிகவும் பெருகப்பண்ணுவேன். அது பெருகி எண்ணி முடியாததாயிருக்கும்... அவன் (ஆகாரின் மகன்

இஸ்மவேல்) துஷ்டனாயிருப்பான். அவனுடைய கை எல்லாருக்கும் விரோதமாகவும், எல்லாருடைய கையும் அவனுக்கு விரோதமாகவும் இருக்கும், தன் சகோதரர் எல்லாருக்கும் எதிராக குடியிருப்பான்" என்பதாகும் (ஆதி *16:10,12*). இன்று இஸ்லாமியர் உலகில் பெலத்த ஜாதியாய் இருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## அராபியர் ஞாபகக்கல் வழிபாடு

ஆபிரகாமின் வழிவந்த அராபியர்கள் ஞாபகக்கல் வழி பாட்டை செய்து வந்தார்கள். இந்நாட்களிலும் கூட மக்காவில் ஞாபகக்கல் (காபாக்கல்) வைக்கப்பட்டிருக்கிறது. இது ஆபிரகாமும் அவனுடைய ஒரு மகனான இஸ்மவேலும் சேர்ந்து நாட்டின ஞாபகக்கல் என்று இஸ்லாமியர்கள் உரிமை பாராட்டுகிறார்கள். மக்காவில் வைக்கப் பட்டிருக்கும் காபா (ஞாபகக்கல்)க்கல்லை இஸ்லாமியர் எல்லா வருடங்களிலும் வந்து வழிபடுகிறார்கள். இஸ்லாமியர்கள் எங்கிருந்து வந்தாலும் அவர்கள் அணிந்து வந்த உடைகளை மாற்றி திராவிட முறைப்படி வேஷ்டியும் துண்டும் அணிந்து கொண்டு கல்லை ஏழு தரம் சுற்றி வந்து முத்தமிடுகிறார்கள். இது திராவிட முறைப்படியான தொழுகை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## 2. ஆபிரகாமிலிருந்து இஸ்ரவேலர்

இஸ்மவேலின் பிறப்புக்குப் பின் ஆபிரகாமின் மனைவியான சாராள் ஈசாக்கு என்னும் குமாரனை பெற்றாள். அவனே ஆபிரகாமின் வாக்குத்தத்த புத்திரன் ஆகும். அவனை சாராள் முதிர்வயதில் காத்திருந்து பெற்றெடுத்தாள். ஈசாக்குக்கு இரண்டு மக்கள். ஒருவன் யாக்கோபு, மற்றவன் ஏசா. ஈசாக்கின் இளைய மகனாகிய யாக்கோபு தன் சகோதரனை ஏமாற்றியதால் தன் பெற்றோரை விட்டு ஓட வேண்டியதாயிற்று. யாக்கோபு ஆரானிலிருக்கும் தன் மாமனாகிய லாபானின் வீட்டிற்கு போனான்.

## யாக்கோபு -ஞாபகக்கல் வழிபாடு

ஆபிரகாமின் பேரனாகிய யாக்கோபு ஆபிரகாமைப் போல ஞாபகக்கல் நாட்டி இறைவனை வழிபட்டதை குறித்து வேதத்தில் வாசிக்கிறோம். யாக்கோபு கி.மு. 1737-ல் ஆரானுக்கு போகும் போது பெத்தேலிலே ராத்தங்கினான். படுக்கையில் ஒரு சொப்பனம் கண்டான். விழித்தெழும்பி தன் தலையின் கீழ் வைத்திருந்த கல்லை எடுத்து தூணாக நிறுத்தி அதின் மேல் எண்ணெய் வார்த்து, தேவன் என்னோடிருந்து.... என்னை என் தகப்பன் வீட்டுக்கு சமாதானத்தோடே திரும்ப வரப் பண்ணினால், நான் தூணாக நிறுத்தின இந்தக் கல் தேவனுக்கு வீடாகும் என்று பொருத்தனை செய்தான். அது அப்படியே ஆயிற்று. யாக்கோபு அந்த இடத்திற்கு பெத்தேல் என்று பெயரிட்டான். *(ஆதி.28 :18)*

## உடன்படிக்கை புதுப்பித்தல்

தேவன் ஆபிரகாமுக்கு செய்த வாக்குத்தத்தங்களை அங்கே யாக்கோபுக்கு புதுப்பித்தார். "அதற்கு மேலாகக் கர்த்தர் நின்று நான் உன் தகப்பனாகிய ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின் தேவனுமாகிய கர்த்தர், நீ படுத்திருக்கிற பூமியை உனக்கும் உன் சந்ததிக்கும் தருவேன். உன் சந்ததி பூமியின் தூளைப் போலிருக்கும் நீ மேற்கேயும் கிழக்கேயும் வடக்கேயும் தெற்கேயும் பரம்புவாய் உனக்குள்ளும் உன் சந்ததிக்குள்ளும் பூமியின் வம்சங்களெல்லாம் ஆசிர்வதிக்கப்படும்" *(ஆதி28:13 -14)* என்று ஆசிர்வதித்தார்.

## இஸ்ரவேல் என்ற ஜனம்

யாக்கோபு ஆரானில் ஆசிர்வதிக்கப்பட்டான். அவனுக்கு நான்கு மனைவிகளும், 12 மக்களும் ஏராளம் ஆடு மாடுகளும் கிடைத்தது. அவை எல்லாவற்றோடு ஆரானிலிருந்து தன் தகப்பன் வீட்டிற்கு கி.மு. 1737-ல் புறப்பட்டான். வழியில் யாபோக் என்னும் ஆற்றில் அவன் ஒரு தூதனை சந்தித்தான். அங்கே அவன் பெயர் யாக்கோபு என்பதற்கு பதிலாய் இஸ்ரவேல் என்று மாற்றப்பட்டது. இஸ்ரவேல் பன்னிரு கோத்திரங்களுக்கு பிதாவானான். அவர்கள் பின் நாட்களில் பெலத்த ஜாதியானார்கள்.

இதுவே வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட இஸ்ரவேல் என்னும் சந்ததி. இந்த சந்ததியிலிருந்து கன்னி மரியாள் தெரிந்து கொள்ளப் பட்டாள். அவளிடத்தில் ஸ்திரீயின் வித்தாகிய இயேசு பிறந்தார். இஸ்ரவேல் ஜனம் இன்றும் உலகில் சிறந்த ஜனமாக காணப் படுகிறார்கள்.

## ஆபிரகாமின் மரணம்

ஆபிரகாம் கி.மு 1792 -ல் பெயர்சபாவில் மரித்த போது அவன் குமாரனாகிய இஸ்மவேலும் ஈசாக்கும் அவனை எபிரோனுக்கு எடுத்துச் சென்று மெக்பாலாவில் அடக்கம் பண்ணினார்கள். மெக்பாலா இன்றும் இஸ்லாமியருடையவும் இஸ்ரவேலருடையவும் புண்ணிய ஸ்தலமாக காணப்படுகிறது. அங்கே சாராள், ஆபிரகாம், ஈசாக்கு, ரெபேக்காள், யாக்கோபு, லேயாள் ஆகியோரின் கல்லறைகள் மிகவும் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன. முன்பு இதைச்சுற்றி ஏரோது ஒரு சுவர் கட்டியிருந்தான். பைசான்டியன் காலத்தில் ஆபிரகாமின் ஆலயம் என்ற ஒரு ஆலயம் கட்டப்பட்டது. பின்பு அராபியர்கள் அதை மசூதி ஆக்கினார்கள். இன்று இது கிறிஸ்தவர்களுக்கும், இஸ் லாமியருக்கும் ஓர் முக்கிய ஸ்தலமாக காணப்படுகிறது.

இவை யாவும் வரலாற்று உண்மைகளை விளக்குபவையாகும். நோவாவின் மகனான சாம் என்பவன் ஆபிரகாம் உயிரோடிருக்கும் போது அதாவது கிமு. 1817-ல் மரணமடைந்தான் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

## இஸ்ரவேலரைக் குறித்த தேவதிட்டம்

தேவ திட்டப்படி இஸ்ரவேலின் ஒரு மகனான யோசேப்பு என்பவன் எகிப்து தேசத்துக்கு கி.மு. 1699 -ல் கொண்டு செல்லப் பட்டான். அங்கே அவன் உயர்ஸ்தானத்தில் மந்திரியாக உயர்த்தப் பட்டான். அந்நாட்களில் பெரும் பஞ்சம் ஏற்பட்டது. இஸ்ரவேலின் குடும்பத்தார் அனைவரும் (எழுபது பேர்) பஞ்சத்தின் காரணமாக கி.மு. 1677-ல் எகிப்துக்குச் சென்றார்கள். யோசேப்பு அவர்களை கோசேன் என்னும் செழிப்பான தேசத்தில் குடியிருக்கச் செய்தான்.

அங்கே இஸ்ரவேலர் பல இலட்சம் பேராக பெருகினார்கள். பின்நாட்களில் பெரும் கூட்டமான இஸ்ரவேலர் எகிப்தியர்களால் துன்புறுத்தப் பட்டார்கள். எகிப்தின் அடிமைத் தனத்திலிருந்த இஸ்ரவேலர் தேவனை நோக்கி கூப்பிட்டார்கள். 430 ஆண்டுகளுக்குப் பின் தேவன் தமது வார்த்தையின் படி இஸ்ரவேல் ஜனங்களை எகிப்தின் அடிமைதனத்திலிருந்து விடுவிக்க சித்தமானார். அதற்காக அவர் மோசே என்ற ஒரு தலைவனை எழுப்பினார்.

## பிரிவு : IV

# கி.மு 14 - 7 நூற்றாண்டுகள்

*இந்த காலங்களில் தேவன் தம் ஜனத்தை எகிப்தின் அடிமைத்தனத்தினின்று மோசே மூலம் விடுவிக்கிறார். கானானுக்கு வழி நடத்துகிறார்.*

*வழியில் சீனாய் மலையில் ஒரு வருடம் அவர்களுக்கு பயிற்சி அளிக்கிறார்.*

*ஏக தெய்வ வழிபாடு ஆரம்பமாகிறது. தேவன் காண்பித்தபடி முதல் ஆராதனைக் கூடம் செய்யப்படுகிறது.*

*முதல் மதநூல் எழுதப்படுகிறது. ஜனங்கள் பலஸ்தீனாவில் ஆட்சிகள் ஏற்படுத்துகிறார்கள்.*

*சாலொமோன் ராஜாவின் காலத்தில் கற்களால் ஆன முதல் தேவாலயம் எருசலேமில் கட்டப்படுகிறது.*

*ஜனங்கள் தேவனின் சட்ட திட்டங்களை விட்டு அகன்றுபோனபோது அவர்கள் அடிமைத்தனத்துக்கு ஒப்புக் கொடுக்கப்படுகிறார்கள்.*

*எருசலேம் தேவாலயம் அழிக்கப்படுகிறது.*

அதிகாரம் 6

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

(தொடர் - 5)

# தேவ ஜனத்திற்கு பயிற்சி

எகிப்தில் இஸ்ரவேலரின் கூக்குரலை கர்த்தர் கேட்டருளி அற்புதமான முறையில் மோசேயை அங்கே எழுப்பினார். கி.மு. 1542 -ல் பார்வோனின் குமாரத்தி ஓர் குழந்தையாக நாணல் பெட்டியில் வைக்கப்பட்டிருந்த மோசேயை நைல் நதியிலிருந்து எடுத்தாள். மோசே பார்வோனின் அரண்மனையிலேயே வளர்ந்தான். தன் 40-ாவது வயதில் எகிப்தியன் ஒருவனை கொன்றபடியால் மோசே கி.மு. 1502-ல் மீதியானுக்கு ஓடிப் போனான். 80 -ாவது வயதில் தேவன் அவனுக்கு ஓரேப் மலையிலே முட்செடியின் மத்தியில் அக்கினியில் வெளிப்பட்டார். இஸ்ரவேல் ஜனங்களை பார்வோனின் கைகளிலிருந்து விடுவித்து அவர்களுக்கு தேவனை சேவிக்க வேண்டிய பயிற்சிகள் அளித்து கானானில் கொண்டு சேர்க்கும்படி கி.மு. 1463-ல் மோசேயை அழைத்தார்.

## எகிப்தின் அடிமைதனத்திலிருந்து விடுதலை

தேவன் மோசே மூலம் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்க சித்தமானார். அதே வேளையில் இஸ்ரவேல் ஜனங்களை கானானுக்கு நடத்திய வனாந்திர யாத்திரை

மூலம் பாவத்தின் அடிமைத்தனத்தில் இருக்கும் மனிதர்களை பாவத்திலிருந்து விடுவித்து நித்திய இராஜ்யத்துக்கு கொண்டு சேர்க்கும் பரலோக யாத்திரையை குறித்து நிழலாட்டமாக போதிக்கிறார். ஆரம்பத்தில் பார்வோன் இஸ்ரவேல் ஜனங்களை விடுவிப்பதற்கு மறுத்தான். ஆனால் தேவன் தம்முடைய வல்லமையை இஸ்ரவேல் ஜனங்களும் எகிப்தியரும் கண்டு கொள்ளும் வகையில் வெளிப்படுத்தினார். பத்து வாதைகளை அனுப்பினார். பத்தாவது வாதை தலைபிள்ளை சங்காரம்.

## ரத்தத்தால் விடுதலை

எகிப்தில் தேவன் இஸ்ரவேலருக்கு 'பஸ்கா'வை ஏற்படுத்தினார். இஸ்ரவேலர் வீட்டிற்கு ஒரு பழுதற்ற ஆட்டுகுட்டியை அடிக்க வேண்டும். அதின் ரத்தம் வாசல்களின் நிலைக்கால்களில் புரட்டப் பட வேண்டும். இஸ்ரவேலர் தங்கள் வீடுகளில் அப்படியே செய்தார்கள். இரவில் சங்கார தூதன் வந்த போது அவன் இரத்தம் புரட்டப்படாத வீடுகளின் உள்ளே புகுந்தான். அங்கே சங்காரம் நடந்தது. கி.மு. 1462-ல் இஸ்ரவேலரின் வீட்டு வாசற்படிகளில் புரட்டப்பட்டிருந்த இரத்தத்தைக் கண்டு சங்கார தூதன் கடந்து சென்றான். இதுவே பஸ்கா (pass over). அங்கே சங்காரம் இல்லை. அன்று தானே இஸ்ரவேல் ஜனங்கள் விடுவிக்கப்பட்டார்கள். அதாவது, இஸ்ரவேல் ஜனங்கள் அடிமைத் தனத்திலிருந்து இரத்தத்தின் வல்லமையால் விடுதலை அடைந்தார்கள். இந்நிகழ்ச்சியால் மனுக்குலத்திற்கு கிறிஸ்துவாகிய தேவாட்டுக் குட்டியின் இரத்தத்தால் விடுதலை உண்டு என்ற தேவ திட்டத்தை தேவன் வெளிப்படுத்தினார்.

## இயேசுவின் இரத்தம்

இயேசு கிறிஸ்து ஒரு பஸ்கா ஆடாக அடிக்கப்பட்டு தேவ திட்டப்படி பாவத்தின் அடிமைதனத்திலிருந்து மனுக்குலத்தை மீட்டுக்கொள்வதைக் குறித்து இங்கே எடுத்துக்காட்டப்பட்டது. இயேசுக்கிறிஸ்து உலகத் தோற்றத்துக்கு முன் அடிக்கப்பட்ட தேவ ஆட்டுக்குட்டி என்று பார்க்கிறோம்.

### யாத்திரையில் அற்புதங்கள்

மோசேயால் வழி நடத்தப்பட்ட இஸ்ரவேல் ஜனங்கள் அற்புதமாய் செங்கடலை தாண்டினார்கள். கர்த்தரே யுத்தம் செய்தார். செங்கடலை பிளந்தார். பார்வோனின் சேனை அழிக்கப்பட்டது. மாராவில் கசந்த நீர் மதுரமானது. வானத்திலிருந்து மன்னா அனுப்பப்பட்டது. பகலில் மேகஸ்தம்பமும் இரவில் அக்கினிஸ்தம்பமும் அவர்களை வழி நடத்தியது. தேவன் கற்பாறைகளிலிருந்து நீர் சுரக்கப்பண்ணினார். இன்னும் அனேக அற்புதங்களாலும் அடையாளங்களாலும் ஓங்கிய புயத்தால் இஸ்ரவேல் ஜனங்களை வழிநடத்தினார்.

### தேவன் அளித்த சட்டதிட்டங்கள்

கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களை சீனாய் வனாந்திரத்தில் ஒரு வருடம் தங்கப்பண்ணினார் (கி.மு. 1462 ஜூன் முதல் 1461 மே வரை). தேவன் தெரிந்து கொண்ட ஜனத்திற்கு தம்மை வெளிப்படுத்த சித்தமானார். அவர் மோசேக்கு தம்மை வெளிப்படுத்தினார். பத்து கட்டளைகளை ஜனங்களுக்கு கொடுத்தார்.

### பலியைக் குறித்த போதனை

மனிதனின் பாவத்தின் சம்பளமாகிய மரணத்தை தாமே ஏற்றுக் கொண்டு சிலுவையில் பலியாக வேண்டுமென்பது தேவதிட்டம். தாம் மனிதனாக அவதரித்து சிலுவையில் பலியாவதற்கு முன்பு பலியினால் பாவ மன்னிப்பு ஏற்படும் என்ற பாடத்தை விளக்கு வதற்காக தேவன் தம்மை தொழுதுகொள்ளும் முறைகளை குறித்தும் பலி செலுத்தும் விதங்களை குறித்தும் போதித்தார்.

### முக்கியமான பலிகள்

1. சர்வாங்க தகனபலி (burnt offering) லேவி. 1 : 1 - 17.
2. போஜன பலி (heat offering) லேவி. 2 : 1- 16, 6 : 14 - 23.
3. சமாதான பலி (peace offering) வேலி. 3 : 1 - 17; 7 : 11 - 34.
4. பாவ நிவாரண பலி (sin offering) லேவி. 4 : 1 - 35; 6 : 24 - 30.

5. குற்ற நிவாரண பலி (trespas offering)
லேவி. 5 : 1 - 19; 6 : 1 - 7; 7 : 1 - 10.

பலிகளுக்கான பிரமாணங்களும் கொடுக்கப்பட்டது (லேவி. 10 : 8 20).

## அனுசரிக்க வேண்டிய பண்டிகைகள்

இஸ்ரவேல் ஜனங்கள் அனுசரிக்க வேண்டிய பண்டிகைகளும் அவைகளுக்கான சட்ட திட்டங்களும் கொடுக்கப்பட்டது.

1. பஸ்கா (pass over) லேவி. 23 : 4 - 5
2. புளிப்பில்லாத அப்பப் பண்டிகை (unleavend bread) லேவி. 23 : 6 - 8.
3. முதற்பலன் (first fruit) லேவி. 23 : 9 - 14
4. அசைவாட்டும் கதிர்க்கட்டு (wave loaves penteost) லேவி. 23 : 15 - 22
5. எக்காளம் (Trumpets) லேவி. 23 : 23 - 25
6. பாவ நிவிர்த்தி நாள் (day of atonement) லேவி. 23 : 33 - 44

## தேவ ஜனத்துக்கு நியாயப் பிரமாணங்கள்

ஜனங்கள் நடக்க வேண்டிய எல்லா வழிமுறைகளை குறித்தும் கட்டளை கொடுத்தார். தேவன் கொடுத்த எல்லா கட்டளைகளையும் மோசே ஜனங்களுக்கு அறிவித்தார். அவைகளை மோசே புத்தகத்தில் எழுதினார். அது நியாயப்பிரமாணம் என்று அழைக்கப்படுகிறது.

## முதலாம் கட்டளை - ஏக தெய்வக் கொள்கை

உலகமக்கள் தேவனை மறந்து விட்டார்கள். சிருஷ்டிகளை தேவர்களாக மாற்றிக் கொண்டார்கள். மட்டுமல்ல, விக்கிரகங்களை சேவித்தார்கள். இந்நிலையில் தேவன், தாம் ஒருவரே மெய்யான தேவன் என்று எடுத்துக் கூறுவதை அவர் அருளிய முதலாம் கற்பனையில் பார்க்கிறோம். “உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்பட பண்ணின உன் தேவனாகிய கர்த்தர் நானே. என்னையன்றி

உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கொப்பான ஒரு சொரூபத்தையாகிலும், யாதொரு விக்கிரகத்தை யாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்".*(ஆதி 20.1* to *5)* இது ஏக தெய்வத்தை அதாவது ஒரே கடவுளை வணங்குவதற்கான தேவ கட்டளை ஆகும். உலகில் ஏக தெய்வ கொள்கையை வலியுறுத் தியிருப்பது இதுவே முதன் முறையாகும். *(கி.மு 1462)*

## முதல் வழிபாட்டுக் கூடம்

கி.மு 1462 முதல் 1461 வரை ஒரு வருடம் இஸ்ரவேல் ஜனங்கள் சீனாய் வனாந்தரத்தில் தங்கி இருந்தார்கள். தேவன் அவர்களுக்கு மோசே மூலம் சட்ட திட்டங்களை அளித்தார். தேவன் அவர்கள் மத்தியில் வாசம் பண்ண விரும்பினார். ஜனங்களின் நடுவில் வாசம் பண்ண ஒரு வாசஸ்ஸ்தலத்தை உண்டாக்க கர்த்தர் மோசேக்கு கட்டளை யிட்டார். *(யாத் 25.8)* தேவ கட்டளைப்படி பிராகாரம், பரிசுத்த ஸ்தலம், மகாபரிசுத்த ஸ்தலம் என்கிற அமைப்புகளோடு கூடிய ஆசாரிப்பு கூடாரம் உண்டாக்கப்பட்டது. தேவ மகிமை சீனாய் மலை யில் இறங்கிய வண்ணமாய் ஆசரிப்பு கூடாரத்தில் இறங்கினதைக் குறித்து யாத்.40. 34 -38 வசனங்களில் கூறப்பட்டுள்ளது. "அப்பொழுது ஒரு மேகம் கர்த்தருடைய கூடாரத்தை மூடினது; கர்த்தருடைய மகிமை வாசஸ்ஸ்தலத்தை நிரப்பிற்று. கர்த்தருடைய மகிமை வாசஸ்ஸ்தலத்தை நிரப்பினதினால், மோசே ஆசாரிப்பு கூடாரத்திற்குள் பிரவேசிக்க கூடாதிருந்தது".

## குத்துவிளக்கு *(கி.மு. 1461)*

உலகத்தில் முதன்முதலாக ஆலய வழிபாடு அல்லது கோயில் வழிபாட்டு முறை இங்கே ஆரம்பமாவதை பார்க்கிறோம். இது தேவனே தம்முடைய ஜனத்திற்கு ஏற்படுத்திய ஓர் முறையாகும். ஆசாரிப்பு கூடாரத்தில் நியமிக்கப்பட்ட முதல் ஆசாரியன் ஆரோன் என்பவனாகும். கி.மு. 1461 ஏப்ரல் 1-ல் ஆரோன் ஆசரிப்புக் கூடாரத்தில்

குத்து விளக்குகளை ஏற்றினான் (எண். 8 : 1 - 4) அங்கே பலி செலுத்துவது போன்ற தொழுகை முறைகளும் ஸ்தாபிக்கப்பட்டது.

## ஆசரிப்பு கூடாரம் பலஸ்தீனாவில்

ஒரு வருட பயிற்ச்சிக்கு பின் இஸ்ரவேல் ஜனங்கள் சீனாய் வனாந்தரத்தில் இருந்து மறுபடியும் யாத்திரை ஆரம்பித்தார்கள். யாத்திரையிலும் ஆசரிப்பு கூடாரம் ஜனங்கள் நடுவே சென்று கொண்டிருந்தது. தேவனே அவர்களை நடத்தினார். ஆனால் மோசே கானானுக்குள் பிரவேசிக்கவில்லை. தேவனுடைய கூற்றின்படி யோர்தானுக்கு கிழக்கே உள்ள நேபோ என்ற மலையில் மோசே ஏறிச் சென்றான். கர்த்தர் கானான் தேசத்தை மோசேக்கு காட்டினார். மோசே அங்கே தன் ஜீவிய யாத்திரையை முடித்தான்.(கி.மு 1423)

## முதல் மத நூல்

மோசே மரிக்கும் முன் பஞ்சாகமங்கள் என்று அழைக்கப்படும் வேத புத்தகத்தின் முதற்பகுதியை எழுதினான். இவ்வாறு ஏக தெய்வ கொள்கையை குறித்தும், ஆலய வழிபாட்டைக் குறித்தும், பலிமுறைகளை குறித்தும் விளக்கப்படும் கிறிஸ்தவ நூலின் முதறபகுதி கி.மு 1423 க்கு முன் உருவானது.

## மோசேக்கு பின் யோசுவா

மோசே மரித்தப்பின் யோசுவா என்பவன் இஸ்ரவேல் ஜனங்களை நடத்தினான். யோசுவா யோர்தான் நதியை கடந்து சீலோ என்ற இடத்தில் ஆசரிப்பு கூடாரத்தை ஸ்தாபித்தான். யோசுவா கில்காலில் பாளயம் இறங்கி கானான் தேசத்தில் அனேக யுத்தங்கள் செய்து கானானை சுதந்தரித்து அதை இஸ்ரவேலரின் 12 கோத்திரங்களுக்கு பங்கிட்டு கொடுத்தான். இவ்வாறு இஸ்ரவேல் ஜனங்கள் வாக்குப் பண்ணப்பட்ட கானான் தேசத்தை சுதந்தரித்தார்கள்.

## இஸ்ரவேலருக்கு நியாயாதிபதிகள்

யோசுவாவுக்குப்பின் இஸ்ரவேல் ஜனங்களை வழிநடத்த தலைவர்கள் இருக்கவில்லை. கர்த்தரே அவர்களை நடத்தினார். அவர்கள் நடக்க வேண்டிய வழிமுறைகள் நியாயப் பிரமாணத்தில் எழுதப்பட்டிருந்தது. ஆனால் ஜனங்கள் பல வேளைகளிலும் நியாயப் பிரமாணத்தை விட்டு விலகி அன்னிய தேவர்களை நாடி தங்கள் மனம் போன போக்கில் நடந்தார்கள். அப்போது தேவன் அவர்களை தண்டித்தார். பிற தேசத்தாரின் அடிமைத் தனங்களுக்கு ஒப்புக் கொடுத்தார். அந்நேரங்களில் ஜனங்கள் தங்கள் பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு தேவனை நோக்கி மன்றாடினார்கள். அப்பொதெல்லாம் தேவன் அவர்களுக்கு ஒரு ரட்சகனை எழுப்புவார். அந்த தலைவன் ஜனங்களை நியாயம் விசாரித்து நடத்துவார். இது (கி.மு. 1407 - 1065) நியாயாதிபதிகளின் காலம் எனப்படுகிறது. இவ்வாறு இஸ்ரவேலருக்கு 15 நியாயாதிபதிகள் இருந்தார்கள். கடைசி நியாயாதிபதியாக இருந்தவர் சாமுவேல் ஆகும்.

## கற்களால் கட்டப்பட்ட முதல் தேவாலயம்

சாமுவேல் தீர்க்கதரிசியின் நாட்களில் இஸ்ரவேல் ஜனங்கள் ஒரு இராஜாவை தங்களுக்கு வேண்டிக் கொண்டார்கள். தேவன் அவர்களுக்கு சவுல் என்ற ஒருவனை ராஜாவாக கொடுத்தார். அவன் கர்த்தருடைய வார்த்தைகளுக்கு கீழ்படியாதபடியால் கர்த்தர் தாவீது என்பவனை எழுப்பினார். தாவீது ராஜா தேவனுக்கென்று ஒரு ஆலயம் கட்ட விரும்பினான். அதற்காக எல்லா பொருட்களையும் சவதரித்தான். ஆனால் அவன் நாட்களில் கர்த்தர் தேவாலயத்தை கட்ட அனுமதிக்கவில்லை. அவன் நாட்களுக்குப் பின்பு அவன் மகனான சாலோமோன் எருசலேம் தேவாலயத்தை கட்டினான். அதுவே உலகில் கற்களால் கட்டப்பட்ட முதல் தேவாலயம்.

## கர்த்தருடைய வார்த்தை

ஆலயத்தைக் குறித்து சாலோமோனுக்குண்டான கர்த்தருடைய வார்த்தை “நீ என் கட்டளைகளின் படி நடந்து என் நீதிநியாயங்களை

நிறைவேற்றி என் கற்பனைகளின் படி எல்லாம் நடந்து கொள்ளும் படிக்கு, அவைகளை கைக்கொண்டால், நீ கட்டுகிற இந்த ஆலயத்தைக் குறித்து நான் உன் தகப்பனாகிய தாவீதோடே சொன்ன என் வார்த்தையை நிறைவேற்றி இஸ்ரவேல் புத்திரர் நடுவில் வாசம் பண்ணி என் ஜனமாகிய இஸ்ரவேலை கைவிடாதிருப்பேன்"(I இராஜ. 6 :12,13) என்பதே.

## ஆலய அமைப்பு

தேவாலயம் ஆகம முறைப்படி பிராகாரம், பரிசுத்தஸ்தலம், மகா பரிசுத்த ஸ்தலம் ஆகிய அமைப்புகளோடு செய்யப்பட்டது. சந்நிதிஸ்தானம் மகா முக்கியமான அம்சமாக இருந்தது.

## பணிமுட்டுகளில் சில

பொன் பலிபீடம், சமுகத்தப்பங்களை வைக்கும் பொன் மேஜை, சந்நதிஸ்தானத்துக்கு முன்பாக வைக்கும் பசும்பொன் விளக்குத் தண்டுகள், பசும்பொன்னாலான கிண்ணங்கள், வெட்டுகத்திகள், கலங்கள், கலயங்கள், தூபகலசங்கள், கதவுகளில் பொன்னான முளைகள், தூண்கள், வெண்கல பலிபீடம், வெண்கல கடல்தொட்டி, பத்து ஆதாரங்கள், வெண்கல கொப்பரைகள், பொற் பாத்திரங்கள் போன்றவை.

## ஆலயப் பிரதிஷ்டை - கி.மு. 972

கர்த்தருடைய பெட்டி சந்நிதிஸ்தானமாகிய மகா பரிசுத்த ஸ்தலத்தில் வைக்கப்பட்டது. கணக்கில்லாத பலிகள் செலுத்தப்பட்டது. முன்பு ஆசாரிப்பு கூடாரத்தில் வந்திறங்கியது போன்ற தேவ மகிமை ஆலயத்தை நிரப்பிற்று. எருசலேம் தேவாலயம் கி.மு 972 -ல் பிரதிஷ்டை பண்ணப்பட்டது.

## சாலொமோனுக்குப் பின்

சாலொமோனுக்குப் பின் ஸமஸ்த இஸ்ரவேல் ராஜ்யம் வடதேசம்

(இஸ்ரவேல்) என்றும் தென்தேசம் (யூதா) என்றும் இரண்டாக பிரிக்கப் பட்டது. வடதேசத்தில் எலியா, எலிசா, ஆமோஸ், ஓசியா, யோனா ஆகிய தீர்க்கதரிசிகள் அறிவுரைகள் கொடுத்தும் ஜனங்கள் நியாயப் பிரமாணங்களை விட்டு விலகி அன்னிய தேவர்களை பற்றிக் கொண்டார்கள். எனவே வட தேசம் (இஸ்ரவேல்) கி.மு 721 -ல் அசீரியாவால் பிடிக்கப்பட்டது. இஸ்ரவேலர் அசீரியர்களால் அடிமை களாக்கப்பட்டு அசீரியாவுக்கு கொண்டு செல்லப்பட்டார்கள்.

## எருசலேம் தேவாலயம் இடிக்கப்படுதல்

வடதேசமாகிய இஸ்ரவேல் நாடு அசீரியர்களால் பிடிக்கப்பட்ட பின்னும் கி.மு. 586 வரை தென் தேசமாகிய யூதா நீடித்தது. தென் தேசத்தில் 20 ராஜாக்கள் ஆண்டார்கள். யூதா நாட்டுக்கு ஒபதியா, யோவேல், ஏசாயா, நாகூம், மீகா, ஆபகூக், செப்பனியா, எரேமியா, போன்ற தீர்க்கத்தரிசிகள் தீர்க்கதரிசனம் உரைத்தார்கள். கடைசி ராஜாக்களாகிய யோயாக்கீம், யோயாக்கீன், சிதேக்கியா ஆகிய ராஜாக்களின் நாட்களில் பாபிலோனியா ராஜாவான நேபுகாத் நேச்சார் யூதாவை தோற்கடித்து எருசலேம் தேவாலயத்தின் எல்லா பணி முட்டுகளையும் பாபிலோனுக்கு எடுத்துச் சென்றான். கி.மு. 586 -ல் நேபுகாத் நேச்சாரின் காவற்சேனாதிபதியான நேபுசரதான் ஆலயத்தை இடித்து சுட்டெரித்தான். யூதர்கள் பாபிலோனியா அடிமைத்தனத்துக் குள்ளானார்கள்.

## பிரிவு : V

# கி.மு 6 - 1 நூற்றாண்டுகள்

*இந்த காலங்கள் உலக வரலாற்றில் மிக முக்கியமானதாய் காணப்படுகிறது.*

*இந்நாட்களில் ஏக தெய்வ கொள்கையுடைய யூதர்கள் பலஸ்தீனாவிலிருந்து பாபிலோனியாவுக்கு கொண்டு செல்லப்படுகிறார்கள்.*

*யூதர்களின் ஏகதெய்வக் கொள்கையின் தாக்கத்தால் பெர்சியாவில் சுராஷ்டிர மதம் ஸ்தாபிக்கப்படுகிறது.*

*வரும் கால ராஜ்யங்களைக் குறித்து நேபுகாத் நேச்சாருக்கு வெளிப்படுத்தப்படுகிறது.*

*மோசேயின் பஞ்சாகமங்கள் கிரேக்க மொழியில் மொழி பெயர்க்கப்படுகிறது.*

*கிழக்கு ஆசிய நாடான இந்தியாவில் சமண பவுத்த மதங்கள் ஏற்படுகின்றன.*

*பாபிலோனியா, மேதிய பெர்சியா, கிரேக்கம், ரோம் ஆகிய உலக வல்லரசுகளின் ஆதிக்கம் ஏற்படுகிறது.*

*அதின் விளைவாக பெர்சியர்கள், கிரேக்கர்கள், ரோமர்கள் போன்ற அன்னியர்கள் இந்தியாவில் வந்து வசிக்கலாயினர். பிற்காலங்களில் இவர்களால் ஜாதிக் கொள்கை என்ற இந்துத்துவா உருவாக்கப்பட்டது.*

அதிகாரம் 7

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

(தொடர் - 6)

# வரும்கால திட்டங்கள் வெளிப்படுத்துதல்

## நேபுகாத் நேச்சாருக்கு வெளிப்பாடு

பாபிலோனியாவில் நேபோபொலேசார் என்பவன் தன் அதிகாரத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டான். அவன் கி.மு. 612-ல் அசீரியாவின் தலைநகரான நினிவேயை பிடித்து பாபிலோனியா சாம்ராஜ்யாத்தை ஸ்தாபித்தான். அவன் மகனான நேபுகாத் நேச்சார் தன் 20 வருட யுத்தத்திற்கு பின் (கி.மு. 606 - 586) எருசலேமை பிடித்துக் கொண்டான். யூதர்கள் கைதிகளாக பாபிலோனியாவுக்கு கொண்டு செல்லப்பட்டார்கள். இது யூதர்களின் பாபிலோனிய அடிமைத்தனம் என்று அழைக்கப்படுகிறது.

இந்நாட்களில் (கி.மு. 604-ல்) பாபிலோனிய ராஜாவான நேபுகாத் நேச்சார் இரவில் ஒரு சொப்பனம் கண்டு காலையிலே அதை மறந்து விட்டான். தான் கண்ட சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும் தனக்கு எடுத்துக் கூறுமாறு எல்லா அறிஞர்களுக்கும், மந்திரவாதிகளுக்கும் கட்டளையிட்டான். ஒருவராலும் அது கூடவில்லை. யூதா தேசத்திலிருந்து

சிறைபிடிக்கப்பட்ட தானியேல் என்பவன் சொப்பனத்தையும் அதன் அர்த்தத்தையும் ராஜாவுக்கு கூறினான்.

## சொப்பனம்

ராஜா ஒரு சிலையை கண்டான். அதன் தலை பொன்னும், மார்பும் புயங்களும் வெள்ளியும், வயிறும் தொடையும் வெண்கலமும், கால்கள் இரும்பும், பாதங்கள் பாதி இரும்பும் பாதி களிமண்ணு மாயிருந்தது. அப்போது கையால் பெயர்க்கப்படாத ஓர் கல் உருண்டு வந்து அந்த சிலையை நொறுக்கிப் போட்டது. சிலையை மோதின கல்லோவெனில் ஒரு பெரிய பர்வதமாகி பூமியை நிரப்பிற்று.

## தானியேலின் விளக்கம்

தேவன் தானியேலுக்கு அந்த சொப்பனத்தையும் அதன் அர்த்தத்தையும் வெளிப்படுத்தினார். தானியேல் அதை ராஜாவுக்கு கீழ்க்கண்டவாறு அறிவித்தான்.

"ராஜாவே நீர் ராஜாதி ராஜாவாயிருக்கிறீர். பரலோகத்தின் தேவன் உமக்கு ராஜரீகத்தையும் பராக்கிரமத்தையும் வல்லமையையும் அருளினார். பொன்னான அந்த தலை நீரே. உமக்குப் பிறகு உமக்குக் கீழ்த்தரமான வேறொரு ராஜ்யம் தோன்றும்; பின் பூமியை எல்லாம் ஆண்டு கொள்ளும் வெண்கலமான வேறு ராஜ்யம் ஒன்று எழும்பும். நாலாவது ராஜ்யம் இரும்பைப் போல் உரமாயிருக்கும்..."

## கால் விரல்களைக் குறித்து

"கால்விரல்கள் பாதி இரும்பும் பாதி களிமண்ணுமாயிருந்தது என்னவென்றால் அந்த ராஜ்யம் ஒரு பங்கு உரமும் ஒரு பங்கு நெரிசலுமாயிருக்கும்... அந்த (பத்து விரல்களாகிய) ராஜாக்களின் நாட்களிலே, பரலோகத்தின் தேவன் என்றென்றைக்கும் அழியாத ஒரு ராஜ்யத்தை எழும்பப் பண்ணுவார். அந்த ராஜ்யம் வேறே ஜனத்துக்கு விடப்படுவதில்லை; ஒரு கல் கையால் பெயர்க்கப்படாமல் மலையிலிருந்து பெயர்ந்து, உருண்டு வந்து இரும்பையும்

வெண்கலத்தையும், வெள்ளியையும், பொன்னையும் நொறுக்கினதை நீர் கண்டீரே, அப்படியே அது அந்த ராஜ்யங்களையெல்லாம் நொறுக்கி, நிர்மூலமாக்கி, தானோ என்றைக்கும் நிற்கும். இனிமேல் சம்பவிக்கப் போகிறதை மகாதேவன் ராஜாவுக்கு தெரிவித்திருக்கிறார்; சொப்பனமானது நிச்சயம், அதின் அர்த்தம் சத்தியம் என்றான்" - (தானி. 2 : 37 - 45). இங்கே வரும்கால ராஜ்யங்களைக் குறித்த தேவ திட்டங்களை கர்த்தர் வெளிப்படுத்தியிருப்பதைப் பார்க்கிறோம்.

## தானியேலின் தரிசனம்

வருங்கால ராஜ்யங்களைக் குறித்த இதே கருத்துக்கள் தானியேலுக்கு நான்கு மிருகங்களின் தரிசனம் மூலம் வெளிப்படுத்தப்பட்டது. (தானி. 7 அதி) தானியேல் கண்ட சிங்கம் பாபிலோனையும், கரடி மேதிய பெர்சியாவையும், சிவிங்கி கிரேக்கத்தையும், வேறுபட்ட மிருகம் ரோம ராஜ்யத்தையும் குறிக்கிறது. சிலைத் தரிசனத்தில் காணப்பட்ட 10 விரல்களுக்கு சரியாக. நான்காம் மிருகத்தில் பத்து கொம்புகள் காணப்படுகிறது. அந்த பத்து கொம்புகள் அந்த ராஜ்யத்தில் எழும்பும் பத்து ராஜாக்களென்று தானி 7:24 ,25 -ல் விளக்கப் படுகிறது.

## அலெக்ஸாண்டரைக் குறித்த தரிசனம்

தானியேல் மேலும் இரண்டு கொம்புள்ள ஆட்டுக் கடா, ஒரு கொம்புள்ள வெள்ளாட்டுக்கடா ஆகியவற்றின் தரிசனத்தை கண்டான். இரண்டு கொம்புள்ள ஆட்டுக்கடா மேதிய பெர்சியாவை குறிக்கிறது. அந்த ராஜ்யத்தின் வீழ்ச்சியைக் குறித்து தானி. 8 : 5 - 8 வசனங்களில் காணலாம். "நான் அதை (ஆட்டுக்கடாவை) கவனித்துக் கொண்டிருக்கையில் இதோ மேற்கிலிருந்து ஒரு வெள்ளாட்டுக்கடா (அலெக்சாண்டர்) நிலத்தில் கால் பாவாமல் தேசத்தின் மீதெங்கும் சென்றது; அந்த வெள்ளாட்டுக்கடாவின் கண்களுக்கு நடுவே விசேஷித்த ஒரு கொம்பு இருந்தது... அது ஆட்டுக்கடாவை முட்டி அதின் இரண்டு கொம்புகளையும் முறித்துப் போட்டது. அப்பொழுது வெள்ளாட்டுக்கடா மிகுதியான பெலன் கொண்டது. அது பெலங் கொண்டிருக்கையில் அந்த பெரிய கொம்பு முறிந்து போயிற்று.

## அலெக்ஸாண்டரின் மரணத்தைக் குறித்து

வெள்ளாட்டுக்கடாவின் ஒற்றை கொம்பு முறிந்து போவது அலெக்ஸாண்டரின் மரணத்தை குறிக்கிறது. முறிந்த கொம்பின் ஸ்தானத்தில் 4 கொம்புகள் முளைத்தெழும்புவது அலெக்ஸாண்டரின் மரணத்துக்குப்பின் அவனுடைய நான்கு ஜெனறல்களான செலூக்கஸ், டோலமி லிசிமாக்கஸ், சிசாண்டர் ஆகியோர் தேசத்தை தங்களுக்குள்ளே பங்கிட்டுக் கொள்வதை குறிக்கிறது. (தானி. 8:20 -25)

## தேவ திட்டங்களின் செயல்பாடுகள்

தேவனால் வெளிப்படுத்தப்பட்ட மேற்கூறிய திட்டங்கள் வரலாற்றில் நிறைவேறிக் கொண்டிருப்பதை காணமுடிகிறது.

1. பாபிலோனிய சாம்ராஜ்யம் B.C 612 ல் ஸ்தாபிக்கப்பட்டு B.C 539-ல் முடிவடைந்தது.

2. மேதிய பெர்சியா B.C 539-ல் ஸ்தாபிக்கப்பட்டு B.C 333-ல் முடிவடைந்தது.

3. கிரேக்க ராஜ்யம் B.C 333-ல் ஸ்தாபிக்கப்பட்டு B.C 175 வரை நீடித்தது.

4. ரோமப் பேரரசு B.C 63-ல் ஸ்தாபிக்கபட்டு கிபி 476 வரை நீடித்தது.

## மேலும் அமையவிருக்கும் ராஜ்யங்கள்

1. சிலைத் தரிசனத்தில் கண்ட 10 விரல்களும் தானியேலுக்கு காண்பிக்கப்பட்ட வேறுபட்ட மிருகத்தில் காணப்பட்ட 10 கொம்பு களும் சுட்டிக்காட்டுவது பத்து ராஜ்யங்களின் கூட்டமைப்பு ஆகும்.

இந்த பத்து ராஜாக்களின் கூட்டமைப்பைக் குறித்து வெளி. 13 : 1 - 2; 5 - 7 வசனங்களிலும் வெளி. 17 : 3; வெளி. 17 : 12 - 14 வசனங்களிலும் வாசிக்கலாம்.

இது அந்திக்கிறிஸ்துவின் ஆட்சி காலத்தில் ஏற்பட இருக்கும் ராஜ்ய அமைப்பாகும்.

2. வெளிப்படுத்தப்பட்ட தேவ திட்டங்களின்படி மேலும் ஸ்தாபிக்கப் பட இருக்கும் ராஜ்யம் 'கல்' என்ற இயேசுவின் ராஜ்யமாகும்.

அந்திக்கிறிஸ்துவின் ஆட்சியின் முடிவில் இயேசு தமது இரண்டாம் வருகையில் (கையால் பெயர்க்கப்படாத கல் மலையிலிருந்து பெயர்ந்து வருவது) அந்திக் கிறிஸ்துவின் ஆட்சியை முறியடித்து தமது ஆயிர வருட ஆட்சியை ஸ்தாபிப்பார்.

## குறித்த காலத்தில் நிறைவேறும்

வெளிப்படுத்தப்பட்ட தேவ திட்டங்களில் நடந்தேறிய நிகழ்ச்சிகளைப் போல இனி நடக்கவிருக்கும் மேற்கூறிய இரு நிகழ்ச்சிகளும் குறித்த காலத்தில் நிறைவேறுவதற்கான அறிகுறிகள் நடந்து கொண்டிருக்கிறது.

## எருசலேம் தேவாலயம் மீண்டும் கட்டப்படுதல்

சிறைபிடிக்கப்பட்ட யூதர்கள் பாபிலோனிய ஆட்சிக்குப் பின் மேதிய பெர்சியாவால் ஆளப்பட்டார்கள் (கி.மு. 539 - 333). தேவன் பெர்சிய மன்னனான கோரேசின் இருதயத்தை ஏவின படியால் அவன் எருசலேம் தேவாலயத்தை மீண்டும் கட்ட ஆணை பிறப்பித்தான். கோரேஸ் தன் ஆணையில், " தேவாலயமானது பலி செலுத்தப்பட்டு வந்த ஸ்தானத்திலே கட்டப்படக்கடவது, அதின் அஸ்திபாரங்கள் பலமாயிருப்பதாக, ...அதற்கு செல்லும் செலவு ராஜாவின் அரண்மனையிலிருந்து கொடுக்கப்படுவதாக..."என்று கூறியிருந்தான். (எஸ்றா 6 :1 -3). தேவனே இவையனைத்தையும் செயல்படுத்துகிறார் என்பதை இங்கு காண்கிறோம்.

## யூதர்கள் திரும்பிச் சென்றார்கள்

கோரேசின் ஆணைப்படி கி.மு 536 -ல் ஒரு கூட்டம் யூதர்கள் செருபாபேலோடு எருசலேமுக்கு சென்றார்கள். ஆலயம் கட்டிமுடிந்து கி.மு. 516-ல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அதன்பின் கி.மு 459 -ல்

எஸ்றாவோடும், கி.மு 445-ல் நெகேமியாவோடும் யூதர்கள் எருசலேமுக்கு திரும்பி வந்தார்கள்.

## மறுபடியும் தொழுகை

எருசலேம் தேவாலயத்தில் மறுபடியும் தொழுகை ஆரம்பமானது. யூதர்களின் கடைசி தீர்க்கத்தரிசி மல்கியாவாகும். அவர் கி.மு. 331-ல் தன் 93-வது வயதில் மரித்தார்.

## பழைய ஏற்பாட்டு புத்தகங்கள் (கி.மு. 331 -க்கு முன்)

கி.மு. 331-க்கு முன் பழைய ஏற்பாட்டு புத்தகங்கள் அனைத்தும் எழுதப்பட்டு விட்டன. அவையாவும் எபிரேய மொழியில் எழுதப்பட்டன. பழைய ஏற்பாட்டு தீர்க்கத்தரிசிகள் கூறியிருந்த வண்ணம் யூதர்கள் தங்களை விடுவிக்க ஒரு மேசியா வருவாரென காத்திருந்தார்கள்.

## பஞ்சாகமங்கள் கிரேக்க மொழியில்

B.C 332 -ல் மகாஅலெக்ஸாண்டர் பாலஸ்தீனாவுக்கு படையெடுத்து வந்தான். தீர்க்கத்தரிசனங்களில் அவனைக்குறித்து சொல்லப்பட்டிருந்த படியால் யூதர்கள் அவனை வரவேற்றார்கள். அலெக்ஸாண்டர் யூதர்களை பட்சமாய் நடத்தினான். அவன் ஸ்தாபித்த அலெக்ஸாண்டிரியா பட்டணத்தில் யூதர்களை குடியேறப் பண்ணினான். அலெக்ஸாண்டரின் மரணத்துக்குப் பின் எகிப்தில் ஆட்சிபுரிந்த டோலமி பிலடெல்பஸ் என்பவன் (கி.மு. 284 - 247) எருசலேமில் பிரதான ஆசாரியனாயிருந்த எலியாசருக்கு கடிதம் அனுப்பி எருசலேமிலிருந்து 70 யூத பண்டிதர்களை எகிப்துக்கு வரவழைத்தான். அவர்கள் மோசேயின் பஞ்சாகமங்களை எபிரேய மொழியிலிருந்து கிரேக்க மொழியில் மொழிபெயர்த்தார்கள் இது செப்டஜின்ட் மொழிபெயர்ப்பு என்று அழைக்கப்படுகிறது.

# பாபிலோனிய இரகசியம் பெர்கெமுவுக்கு

பாபிலோனியாவில் சாத்தானால் ஏற்படுத்தப்பட்ட பாபிலோனிய மதத்தைப் பற்றி முன்னால் பார்த்தோம். பாபிலோனிய மதத்தின் பிரதான ஆசாரியர்களுக்கு 'போந்திப்' என்ற பட்டம் கொடுக்கப்பட்டிருந்தது. பாபிலோனிய சாம்ராஜ்யத்தின் கடைசி ராஜாவான பெல்ஷாத்சார் அம்மதத்தின் போந்திப் ஆயிருந்தான். அவன் கொல்லப்பட்ட பின்பும் பாபிலோனியா இம்மதத்தின் தலைநகராயிருந்தது. மேதிய பெர்சியா ராஜாக்கள் அதின் போந்திப்புகளாயிருந்தார்கள். மேதியா பெர்சியா ஆட்சியின் வீழ்ச்சிக்குப்பின் பாபிலோனிய மதத்தின் ஆசாரியர்கள் (புரோகிதர்கள்) சொரூபங்களுடன் பெர்கெமுவுக்கு சென்றுவிட்டார்கள். இவ்விதமாய் பெர்கெமுவில் சாத்தானின் சிங்காசனம் ஸ்தாபிக்கப்பட்டது (வெளி. 2 : 13).

## பாபிலோனிய இரகசியம் ரோமுக்கு

கி.மு. 133-ல் பெர்கெமுவின் ராஜாவும் பிரதான ஆசாரியனும் (போந்திப்) ஆன அத்தலூஸ் என்பவன் இறந்த பின் பாபிலோனிய மதத்தின் தலைநகர் ரோமுக்கு மாற்றப்பட்டது. இட்றஸ்கன் என்பவன் பெர்கெமுவிலிருந்து ரோமுக்குச் சென்று பாபிலோனிசத்தை தீவிரப்படுத்தி ஒரு போந்திப்பை ஏற்படுத்தினான். இவ்வாறு ரோம் பாபிலோனிய இரகசியத்தின் தலைமை இடமாயிற்று.

## ரோம சக்கிரவர்த்திகள் போந்திப் ஆதல்

கி.மு. 74-ல் இட்றஸ்கனின் பின்னடியார் என்ற நிலையில் ஜூலியஸ் சீசர் போந்திப் ஆனான். கி.மு. 63-ல் அவன் பாபிலோனிய மதத்தின் உயர்ந்த பிரதான ஆசாரியன் என்ற நிலையில் (Supreme Pontiff) உயர்த்தப்பட்டான். இவ்விதமாய் ரோம சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியான ஜூலியஸ் சீசர் பாபிலோனிய மதத்தின் (Pontifex Maximus) போந்திபெக்ஸ் மாக்சிமஸ் ஆனான். அதுமுதல் எல்லா ரோம சக்கரவர்த்திகளும் பாபிலோனிய மதத்தின் சுப்றீம் போந்திப் அல்லது Pontifex Maximus என்ற பட்டம் அணிந்து கொண்டார்கள். இவ்வாறு ரோம் பாபிலோனிய இரகசியத்தின் மையமாயிற்று.

அதிகாரம் 8

# பெர்சியாவில் சுராஷ்ட்ர மதம்

## ஸ்தாபகர்

சுராஷ்டிரமதம் பெர்சிய நாட்டில் சுராஷ்டர் என்பவரால் ஸ்தாபிக் கப்பட்டதாகும். சுராஷ்டிர மதத்தின் மதநூல் செண்ட் அவஸ்தா (Zendavesta)அல்லது அவஸ்தா (Avesta) என்று அழைக்கப்படுகிறது.

## சுராஷ்டிரருக்கு முன்

சுராஷ்டிரருக்கு முன் பொர்சியாவில் பல வழிபாடுகள், பூஜை முறைகள், பல தெய்வ வழிபாடுகள், ஆசாரங்கள் ஆகியவை எங்கும் இருந்து வந்தது. அந்நாட்களின் குழப்பமான நிலமைகள் குறித்து அவஸ்தாவின் முதல் அதிகாரத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். குழம்பிப் போன மனுக்குலம் கடவுளிடம் மனு செய்து தீமைகளிலிருந்து தங்களை விடுவிக்க ஒரு ரட்சகனை அனுப்ப வேண்டுமென்று கேட்டுக் கொண்டதின் பேரில் சுராஷ்டிரர் பூமிக்கு அனுப்பப்பட்டார் என்பது சுராஷ்டிர மதத்தவர்களின் நம்பிக்கை.

## சுராஷ்டிரரின் காட்சி

சுராஷ்டிரர் குடும்ப வாழ்க்கை செய்தார் . அவருக்கு மூன்று மனைவிகளும் பிள்ளைகளும் இருந்தார்கள். தன் 30 -வது வயதில் கடவுளின் வார்த்தை அவருக்கு உண்டானது. மேலும் அவருக்கு ஒரு

ஆற்றின் கரையில் ஒரு காட்சி கிடைத்தது. ஒஹமானா (Vohamana) என்ற தூதன் தோன்றி ஒரே கடவுள் தான் உண்டு, அவர் அகுரமாஸ்டா (Ahuramazda) என்றும் சுராஷ்டிரர் அவர் தீர்க்கதரிசியாக பணியாற்ற வேண்டும் என்றும் கூறினார். சுராஷ்டிரருக்கு மற்றும் பல காட்சிகளும் உண்மை விளக்கங்களும் கிடைத்ததாக கூறப்பட்டிருக்கிறது.

## கொள்கைகளின் வெற்றி

ஆரம்பத்தில் அவர் போதனை வெற்றி பெறவில்லை. ஆனால் அவருடைய ஒரு உறவினரான மைதியோமா என்பவரை (Maidhyomah) தன் பக்கம் இழுத்துக் கொண்டார். அவர்கள் இருவருமாக பேக்ட்ரியா (Bactria) நாட்டு மன்னரிடம் சென்று அவருடைய குதிரையை சுகப்படுத்தினார்கள். அதன் பின் மன்னனின் உதவியோடு தங்கள் கொள்கைகளைப் பரப்பினார்கள். சில சமயங்களில் மதத்தை பரப்பு வதற்காக புனிதப்போர்கள் செய்தார்கள். சுராஷ்டிரர் தன் 77 -ஆவது வயதில் ஒரு போர் வீரனால் கொல்லப்பட்டார்.

## ஒரே கடவுள் - (ஏக தெய்வம்)

சுராஷ்டிரர் பல தெய்வ கொள்கையையும், பல தேவதைகளை வணங்குவதையும் கண்டித்தார். அகுரமாஸ்டாவே ஒரே கடவுள் என்று போதித்தார். அவர் சருவ ஞானியும் நல்லவருமாகும். உலகத்தை படைத்தவரும் ஆளுபவரும் அவரே. அகுர மாஸ்டாவுக்கு எதிரியான வன் அக்ரிமான் என்றும் முடிவில் அவனுடைய ராஜ்யம் அழிக்கப்படும் என்றும் நம்பினார்கள்.

## சுராஷ்டிரரின் முக்கிய போதனை

1. நல்ல சிந்தனைகள்
2. நல்ல வார்த்தைகள்
3. நல்ல செயல்கள்

கடவுளை மனிதனால் அறிந்து கொள்ள முடியாது . உலகத்தில் தீய ஆவிகளுக்கும், நல்ல ஆவிகளுக்கும் தம்மில் போராட்டம் உண்டு.

மரணத்துக்குப் பின் ஒரு வாழ்க்கை உண்டு. நன்மை செய்தவர்கள் மோட்சத்திலும் தீமை செய்தவர்கள் நகரத்திலும் அனுப்பப்படுவார்கள். ஆனால் நரகம் நித்தியமல்ல . முடிவில் எல்லோரும் சந்தோஷத்துக்கு வருவார்கள். தேவ தூதர்கள் தேவனை சூழ அவருடைய ஆணையை எதிர்பார்த்து காத்திருப்பார்கள். அக்கினி புனிதமாக கருதப்பட்டது. மனிதன் பிறப்பில் பாவம் இல்லாதவன். நன்மை செய்யவும் தீமை செய்யவும் அவனுக்கு உரிமை உண்டு. ஆனால் அதன் பலன் பின்னால் அனுபவிப்பான்.

## தொழுகை

சுராஷ்டிரியன் தொழுகையில் முக்கியமானது அகுர மாஸ்டாவிடம் ஏறெடுக்கும் ஜெபங்களே. சன்மார்க்க வாழ்க்கை நடத்த உதவிடும்படி அகுரமாஸ்டாவிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். பலி செலுத்துவ தில்லை. ஆனால் புனிதமான தீய்க்கு (அக்கினி) சந்தனக் கட்டைகள் அர்ப்பிப்பதும் புனித தீ அணையாமல் வளர்ப்பதும் உண்டு. தீ கோவில்களும் உண்டு. பூசாரிகள் நெருப்பை வளர்க்கிறார்கள். பக்தர்கள் புனித சாம்பல் பெற்றுக் கொள்கிறார்கள்.

## பிணம் கழுகுக்கு

பிணத்தை எரிப்பதோ, புதைப்பதோ இல்லை. ஒதுக்கப்பட்ட மேடான இடங்களில் அதாவது அமைதியின் சிகரம் என்று அழைக்கப் படும் (Tower of Silence) இடத்தில் பிணங்களை கழுகுகளுக்கு வைத்து விடுகிறார்கள். எலும்புகளை சில தினங்களுக்குப் பின் பக்கத்தில் அமைக்கப்படும் குழிகளில் போடுகிறார்கள்.

## பெர்சிய ஆட்சியில் தானியேல்

நேபுகாத் நேச்சார் ராஜாவால் சிறைபிடிக்கப்பட்ட யூத ஜனங்கள் கி.மு 7 -ம் நூற்றாண்டுக்குப் பின் பாபிலோனியா, மேதிய, பெர்சியா ஆகிய ஆட்சிகளுக்கு உட்பட்டிருந்தார்கள். அவர்கள் ஏக தெய்வ கொள்கையை கடைப்பிடித்தவர்கள் ஆயிருந்தார்கள்.

யூதா தேசத்திலிருந்து கொண்டுவரப்பட்ட தானியேல் என்பவன் பாபிலோனிய, மேதிய - பெர்சிய ஆகிய ராஜாக்களின் நாட்களில் மிகவும் உயர்ந்த ஸ்தானத்தில் வைக்கப்பட்டிருந்தான். பெர்சிய ராஜாவான தரியுவின் ஆட்சி காலத்தில் சில பெர்சிய பிரபுக்களின் சூழ்ச்சியால் தானியேல் சிங்கங்களின் குகையில் போடப்பட்டான். தானியேல் இடைவிடாமல் சேவிக்கிற தேவன் அவனை சிங்கங்களின் வாயிலிருந்து தப்புவித்தார். இதைக் கண்ட தரியு ராஜா அவன் தேசத்தாருக்கு கீழ்கண்டவாறு கட்டளை அனுப்பினான்.

## தரியூவின் ஆணை

ராஜாவாகிய தரியு தேசமெங்கும் குடியிருக்கிற எல்லா ஜனங்களுக்கும், ஜாதியாருக்கும், பாஷைக்காரருக்கும் எழுதுகிறது என்னவென்றால் "உங்களுக்கு சமாதானம் பெருகக் கடவது. என் ராஜ்யத்தின் ஆளுகைக்குள் எங்குமுள்ளவர்கள் யாவரும் தானியேலின் தேவனுக்கு முன்பாக நடுங்கி பயப்பட வேண்டும் என்று என்னால் தீர்மானம் பண்ணப்படுகிறது. அவர் ஜீவனுள்ள தேவன். அவர் என்றென்றைக்கும் நிலைத்திருக்கிறவர். அவருடைய ராஜ்யம் அழியாதது. அவருடைய கர்த்தத்துவம் முடிவு பரியந்தம் நிற்கும். தானியேலை சிங்கங்களின் கைக்கு தப்புவித்த அவரே தப்புவிக்கிறவரும், ரட்சிக்கிறவரும் வானத்திலும், பூமியிலும் அடையாளங்களையும், அற்புதங்களையும் செய்கிறவருமாய் இருக்கிறார்" என்று எழுதினான். *(தானி.6: 25 -27).*

## யூதர்களின் ஏகதெய்வக் கொள்கையின் தாக்கம் ?

பெர்சியாவில் வாழ்ந்த யூதர்களும் அவர்களுடைய ஏகதெய்வ கொள்கையும் பெர்சியாவில் ஏக தெய்வ கொள்கை வளர்ச்சி அடைவதற்கு ஏற்பட்ட காரணங்களில் ஒன்றாக இருக்க வாய்ப்பு உண்டென்று டாக்டர் அலெக்ஸாண்டர் ஹாரிஸ் என்பவர் தம் Developments of Civilization and Religion in India and its influence என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

## சுராஷ்டிர மதத்தின் நலிவு

நாளடைவில் பெர்சியாவில் சுராஷ்டிர மதம் நலிவடைந்து தீ வழிபாடு வளர்ச்சியடைந்தது. முன்பு ராஜா எரிந்து கொண்டிருக்கும் பலிபீடத்தின் முன்னால் நின்று கொண்டு அகூரமேஸ்டாவிடம் ஜெபிப்பதையும் பின் நாட்களில் ராஜா அக்கினி தேவதையை நேரடியாக வழிபடுவதையும் சுட்டிக்காட்டும் படங்கள் பொறிக்கப்பட்ட அனேக நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவைகளிலிருந்து பெர்சியா நாட்டில் தீ வழிபாடு முக்கியமாக இருந்ததென்று அறிய முடிகிறது.

அதிகாரம் 9

# இந்தியாவில் சமண, பவுத்த மதங்கள்

இந்தியாவில் திராவிட மக்கள் தங்கள் தேவர்களுக்கு ஆடுமாடு ஆகிய மிருகங்களை பலி செலுத்தி வந்தார்கள். மிருக ஜீவன்களை கொல்லுவதை பார்த்து மனதுருகிய நல்லுள்ளம் படைத்த திராவிட மக்கள் இவைகளைக் குறித்து அதிலும் சிறப்பாக 'உயிரை'க் குறித்து சிந்திக்கத் தொடங்கினார்கள். அத்தகைய சிந்தனைகளின் பயனாக ஏற்பட்ட இரு மதங்களே சமண மதமும் பவுத்த மதமும் ஆகும்.

## சமண பவுத்த மதங்களின் பிறவிச்சுழற்சிக் கொள்கை

பிறவிச் சுழற்சிக் கொள்கை என்பது திராவிட மதங்களான சமணம், பவுத்தம் ஆகிய மதங்களின் கொள்கை ஆகும்.

அன்று கடவுள் பெயரில் ஆயிரக்கணக்கான உயிரினங்கள் பலியிடப்பட்டு வந்தது. மிருகங்கள் துடித்துச் சாவதை பார்த்த நல்லுள்ளம் படைத்தவர்கள் உலகின் உயிரினங்களைக் குறித்து சிந்திக்கத் தொடங்கினார்கள். மிருகங்களிலும், மனிதனிலும், ஊரும் பிராணிகளிலும், தாவரங்களிலும் 'உயிர்' இருப்பதை உணர்ந்தார்கள். இவை எல்லாவற்றிலும் காணப்படும் 'உயிர்' - 'உடல்' ஆகியவற்றை அவர்களால் கண்டு கொள்ள முடிந்தது.

## தவறான முடிவு

அன்று அவர்கள் அறிவின்படி உயிரும் உடலும் உள்ள அனைத்து

ஜீவிகளும் ஒரே நிலையில் இருப்பவை என்று எண்ணிக் கொண்டார்கள். அந்த அடிப்படையில் மனிதர்களையும் மற்று உயிர் இனங்களையும் ஒரே நிலையில் கொண்டார்கள். மட்டுமல்ல ஜீவிகளின் உயிர் அழியாதது என்றும் உடல் அழிந்தபின் அதின் உயிர் மற்றொரு உடல் கொள்கிறது என்றும் அது ஒவ்வொரு பிறவிகளிலும் சுழற்சி முறையில் இயங்கிக் கொண்டே இருக்கிறது என்றும் விளக்கினார்கள்.

## கர்ம்ம மார்க்கம்

ஒரு ஜன்மத்தில் மனிதனாய் பிறக்கிறவன் அவன் கிரியைகளின்படி அதாவது அவனுடைய கர்ம்மங்களின்படி (செயல்பாடுகள்) அடுத்த ஜன்மத்தில் மிருகமாகவோ மற்றொரு பிராணியாகவோ பிறக்கக்கூடும் என்று விளக்கப்பட்டது. கர்ம்ம, மார்க்கத்துக்கு அதினால் முக்கியத் துவம் அளிக்கப்பட்டது. உயிரினங்களை கொல்லுவது தவிர்க்கப்பட வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது.

## ஆன்மாவைக் குறித்த அறிவு

புத்த சமணர்கள் மனிதனின் 'ஆன்மா' என்பதை உயிர் நிலையில் எண்ணினார்கள். மனிதனுக்கு மட்டுமே ஆத்துமா உண்டு என்றும் மனிதனின் ஆறாவது அறிவுக்கு அதாவது பகுத்தறிவுக்கு ஆன்மாவே காரணம் என்றும் ஆன்மா பேரான்மாவான இறைவனால் இயங்கு கிறதென்றும், அன்று அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. அவர்கள் மதங்கள் கடவுள் கொள்கை இல்லாத நாத்திக மதங்களாயிருந்தது.

## ஜாதிக் கொள்கைக்கு பயன்படுத்தல்

சமண பவுத்த மதங்களின் பிறவிச் சுழற்சிக் கொள்கையை பிற்காலங்களில் ஆரிய பிராமணர்கள் எடுத்துக் கொண்டு அதை தங்கள் ஜாதிக் கொள்கைக்கு அனுகூலமாய் மாற்றி பயன்படுத்திக் கொண்டார்கள்.

# சமண மதம்

## ஸ்தாபகன்

சமண மதத்தை ஸ்தாபித்தவர் வர்த்தமான மகாவீரன் என்று பொதுவாக கருதப்படுகிறது. ஆனால், அவருக்கு முன் வாழ்ந்த ரிஷபதேவன் என்பவன் சமண மதத்தை ஸ்தாபித்தார். மகா வீரர் பின் நாட்களில் அதை விரிவுபடுத்தி நிலைநாட்டினார்.

## வர்த்தமான மகாவீரர்

வர்த்தமான மகாவீரர் பாட்னாவுக்கு 27 மைல் வடக்குள்ள வைசாயி என்ற இடத்தில் சித்தார்த்தனின் மகனாக பிறந்தார்.

## காலம் (கி.மு. 659 - 485)

வர்த்தமானர் யசோதை என்ற ஸ்திரீயை மணந்தார். அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. தன் முப்பதாவது வயதில் வர்த்தமான மகாவீரர் வீட்டை விட்டார். பன்னிரண்டு வருடங்கள் தவம் புரிந்தார். நாற்பத்திரண்டு வயதில் உண்மை வெளிப்பாடு அடைந்து தத்துவங்களை போதிக்க தொடங்கினார். தன் 84-ம் வயதில் “பாவா”என்ற இடத்தில் காலமானார்.

## போதனைகள்

சமணமத போதகர்கள் தீர்த்தங்கரர் என்று அழைக்கப்பட்டார்கள். மகாவீரர் 24 -ஆவது திர்த்தங்கரர் ஆகும். ரிஷப தேவன் முதலாம் தீர்த்தங்கரர். மகாவீரர் புத்தரை விட வயது மிகுந்தவரும் புத்தரின் காலத்தில் வாழ்ந்தவரும் ஆவார். அவர் நாத்திக அடிப்படையில் போதித்தார்.

## நாத்திக அடிப்படை

மனிதன் தன் உலக கட்டுகளிலிருந்தும் துன்பங்களிலிருந்தும் விடுவிக்கப்பட வேண்டும். கடவுளை வழிபடுவதால் இதை அடைய முடியாது. மாறாக, நல்ல சன்மார்க்க நெறியில் நடப்பதால் அடைய

முடியும். உலகம் காலாகாலமாக தானாகவே இயங்குகிறது. அதை ஒருவரும் படைக்கவில்லை. பாதுகாத்து நடத்துவதும் இல்லை. மனிதனுக்கு சன்மார்க்க வாழ்க்கையும் அஹிம்சை கடைப்பிடிப்பதுமே மிக முக்கியமானவைகள்.

### நூல்கள்

மகாவீரரின் காலம் மட்டும் நூல்கள் எழுதப்படவில்லை. கி.மு. 454-ல் வல்லாபியில் கூடிய கூடுகையில் 84 நூல்கள் அங்கீகரிக்கப் பட்டது.

### கொள்கை

ஆன்மா அழியாதது. (ஆன்மாவை அவர்கள் உயிர் என கருதினர்) இந்த உலகத்தில் செய்யப்படும் கருமங்களை ஒட்டி ஆன்மா மறு பிறவி பெறுகிறது. சகல கட்டுகளும் அறுபட்ட பின் ஆன்மா முக்தி நிலை அடைகிறது.

### சமண மதம் பரவுதல்

தென் இந்தியா முழுவதும் ஜெயின மதம் (சமண மதம்) பரவி இருந்தது. ஆர்காடு, மணார்குடி, மதுரை, திருச்சி, கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவில், சிதறால் மேலும் பல இடங்களில் ஜெயின கோவில்கள் காணப்படுகிறது. புத்த மதத்தைப் போல சமண மதத்தில் அதிகமான மிஷினெறிகள் இல்லாததால் இம்மதம் வேறு தேசங்களுக்கு பெருமளவில் எடுத்துச் செல்லப்படவில்லை. சமணர் களுக்கு ஜாதிக் கொள்கை இல்லை. ஆனால், பிந்திய நாட்களில் பல ஜெயின கோயில்களில் பிராமணர்கள் பூசாரிகளாக வைக்கப்பட்டார்கள்.

## புத்த மதம்

### ஸ்தாபகர்

புத்த மதத்தின் ஸ்தாபகர் கௌதம புத்தர் ஆகும். சுத்தோதனன் என்பவருக்கும் மாயா தேவிக்கும் மகனாக பிறந்தவர் சித்தார்த்தர்.

சித்தார்த்தர் பிறந்த ஏழாம் நாள் அவர் தாய் இறந்தார். தாயின் மரணத்திற்குப் பின் தாயின் சகோதிரியான கௌதமி என்பவள் சித்தார்த்தனை வளர்த்தாள்.

## காலம் (கி.மு. 563 - 483)

சித்தார்த்தனன் யசோதரை என்பவளை மணந்தார். அவர்களுக்கு பிறந்த குழந்தைக்கு ராகுல் என்று பெயரிட்டனர். ராகுல் பிறந்த ஏழாம் நாள் சித்தார்த்தன் தன் வீட்டை விட்டு புறப்பட்டார்.

## சத்தியத்தை தேடினார்

உண்மையை அறிய வைசாலியில் ஒரு யோகியுடன் பயிற்சி பெற்றார். அங்கே திருப்தி அடையாததால் மற்றொருவரிடம் யோகப் பயிற்சி கற்றுக் கொண்டார். அதிலும் திருப்தி அடையாமல் குரு வேலம் என்றஇடத்தில் சென்று கடும் தவம் மேற்கொண்டார். தவத்தை குறித்து அவர் இவ்வாறு கூறுகிறார்.

"என் சரீரம் பெலவீனத்தின் கொடு முடியை எட்டியது. என் அவயவங்கள் எண்பது வயதான கிழவனுடைய சரீர உறுப்புகளை போலாயிற்று. ஆகாரம் புசிக்காததால் என் முதுகெலும்புகள் பாதங்களின் தோலோடு ஒட்டிக் கொண்டது. ஆனால் தவத்தினால் எனக்கு திவ்ய தரிசனம் கிடைக்கவில்லை. உண்மை ஞானம் பெற்றுக்கொள்ளும் வழி வேறு ஏதாகிலும் உண்டோ என சிந்திக்கலா யினேன்.... எனவே நான் பருப்பும்,சோறும் உண்ண ஆரம்பித்தேன். அன்று என்னிடம் ஐந்து சன்னியாசிகள் இருந்தார்கள். நான் புசிக்க ஆரம்பித்த போது அவர்கள் என்னை விட்டு பிரிந்து போனார்கள்".

## ஞானம் பெற்றுக் கொண்டார்

தன் 29- வது வயதில் வீட்டை விட்ட சித்தார்த்தன் 36-ம் வயதில் போதி மரத்தின் கீழ் இருந்து ஞானத்தை பெற்றுக் கொண்டார். அவர் புத்தராக மாறினார்.

## மரணம்

சுந்தன் என்ற கொல்லன் அளித்த பன்றி சூப்பைக் குடித்த பின் உண்டான சுகவீனத்தால் "சுசீனாரா" என்ற , இடத்தில் வைத்து இரு மரங்களின் இடையில் ஆனந்தன் என்பவன் விரித்து கொடுத்த விரிப்பில் படுத்து மரித்தார்.

## கடைசி வார்த்தைகள்

"ஹந்த தானி பிக்கவோ ஆமந்த யாமி வோ
வய தர்ம்மா சம்காரா, அப்பமூதேனா, சம்பா தேதா"

ஓ சன்னியாசிகளே நான் உங்களோடு யாத்திரை சொல்லுகிறேன். நாகரீகங்களும், நாம் விரும்புவதான சகல பொருட்களும் ஆகிய யாவும் நாசமாகும் தன்மையுடையவைகளே. நீங்கள் கவனமாக முயற்சி செய்து முக்தி அடைந்து கொள்ளுங்கள்.

## த்றிபிடகங்கள்

புத்தமத நூல்களை பேடகம் என குறிக்கும் வகையில் த்றிபிடகங்கள் என அழைக்கிறார்கள். அவையாவன :- வினையபிடகம், சுத்தபிடகம், அபிதர்ம்ம பிடகம் ஆகியவை ஆகும்.

## கொள்கைகள்

ஆரம்ப நாட்களில் புத்த மதம் நாத்திக கொள்கை உடையதும் ஆனால் சன்மார்க்க நெறியுடையதுமான மதமாய் இருந்தது. எட்டு விதமான கட்டுபாடுகளை குறித்து புத்த மதம் போதித்தது.

## எட்டுவித கட்டுபாடுகள்

1. சம்யக்க திருஷ்டி - தூய்மையான பார்வை
2. சம்யக்க சங்கல்பா - தூய்மையான சிந்தை
3. சம்யக்க வாகா - தூய்மையான வார்த்தைகள்
4. சம்யக்க கர்மாந்த - தூய்மையான கிரியை

5. சம்யக்க அஜய்வா - தூய்மையான வாழ்க்கை

6. சம்யக்க வ்யாயாமா - தூய்மையான முயற்சி

7. சம்யக்க ஸ்மிர்தி - தூய்மையான மனக்கருத்து

8. சம்யக்க சமாதி - தூய்மையான மனக் கூர்மை (concentration)

மனிதனின் பிரச்சனைகளுக்கு அவனே காரணம் சீர்திருத்தும்படி வேறொரு சக்தியை நாட தேவை இல்லை. மேற்கூறிய எட்டு வழிகளை கடைபிடித்தால் போதும்.

## மூன்று இரத்தினங்கள் (Triratnas)

புத்த பக்தர்களுக்கு புத்தர் மேல் மாபெரும் மதிப்பு இருந்தது. எனவே, அவரை ஒரு வழிகாட்டியாகவும் பாதுகாவலராகவும் வைத்துக் கொண்டார்கள். மூன்று இரத்தினங்களாவன :-

1. புத்தம் சரணம் கர்ச்சாமி-நான் புத்தரிடம் அடைக்கலம் தேடி செல்லுகிறேன்.

2. தர்மம் சரணம் கர்ச்சாமி-புத்தருடைய தத்துவங்களை தேடிச் செல்லுகிறேன்.

3. சம்கம் சரணம் கர்ச்சாமி-புத்த பிட்சுகளின் சங்கம் நாடி செல்லுகிறேன்.

## நான்கு ஆரிய சத்தியங்கள்
(Four noble truths)

1. துக்க ஆரிய சத்யா - துன்பங்களின் தன்மையை பற்றிய உண்மைகள்.

2. துக்க சமுதாய ஆரிய சத்யா - துன்பங்களின் உற்பத்தியை பற்றிய உண்மைகள்

3. துக்க நிரோத ஆரிய சத்யா - துக்கங்களை களைந்து நிர்வ்வாணத்தை அடைவதை பற்றிய உண்மைகள்.

4. துக்க நிரோத காமினி ப்ரதிபாத் ஆரிய சத்யா - துக்கங்களை நீக்கி நிர்வாண நிலையை (முக்தி) அடைவதற்கான தடைகளை நீக்கும் உண்மைகள்.

## புத்தரின் சூன்ய கொள்கை

சர்வம் துக்கம் துக்கம், ட்சனிகம் ட்சனிகம்
ஸ்வலக்ஷணம், ஸ்வலக்ஷணம் சூன்யம் சூன்யம்

உள்ளும் புறவுமான "ஆந்தரிக ஞானம்" எல்லாம் துக்க மயமும் நொடி பொழுதில் அழிந்து போவதும் ஆகும். அதின் தன்மையினால் மட்டும் அதை அறிந்து கொள்ளக் கூடுமே அல்லாமல் மற்று அடையாளங்களை காண முடியாது. கூர்ந்து கவனிக்கும் கால் எல்லாம் சூன்யம், மாயை மாயை மட்டுமே.

## புத்தருக்கு பின் வாழ்ந்த ஆசாரியர்கள்

நாகசேனம், அஸ்வகோஷன், நாகார்ஜீனன், அஸம்கன், தர்ம்ம கீர்த்தி, திக்நாகன், சங்கபத்திரன் போன்றோர் புத்தருக்குப் பின் வாழ்ந்த ஆசாரியர்கள் ஆகும்.

## முக்கிய நூல்கள்

நாகசேனனின் பிறஸ்னோத்தரி நாகார்ஜுனனின் மார்த்ய மிக தாரிகா யுக்தி சஸ்டிகா போன்ற பல நூல்கள்.

## புத்தமதம் பின் நாட்களில்

பின்நாட்களில் பிராமணர்கள் புத்தமதத்தவரை பாஷாண்டிகள் என கேலி செய்தார்கள். புத்தமதத்தை சீர்குலைக்கும் வகையில் புத்தரை ஒரு அவதாரமாக இந்துமதம் எடுத்துக் கொண்டது.

**அதிகாரம் 10**

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 1)

## அந்நியர்கள் இந்தியாவுக்கு

முன்பு பார்த்தது போல இந்தியாவில் எல்லா இடங்களிலும் திராவிடர்கள் வாழ்ந்து வந்தார்கள். கி.மு 6-ம் நூற்றாண்டிலிருந்து அன்னிய தேசத்தார் இந்தியாவில் நுழைய ஆரம்பித்தார்கள். அதில் முக்கியமானவர்கள் பெர்சியர்கள், கிரேக்கர்கள், ரோமர்கள், சகர்கள், கூஷாணர்கள், கூணர்கள் ஆகியோர் ஆகும்.

### பெர்சியர்கள்

கி.மு 606 முதல் யூதர்கள் பாபிலோனியர்களால் சிறைபிடிக்கப் பட்டதை பார்த்தோம். பாபிலோனிய ஆட்சிக்குப் பின் பெர்சிய மன்னனான கோரேஸ் என்பவன் கி.மு 539 -ல் மேதிய பெர்சிய ஆட்சியை ஸ்தாபித்தான். கி.மு 530-ல் கோரேஸ் இந்தியாவோடு போருக்கு வந்து தோல்வியடைந்தான். ஆனால் தரியூ மன்னன் கி.மு 518-ல் இந்தியாவில் சில பகுதிகளை பிடித்துக் கொண்டான். அகாஸ்வேருவின் நாட்களில் அவன் ராஜ்யத்தின் எல்லை இந்திய தேச மட்டும் இருந்தது.

## அலெக்ஸாண்டர் ஹாரிஸ் கருத்து

பெர்சியர்களில் ஒரு பிரிவினரைக் குறித்து அலெக்ஸாண்டர் ஹாரிஸ் என்பவர் 'The development of civilization and religion in India and its influence of the world society' என்ற நூலில் குறிப்பிட்டுள்ள சில கருத்துக்கள் இங்கு தரப்படுகிறது:

## யோசுவாவின் நாட்களில்

யோசுவா கானானியரோடு யுத்தம் பண்ணும் போது அங்கிருந்து பல ஜாதி மக்கள் துரத்தி விடப்பட்டார்கள். அவ்வாறு துரத்தி விடப்பட்ட ' ஏத்தியர்கள்', பெர்சியாவில் வசித்திருந்தார்கள். முன்பு அவர்கள் இந்திரன், வருணன், மித்திரன் ஆகிய தேவர்களை வழிப்பட்டிருந்தார்கள். பின்பு அவர்களும் பெர்சிய மக்களோடு ஒன்று கலந்து தீ வழிபாட்டை கடைப்பிடித்துக் கொண்டார்கள். அவர்கள் பெர்சியர்களுடன் சேர்ந்து இந்தியாவோடு போர் தொடுத்து இந்தியாவுக்கு நுழைந்தார்கள்.

## பெர்சியர்கள் வருகையால் ஏற்பட்ட விளைவுகள்

பெர்சியர்களின் இந்திய வருகையால் இந்தியாவில் பெரும் விளைவுகள் ஏற்படலாயிற்று. அவர்களின் வருகையால் மேற்கு ஆசியாவிலுள்ள தேசங்களுக்கு இந்தியாவில் நுழைவதற்கான விரிவான பாதை அமைந்து விட்டது. அனேக அண்டை நாட்டார் வடமேற்கு இந்தியாவில் பிரவேசிக்கலாயினர். வந்தேறிய அன்னியரில் சிலர் சிற்றரசுகளை அமைத்தார்கள். வேறு சிலர் திராவிட சிற்றரசர்களின் அவைகளில் அமர்த்தப்பட்டார்கள்.

## தேச துரோக செயல்கள்

இவ்வாறு அமர்த்தப்பட்ட பலர் இந்தியாவில் தேச விரோத செயல்களில் ஈடுபட்டு நாட்டுக்கு தீங்கு விளைவித்தார்கள். மௌரிய வம்சத்தின் கடைசி மன்னன் திராவிட அரசனான பிருகத்ருதா என்பவனாகும். அவன் புஷ்ய மித்திரன் என்ற ஒரு அன்னியனை

(மேற் கூறிய இனத்தவன்) தன் சேனாபதியாக வைத்திருந்தான். அவன் பிரகத்ருதாவை கொன்று சுங்க ஆட்சியை ஸ்தாபித்தான் (கி.மு 187-76).

## கிரேக்கர்கள் இந்தியாவுக்கு வருகை

நேபுகாத்நேச்சார் கண்ட சிலைத் தரிசனத்தின் படி பெர்சியர்களுக்குப் பின் கிரேக்கர்கள் உலக சாம்ராஜ்யத்தை அமைத்துக் கொண்டார்கள். மகா அலெக்ஸாண்டர் கி.மு. 336-ல் தனது வெற்றிப் பயணத்தை ஆரம்பித்தான். அனேக தேசங்களை பிடித்த பின் கி.மு. 326-ல் பெரும் படையோடு இந்தியாவுக்கு வந்தான். வடமேற்கு இந்தியாவில் இருந்த திராவிட சிற்றரசர்களில் ஒருவனான போறஸ் என்பவன் அவனை எதிர்த்தான். ஆனால் தட்சசீலத்தில் இருந்த அம்பி என்ற அன்னியனான தேச துரோகி போறசை தோற்கடிக்க அலெக்ஸாண்டரை அழைத்து வரவேற்றான்.

## அலெக்ஸாண்டர் இந்தியாவில்

அலெக்ஸாண்டர் திராவிட சிற்றரசர்களை தோற்கடித்து இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் தன் ஆட்சியை ஸ்தாபித்தான். அலெக்ஸாண்டரின் ஆட்சி காலத்திலும் அன்னியர்கள் இந்தியாவில் கூட்டமாய் வந்தார்கள். அலெக்ஸாண்டர் இருவருடங்கள் இந்தியாவில் வசித்த பின் கி.மு. 323-ல் பாபிலோனுக்கு சென்று அங்கே மரித்துப் போனான்.

## செலூக்கஸ் நிக்கேட்டர்

அலெக்ஸாண்டரின் மரணத்திற்குப் பின் அவன் ஜெனறல்களில் ஒருவனான செலூக்கஸ் நிக்கேட்டர் என்பவனுக்கு இந்தியா போன்ற தேசங்களின் பொறுப்பு கொடுக்கப்பட்டது. இந்தியாவில் இந்தோ கிரேக்கர்கள் என்று அழைக்கப்பட்ட கலப்பு இனத்தை சேர்ந்தவர்கள் ஏறத்தாழ 200 வருடங்கள் பற்பல இடங்களில் சிற்றரசர்களாய் இருந்தார்கள் என்று காணப்படுகிறது.

## மெகஸ்தனீஸ்

வடமேற்கு இந்தியாவில் அலெக்ஸாண்டரால் பிடிக்கப்பட்ட பகுதிகளை சந்திரகுப்த மௌரியன் என்ற திராவிட அரசன் திரும்ப பெற்றுக் கொண்டு குப்த பேரரசை ஸ்தாபித்தான். செலூக்கஸ் சந்திரகுப்த மௌரியனோடு போர் தொடுத்து தோல்வி அடைந்தான். அதன்பின் செலூக்கஸ் தன் தூதுவரான மெகஸ்தனீஸ் என்பவனை சந்திரகுப்த மௌரியனிடத்தில் அனுப்பினான். மெகஸ்தனீஸ் சந்திர குப்தனை சந்தித்த பின் 'இன்டிகா' என்னும் நூலை எழுதினான். அந்நூலிலிருந்து இந்தியாவின் அன்றைய செய்திகளை அறிய முடிகிறது.

## ரோமர்கள் இந்தியாவில்

கிரேக்க சாம்ராஜ்யத்திற்கு பின் ரோம சாம்ராஜ்யம் உலக அளவில் உயர்வடைந்தது. ஜூலியஸ் சீசரின் மரணத்திற்குப் பின் ஆக்டேவியன் (அகஸ்து) என்பவன் ஆன்றனி என்பவனை ஆக்டியம் என்ற இடத்தில் கி.மு. 31-ல் தோற்கடித்தான். கி.மு. 27-ல் அகஸ்து ரோம சாம்ராஜ்யத்தின் சக்ரவர்த்தி ஆனான். ரோமர்கள் இந்தியாவுடன் மிக நெருக்கமான வணிகத் தொடர்பு வைத்துக் கொண்டார்கள்.

## ரோம நாணயங்கள்

ரோமர்கள் கூட்டம் கூட்டமாக இந்தியாவில் வசித்து வந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. அகஸ்து சீசரின் காலத்தில் உள்ள ரோம நாணயங்கள் இந்தியாவில் பல இடங்களில் தோண்டி கண்டெடுக்கப் பட்டுள்ளன.

## சாலைகள்

இந்தியாவிலிருந்து ரோமா நகரை பதினாறு வாரங்களில் சென்ற டையத்தக்க வசதியுடன் கூடிய சாலைகள் அன்று அமைக்கப் பட்டிருந்தது. ரோமர்களும், மற்று நாட்டவர்களும் கரை வழியாக இந்தியாவில் குடி புகுந்தார்கள் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

## கூஷாணர்கள் இந்தியாவுக்கு

அன்னியர்களான இவர்களும் இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் குடியேறினார்கள். கி.மு165-ல் யுவேச்சிகள் சகர்களை விரட்டிவிட்டு தங்கள் நாடோடி வாழ்க்கையை கைவிட்டு நாட்டில் சில இடங்களை பிடித்துக்கொண்டு புது வாழ்க்கை ஆரம்பித்தார்கள் என்றும் அவர்களில் ஒரு சாரார் கூஷாணர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள் என்றும் காணப்படுகிறது. சகர்கள் கி.மு. 2-ம் நூற்றாண்டிலும் கூஷாணர்கள் கி.பி. 1-ம் நூற்றாண்டிலும் ஹீணர்கள் கி.பி. 4-ம் நூற்றாண்டுகளிலும் இந்தியாவுக்கு வந்தவர்கள் ஆகும்.

## அன்னியர்களின் வாழ்க்கை

இவ்வாறு இந்தியாவுக்குள் பல காலங்களில் நுழைந்த அன்னியர் களான பெர்சியர்கள், கிரேக்கர்கள், ரோமர்கள், கூஷாணர்கள் ஆகியோர் இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் கூட்டம் கூட்டமாக அனேக காலம் சுற்றித் திரிந்தார்கள். நாடோடிகளாய் வாழ்ந்த இவர்கள் சில வேளைகளில் தங்களுக்குள்ளே சண்டைபோட்டுக் கொண்டார்கள். சிலர் சில காலங்களில் தங்களுக்கு சிற்றரசுகளை ஏற்படுத்திக் கொண்டார்கள். நாடோடி வாழ்க்கையில் இவர்கள் குதிரை, ஆடு, மாடு ஆகியவற்றை தீயில் சுட்டு சாப்பிட்டு சோமபானம், சுராபானம் ஆகிய போதை மதுவகைகளை அருந்தியிருந்தார்கள்.

பிரிவு : VI

# கி.பி. 1-ஆம் நூற்றாண்டு

*இது உலக வரலாற்றில் மிக முக்கியமான காலமாகும்.*

*இந்த காலத்தில் கடவுள் மனிதனாக உலகத்தின் மையமான பலஸ்தீனாவில் அவதரித்தார். அவரே இயேசு கிறிஸ்து*

*அவர் பிறப்பில் உலக வரலாறே கி.மு. என்றும் கி.பி. என்றும் இரண்டாக பிரிகிறது.*

*மனிதனின் பாவங்களுக்காக இயேசு சிலுவையில் அறையப்பட்டார்.*

*அவர் மரித்தபின் மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்து 40 நாட்கள் அனேகருக்கு காட்சியளித்து பல பெரிய காரியங்கள் செய்தார்.*

*பின்பு ஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்கையில் அவர் பரத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார். அவரே பாருக்கும் பரத்துக்கும் பாலம் ஆனார்.*

*திருச்சபை ஸ்தாபிக்கப்படுகிறது. யூத மார்க்கம் தனியாக பிரிகிறது. பவுல் பேதுரு போன்ற சீஷர்கள் ஐரோப்பாவுக்கு கிறிஸ்தவத்தை எடுத்துச் செல்கின்றார்கள்.*

*இயேசுவின் சீஷர்களில் ஒருவரான தோமா இந்தியாவுக்கு கிறிஸ்தவத்தை எடுத்துச் சென்றார்.*

*தோமாவின் கொள்கைகளை ஏற்றுக் கொண்ட திராவிட மக்கள் பின்நாட்களில் தங்களுக்காக சைவ வைணவ மதங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள்.*

## அதிகாரம் 11

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

(தொடர் - 7)

## தேவனே மனிதனாய் அவதரித்தல்

கி.பி. முதலாம் நூற்றாண்டு உலக வரலாற்றில் மிக முக்கியமான காலமாகும். தேவன் உண்டாக்கிய மனிதன் அவரை விட்டு தூரம் போனபடியால் மனுக்குலத்தை மீட்டு மீண்டும் தம்மோடு சேர்த்துக் கொள்ளும் படியாக தேவனே இந்த உலகத்தில் மனிதனாய் அவதரித்தார்.

முதல் மனிதனாகிய ஆதாம் பாவம் செய்த போது ஏதேன் தோட்டத்திலேயே தேவன் தம் ரட்சிப்பின் திட்டத்தை வெளிப்படுத்தினார். சாத்தானானவன் ஸ்திரீயாகிய ஏவாள் வழியாய் மனிதனுக்குள் பாவத்தை புகுத்தி விட்டான். ஆனால் தேவனாகிய கர்த்தர் பாவத்தில் விழுந்த மனிதனை மீட்டு சாத்தானின் தலையை நசுக்கும்படியான ஓர் திட்டத்தை தாமே ஏற்படுத்தினார். அனாதி தேவன் தாமே ஒரு ஸ்திரீயின் வித்தாக பிறக்க வேண்டும் என்பதே அந்த திட்டம். பிறப்பதோடு மட்டுமல்லாமல் சாத்தானின் தலையை நசுக்கவும் வேண்டும். பாவத்தின் தண்டனையாகிய மரணத்தை தாமே நிறைவேற்றி மனிதனுக்கு மீட்பை ஏற்படுத்த வேண்டும். இந்த தேவ திட்டம் கி.பி முதலாம் நூற்றாண்டில் நிறைவேற்றப்படுகிறது. அதுவே இயேசு கிறிஸ்துவின் பிறப்பு.

## தேவன் தெரிந்து கொண்ட பாத்திரம்

தேவதிட்டப்படி காலம் நிறைவேறிய போது தேவன் தெரிந்தெடுத்த ஆபிரகாமின் சந்ததியான இஸ்ரவேல் ஜனத்திலிருந்து ஒரு ஸ்திரீ தெரிந்து கொள்ளப்பட்டாள். அவளே கன்னி மரியாள். அவள் தேவ திட்டம் நிறைவு பெற தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட பாத்திரம் மட்டுமே.

# மனிதனாய் அவதரித்த தேவன்

## கிறிஸ்து முன்னுரைக்கப்பட்டவர்

தேவன் மனு உருவாகும் தமது திட்டத்தை தீர்க்கதரிசிகள் மூலம் ஜனங்களுக்கு வெளிப்படுத்தியிருப்பதை பழைய ஏறபாட்டு தீர்க்க தரிசனங்களில் பார்க்கிறோம். இயேசுவின் பிறப்பைக் குறித்து முன் உரைக்கப் பட்ட சில தீர்க்கதரிசனங்களாவன :-

*கன்னிகை பரிசுத்த ஆவியினால் கர்ப்பவதியாவாள்.*

*இயேசு பெத்லெகேமில் பிறப்பார்.*

*யூதா கோத்திரத்தில் பிறப்பார்.*

*பிறப்பில் சிறுவர் கொலை நடக்கும்.*

*எகிப்தி லிருந்து வரவழைக்கப்படுவார்.*

*அபிஷேகம் பண்ணப்படுவர்.*

*கழுதை மேல் பவனி வருவார்.*

*காரணமில்லாமல் பகைக்கப்படுவார்.*

*அனேகருடைய பாவத்தை சுமப்பார்.*

*நம்முடைய பாடுகளை ஏற்றுக்கொள்வார்.*

*நம்முடைய மீறுதல்கள் நிமித்தம் காயப்படுவார்.*

*தேவன் நம்மெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்மேல் வரப்பண்ணுவார்.*

*அடிக்கப்படும்படி கொண்டு போகப்படும் ஆட்டைப் போல தம்முடைய வாயை திறவாதிருப்பார்.*

*அக்கிரமக்காரனாய் கருதப்படுவார்.*

*மரத்தில் அறையப்படுவார்.*

*குத்தப்படுவார்.*

*வஸ்திரம் பங்கிடப்படும்.*

*கசப்புக் காடி கொடுக்கப்படும்.*

*தேவனால் கைவிடப்படுவார்.*

*30 காசுக்காக காட்டிக் கொடுக்கப்படுவார்.*

*எலும்புகள் முறிக்கப்படுவதில்லை.*

*ஐசுரியவான்களோடு அடக்கம் செய்யப்படுவார்.*

இந்த தீர்க்கத் தரிசனங்களெல்லாமம் இயேசு கிறிஸ்துவில் நிறைவேறியது.

## தூதன் முன்னுரைத்தான்

தேவ திட்டத்தை நிறை வேற்ற மரியாளை தெரிந்துகொண்ட பின் தேவன் தூதன் மூலம் மரியாளுக்கு தம் திட்டத்தை அறிவித்தார். காபிரியேல் தூதன் மரியாளை, கிருபை பெற்றவளே வாழ்க என்று வாழ்த்தி, நீ ஒரு குமாரனை பெறுவாய், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக... பரிசுத்த ஆவி உன் மேல் வரும்; உன்னதமானவருடைய பலம் உன் மேல் நிழலிடும்; ஆதலால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமுள்ளது தேவனுடைய குமாரன் எனப்படும் என்றான். மரியாள் தன்னை ஒப்புக்கொடுத்தாள் (கி.மு. 6). மரியாள் கர்ப்பவதியான பின் அவளுக்கு நியமிக்கப்பட்டிருந்த புருஷனான யோசேப்புக்கும் தூதனால் விவரங்கள் அறிவிக்கப்பட்டு அவன் சந்தேகங்கள் அகற்றப்பட்டது.

## இயற்கைக்கு மாறான பிறப்பு

ஒரு ஸ்திரீயும், புருஷனும் சேர்ந்த கூடுகையால் பிறப்பது இயற்கை. ஆனால் ஒரு புருஷனின் கூடுகை இல்லாமலேயே கன்னிமரியாள் பரிசுத்த ஆவியின் (தேவனின்) பலத்தால் கர்ப்பவதியானாள். அவர்

அதிசய பிறப்பை குறித்து விசேஷ நட்சத்திரம் அறிவித்தது. சாஸ்திரிகள் கிழக்கிலிருந்து தேடிச் சென்றார்கள்.

## உலகத்தின் மையத்தில் பிறப்பு

இயேசு ஆதாமிலிருந்து 64- ஈவது தலைமுறை. உலகத்தில் ஜாதி, மதம், மொழி, நிறம் போன்ற எல்லாவற்றையும் கடந்து எல்லா மனிதர்களையும் இரட்சிப்பதற்காக இயேசு உலகத்தின் மையமான பலஸ்தீனாவில் பிறந்தார். அவர் எல்லோருக்கும் சொந்தமான தேவன்.

## பிறப்பு தூதனால் அறிவிப்பு

இயேசுவின் பிறப்பு மேய்ப்பர்களுக்கு முதல்முதலாக அறிவிக்கப் பட்டது. தேவ தூதன் தோன்றி "இதோ எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்கு தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்" (லூக் 2:10,11) என்று அறிவித்தான். இயேசுவின் பிறப்பு எல்லா ஜனங்களுக்குமே நற்செய்தியாகும்.

## யோவானின் சாட்சி

யோவான் இயேசுவை சுட்டிக் காட்டி "இதோ உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி" என்றான். இயேசு யோர்தான் ஆற்றில் ஞானஸ்நானம் எடுத்த போது வானம் அவருக்கு திறக்கப் பட்டது. தேவ ஆவி புறாவைப் போல் இறங்கி தம்மேல் வந்தது.

## பிதாவாகிய தேவனின் சாட்சி

வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி இவர் என்னுடைய நேச குமாரன் இவரில் பிரியமாய் இருக்கிறேன் என்று உரைத்தது (மத் 3 : 16, 17)

## ஊழியங்களின் மகிமை

இயேசு தம் ஊழிய நாட்களில் அனேக அற்புத அடையாளங்களை செய்தார். மரித்தவர்களை உயிரோடே எழுப்பினார். குருடர், செவிடர்,

சப்பாணிகள் ஆகியோருக்கு சுகமளித்தார். பிசாசுகளை துரத்தினார். தரித்திரருக்கு சுவிஷேஷம் அறிவித்தார்.

## மறுரூபமலையில் வெளிப்படுத்தல்

இயேசு, பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகியோரைக் கூட்டிக் கொண்டு உயர்ந்த மலையின் மேல் போனார். அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார். அவர்முகம் சூரியனைப் போல் பிரகாசித்தது. அவர் முகம் வெளிச்சத்தைப் போல் வெண்மையாயிற்று. ஒரு மேகம் அவர்கள் மேல் நிழலிட்டது. இவர் என்னுடைய நேசகுமாரன் இவரில் பிரியமாய் இருக்கிறேன், இவருக்கு செவிகொடுங்கள் என்று அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாயிற்று.

## பாடுகள், உயிர்த்தெழுதல் முன்னறிவிப்பு

இயேசு தாம் படப்போகிற பாடுகளைக் குறித்தும் மரணத்தைக் குறித்தும் உயிர்த்தெழுதல் குறித்தும் சீஷர்களுக்கு அனேக தரம் முன்னறிவித்தார்.

## பாவமில்லாதவர்

என்னில் பாவமுண்டென்று யார் நிரூபிக்கக்கூடும் என்று சவால் விட்டவர் இயேசு ஒருவரே.

## தம்மைக் குறித்து வெளிப்படுத்தல்

இயேசு தம்மை தேவனுடைய குமாரன் என வெளிப்படுத்தினார். அவரை ஏற்றுக் கொள்ளாத யூதர்கள் அவரை ஆக்கினைக்குள்ளாக்கினார் கள். இயேசு தம்மைக் குறித்து தேவ குமாரனென்றும் மனுஷ குமார னென்றும் அனேக சந்தர்ப்பங்களில் தெளிவு படுத்தினார். நானே உலகத்திற்கு ஒளியாய் இருக்கிறேன்; நானே நல்ல மேய்ப்பன்; நானே திராட்சைச் செடி; வருத்தப்பட்டு பாரம் சுமக்கிறவர்களே நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப் பாறுதல் தருவேன்; நானும் பிதாவும் ஒன்றாய் இருக்கிறோம், என்னைக்

கண்டவன் பிதாவைக் கண்டான்; இவ்வாறு இயேசு தம்மைக் குறித்து வெளிப்படுத்தினார்.

மட்டுமல்ல அவர் நானே வழியும், சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன், என்னாலே அல்லாமல் ஒருவன் பிதாவினிடத்தில் வரான் என்று திட்டவட்டமாய் கூறினார். இவ்வாறு உலக வரலாற்றில் தன்னை தேவன் என்று வெளிப்படுத்தியவர்கள் மற்று எவரும் இல்லை.

## மறுபடியும் வருவார்

குறிப்பாக, நான் உங்களுக்காக ஒரு ஸ்தலத்தை ஆயத்தம் பண்ணப் போகிறேன். ஆயத்தம் பண்ணின பின்பு வந்து உங்களை என்னிடமாய் சேர்த்துக் கொள்ளுவேன் என்று தாம் மீண்டும் வருவதைக் குறித்து திட்ட வட்டமாகக் கூறினார்.

## விசாரணையில் குற்றமற்றவர்

தேவ திட்டப்படி இயேசு சிலுவையில் அறையப்பட்டார். யூதர்கள் குற்றமில்லாத அவரை சிலுவை மரணத்திற்கு ஒப்புக் கொடுத்தார்கள். இயேசுவை விசாரித்தவர்கள் அவரில் குற்றம் எதையும் காணவில்லை. பிலாத்து அவரை விசாரித்த பின் நான் இவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன் என்றான். பிலாத்து இயேசுவின் இரத்தப் பழியிலிருந்து விலக தன் கைகளை கழுவினான். பிலாத்துவின் மனைவி நீதிமானாகிய இவரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று எழுதி அனுப்பினாள்.

## இயேசுவின் இரத்தப்பழி

யூதர்கள் பிடிவாதமாய் இவன் இரத்தப்பழி எங்கள் மேலும் எங்கள் பிள்ளைகள் மேலும் இருப்பதாக என்றார்கள். அப்படியே பின்னாட்களில் யூதர்கள் எல்லா தேசங்களிலும் சிதறடிக்கப்பட்டார்கள்.

## பலி நிறைவேற்றப்படுதல்

தேவதிட்டத்தின்படி இயேசு சிலுவையில் அடிக்கப்பட்டார். பிதாவே உமது கரங்களில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன் என்று கூறி

தன் ஆவியை பிதாவிடம் அவரே ஒப்புவித்தார். அவரே மனுக்கு லத்தின் பாவ பரிகாரத்துக்காக உலகத்தோற்றத்துக்கு முன் அடிக்கப் பட்ட தேவ ஆட்டுக்குட்டியும் அவரே அதை செலுத்தும் பிரதான ஆசாரியனுமாய் செயல்பட்டார். இவ்வாறு மனிதனுடைய பாவத்துக்கு நிவாரணமாக செலுத்தப்பட வேண்டிய பலியை அவரே செலுத்தி விட்டார். மனிதனின் பாவ பரிகாரத்துக்காக தன்னையே பலியாக்கியவர் கள் உலக வரலாற்றில் எவரும் இல்லை.

## சிலுவையில் முதற்கனி

இயேசுவோடு சிலுவையில் அறையப்பட்டவர்களில் ஒரு கள்ளன் மனந்திரும்பி இயேசுவை நோக்கி நீர் உம்முடைய இராஜ்யத்தில் வரும் போது அடியேனை நினைத்தருளும் என்றான். இயேசு அவனை நோக்கி இன்றைக்கு நீ என்னுடனே கூட பரதீசிலிருப்பாய் என்றார். அந்த சிலுவை கள்ளன் இயேசுவின் சிலுவை மரணத்தால் கிடைத்த முதற்கனியாகும்.

## சிலுவையின் பொன் மொழிகள்

இயேசு சிலுவையில் இருந்து ஏழு பொன் மொழிகளை உதிர்த்தார். மரண நேரத்தில் இயேசு மொழிந்த ஏழு வார்த்தைகளில் அவர் தேவ திட்டங்களை நிறைவேற்றி முடித்திருப்பதை வெளிப் படுத்தினார்.

## மரண நேரத்தில் அற்புதங்கள்

இயேசு சிலுவையில் தொங்கும் போது மாலை ஒரு மணி முதல் ஆறு மணி வரை பூமியெங்கும் அந்தகாரமாய் இருந்தது. மரண நேரத்தில் தேவாலயத்தின் திரை சீலை கிழிந்தது. பூமி அதிர்ந்தது. கன்மலை பிளந்தது. கல்லறைகள் திறந்தது. நூற்றுக்கு அதிபதியும் அவனோடு கூட இயேசுவை காவல் காத்தவர்களும் இவைகளை கண்ட போது மெய்யாகவே இவன் தேவனுடைய குமாரன் என்றார்கள்.

## இயற்கைக்கு மாறான உயிர்ப்பு

இயேசுவின் கல்லறைக்கு யூதர்கள் முத்திரை போட்டு காவலும் வைத்திருந்தார்கள். ஆனால் இயேசு வாரத்தின் முதல் நாள் அதிகாலையில் உயர்த்தெழுந்தார். கல்லறை மூடப்பட்டிருந்த கல் புரட்டி தள்ளப் பட்டது. அவர் சரீரம் கல்லறையில் காணப்படவில்லை. அவர் சரீரத்தோடு உயிர்த்தெழுந்தார். ஒரு தேவ தூதன் அங்கு வந்த ஸ்திரீ களுக்கு உயிர்ப்பின் செய்தியை அறிவித்தான். இயேசுவின் கல்லறை ஒரு திறந்த கல்லறையாக இன்றும் காணப்படுகிறது. இயேசுவின் பிறப்பைப் போல அவர் இறப்பும் இயற்கைக்கு மாறானதாகும். இயேசுவைப் போல உயிர்த்தெழுந்தவர்கள் உலக வரலாற்றில் எவரும் இல்லை.

## உயிர்த்தபின் உலகத்தில் 40 நாட்கள்

### 1. ஸ்திரீகளுக்கு காட்சி

இயேசு உயிர்த்தெழுந்த பின் நாற்பது நாட்கள் உலகத்திலேயே வாழ்ந்து சீஷர்களை பெலப்படுத்தி தன் வேலைகளை நிறைவு படுத்தினார். உயிர்த்தெழுந்த பின் இயேசு மரியாளுக்கு காட்சி அளித்து அவளோடு பேசினார். மற்றும் ஸ்திரீகளை வாழ்க என வாழ்த்தி அவர்களோடும் பேசினார். அவர்கள் இயேசுவின் பாதங்களை தழுவி பணிந்து கொண்டார்கள்.

### 2. எம்மாவூரில்

எம்மாவூர் சீஷர்களோடு நடந்து சென்று பேசி அவர்களோடு பந்தி இருந்து அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து அதை அவர்களுக்கு பிட்டு கொடுத்தார்.

### 3. மேல் வீட்டறையில்

பூட்டப்பட்டிருந்த அறைக்குள் இயேசு சென்று சீஷர்களோடு 'உங்களுக்கு சமாதானம்' என்றார். அவர்கள் அதிர்ச்சி அடைந்த போது என் கைகளையும், கால்களையும் தொட்டுபாருங்கள் என்று சொல்லி

தம் மாம்சத்தையும் எலும்புகளையும் தொட்டுபார்க்கும்படி தம்முடைய கைகளையும், கால்களையும் அவர்களுக்கு காண்பித்தார். பொரித்த மீன் கண்டத்தையும் தேன் கூட்டு துணிக்கையும் அவர்களுக்கு முன் புசித்தார்.

## 4. தோமாவுக்கு காட்சி

மேலும் ஓர் நாள் சீஷர்கள் இருந்த அறைக்குள் இயேசு சென்று தோமாவை நோக்கி அவன் கைகளை நீட்டி அவர் விலாவிலே போடும்படி சொன்னார். அவன் அப்படியே செய்து இயேசுவை விசுவாசித்து அதிகமாய் பற்றிக் கொண்டான்.

## 5. கலிலேயாவில்

சீஷர்கள் எல்லாரும் எருசலேமை விட்டுச் சென்று கலிலேயா கடலிலே மீன் பிடிக்கச் சென்ற போது அவர்களை தேடிச்சென்று பிள்ளைகளே புசிக்கிறதற்கு ஏதாகிலும் உண்டா என்று கேட்டார். சீஷர்களுக்கு ஆலோசனை சொல்லி அற்புதம் செய்து அதிக மீன்களை பிடிக்க வைத்தார். கரையிலே அவர் கரி நெருப்பு போட்டு சீஷர்களுக்காக அப்பத்தையும், மீனையும் ஆயத்தப்படுத்தினார்.

## 6. சீஷருக்கு கட்டளை

கடைசியாக சீஷர்களுக்கு கட்டளை கொடுத்து நீங்கள் புறப்பட்டுப் போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிதா, குமாரன் , பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானங் கொடுத்து நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும் படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள், இதோ, உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன் என்றார். (மத் 28. 19,20) இவ்விதமாய் உயிர்த்தெழுந்த இயேசு ஒரு பெரும் பொறுப்பை சீஷர்களுக்கு கொடுத்தார். அவர் கொடுத்த பொறுப்பை, அவர் இரட்சிப்பை பெற்றுக் கொண்ட எல்லா மக்களும் தவறாமல் நிறைவேற்ற கடமைப்பட்டிருக்கிறார்கள்.

## இயேசுவின் பரமேறுதல்

உயிர்த்தெழும்பிய இயேசு 40 நாட்களுக்குப்பின் சீஷர்களை ஒலிவ மலையில் அழைத்துச் சென்றார். அங்கே அவர்களை ஆசிர்வதித்தார். மட்டுமல்ல நீங்கள் சில நாட்களுக்குள்ளே பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள். ஆகையால் நீங்கள் எருசலேமை விட்டுப் போகாமல், என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத் தத்தம் நிறைவேற காத்திருங்கள்; பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும்போது நீங்கள் பெலனடைந்து, எருசலேமிலும், யூதேயா முழுவதிலும், சமாரியாவிலும் பூமியின் கடைசி பரியந்தமும் எனக்கு சாட்சிகளா யிருப்பீர்கள் என்றார். இவைகளை அவர் சொன்ன பின்பு அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கையில், உயர எடுத்துக் கொள்ளப்பட்டார். அவர்கள் கண்களுக்கு முன்பாக ஒரு மேகம் அவரை எடுத்துக் கொண்டது. அவர் பரத்துக்கு ஏறிச் சென்றார். இவ்விதமாய் பரத்துக்கு ஏறிச் சென்றவர் உலக வரலாற்றில் இயேசுவைத் தவிர வேறு எவரும் இல்லை.

## தூதர்கள் கூற்று - மீண்டும் வருவார் -

இயேசு பரத்துக்கு ஏறிச் செல்வதை ஜனங்கள் அண்ணார்ந்து பார்த்துக் கொண்டிருக்கையில் இரு தூதர்கள் வெளிப்பட்டு, கலிலேயராகிய மனுஷரே நீங்கள் ஏன் வானத்தை அண்ணாந்து பார்த்து நிற்கிறீர்கள்? உங்களிடத்தினின்று வானத்துக்கு எடுத்துக் கொள்ளப் பட்ட இந்த இயேசுவானவர் எப்படி உங்கள் கண்களுக்கு முன்பாக வானத்துக்கு எழுந்தருளிப் போனாரோ, அப்படியே மறுபடியும் வருவார் என்றார்கள். இவ்வாறு இயேசு எல்லாருக்கும் பெரும் எதிர்பார்ப்பை அளித்துக் கொண்டு பரத்துக்கு ஏறிச் சென்றார். (வியாழன் May 26 கி.பி. 29) (அப்.1 அதிகாரம்)

## பரிசுத்த ஆவியானவர் அனுப்பப்படுதல்

இயேசு சீஷர்களிடத்தில், தாம் சென்று பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனை அனுப்புவேன் என்று கூறியிருந்தார். எனவே சீஷர்களில் ஏறத்தாழ 120 பேர் எருசலேமில் ( மேல்வீட்டறையில்)

தரித்திருந்தார்கள். பெந்தேக்கோஸ்தே என்னும் நாள் வந்த போது (ஞாயிறு June 5 கி.பி. 29) பலத்த காற்று அடிக்கிற முழக்கம் போல வானத்திலிருந்து சடுதியாய் ஒரு சத்தமுண்டாகி, அவர்கள் உட்கார்ந்திருந்த வீடு முழுவதையும் நிரப்பிற்று. அல்லாமலும் அக்கினிமயமான நாவுகள் அவர்களுக்குக் காணப்பட்டு, அவர்கள் ஒவ்வொருவர் மேலும் வந்து அமர்ந்தது. அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளின வார்த்தையின்படியே பேசத் தொடங்கினார்கள் *(அப். 2 : 1-4)*. திருச்சபை ஸ்தாபிக்கப்பட்டது. இரட்சிக்கப்படுகிறவர்களை (இயேசு ஏற்படுத்திய இரட்சிப்பை விசுவாசித்து ஏற்றுக் கொண்டவர்கள்) கர்த்தர் அனுதினமும் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார் - *அப். 2 : 47.*

அதிகாரம் 12

# யூத, கிறிஸ்தவ மார்க்கங்கள்

(தொடர் - 8)

# யூத மார்க்கம் பிரிதலும், திருச்சபையின் வளர்ச்சியும்

## யூதர்களில் இரு பிரிவுகள்

யூதர்களில் ஒரு பிரிவினர் இயேசுவை ஏற்றுக் கொண்ட போதிலும் மற்றுமோர் கூட்டத்தார் இயேசுவை மேசியாவென்று விசுவாசிக்க வில்லை. இயேசுவை விசுவாசித்து ஏற்றுக் கொண்ட யூதர்கள், தங்களுடைய முன் வழக்கத்தின் படி எருசலேம் தேவாலயத்திலும் யூதர்களுடைய மற்றும் ஜெப ஆலயங்களிலும் சென்று இயேசுவைக் குறித்து பிரசங்கம் பண்ணினார்கள். இதை இயேசுவை ஏற்றுக் கொள்ளாத யூதர்கள் எதிர்த்தார்கள். இவ்விதமாய் யூதர்களுக்குள்ளே இயேசுவை ஏற்றுக் கொண்ட யூதர்கள் என்றும், இயேசுவை ஏற்றுக் கொள்ளாத யூதர்கள் என்றும் இரு பிரிவுகள் தோன்றியது.

## யூதமார்க்கம் பிரிதல்

தேவ சமூகத்திலிருந்து தூரம் போன ஆதாமின் சந்ததியை மீண்டும் தம்மோடு சேர்த்துக் கொள்ள தேவன் மனிதனாக இவ்வுலகத்தில் அவதரிப்பார் என்று பழைய ஏற்பாட்டு புத்தகங்களில் அனேக

தீர்க்கத்தரிசனங்களால் விளக்கப்பட்டுள்ளன. அந்த தீர்க்கத் தரிசனங்களின் படியே இயேசு மனிதனாக வந்து இரட்சிப்பை ஏற்படுத்தி பரத்துக்கு ஏறிச் சென்றார். ஆனால் பழைய ஏற்பாட்டு புத்தகங்களில் கூறப்பட்ட தீர்க்க தரிசனங்கள் படி வந்த மேசியாவாகிய கிறிஸ்துவை யூதர்களில் ஒரு பிரிவினர் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் மேசியா இது வரையிலும் வரவில்லை என்று சொல்லி இன்னமும் மேசியா வர காத்துக் கொண்டிருக்கிறார்கள். இயேசுவை ஏற்றுக் கொள்ளாத யூதர்கள் பழைய ஏற்பாட்டோடு நின்று விட்டார்கள். பழைய ஏற்பாட்டு புத்தகங்களைக் கொண்ட அவர்களுடைய மதம் யூத மார்க்கம் என்று தனியாக அழைக்கப்படுகிறது. யூத மதத்தவர்கள் நியாயப் பிரமாணத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள்.

### விசுவாசத்தால் இரட்சிப்பு

இயேசுவால் அனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகம் சீஷர்களை வல்லமைபடுத்தியது. அவர்கள் வல்லமையோடே சுவிசேஷத்தை அதாவது, இயேசு நமக்காக சிலுவையில் மரித்து பாவத்தின் தண்டனையிலிருந்து நம்மை ரட்சிக்கிறார் என்ற நல்ல செய்தியை, அறிவித்தார்கள். பாவத்தின் தண்டனையிலிருந்து இரட்சிப்படைய இயேசுவே வழியென்று போதித்தார்கள்.

இதை விசுவாசித்து ஏற்றுக் கொண்டவர்கள் திருச்சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். திருச்சபை என்பது இயேசுக் கிறிஸ்து ஏற்படுத்திய இரட்சிப்பை ஏற்றுக் கொண்ட மக்களின் கூட்டமாகும்.

## திருச்சபையின் வளர்ச்சி

இரட்சிக்கப்பட்டவர்களின் கூட்டமாகிய சபை எருசலேமிலும், யூதேயாவிலும், சமாரியாவிலும் பின்பு உலகம் முழுவதும் பரவ ஆரம்பித்தது. ஆரம்பத்தில் பேதுரு, யோவான் ஆகிய அப்போஸ்தலர்கள் வல்லமையாய் ஊழியம் செய்தார்கள். தொடர்ந்து அப்போஸ்தலர்கள் எல்லோரும் ஊழியத்தில் ஈடுபட்டார்கள். அனேக அதிசயங்களும் அற்புதங்களும் நடைபெற்றன. சபை துரிதமாய் வளர்ந்து கொண்டு

வந்தது. இயேசுவின் அற்புதங்களையும், ஊழியங்களையும், உபதேசங் களையும், சிலுவை மரணத்தையும், உயிர்த்தெழுதலையும், பரமேறு தலையும் நேரில் கண்ட அனேகர் அப்போது உயிரோடு இருந்தபடி யால் அவர்கள் வல்லமையாய் சாட்சி பகர்ந்தார்கள். இயேசுவின் கன்னிப்பிறப்பு, சிலுவை மரணம் உயிர்த்தெழுதல், பரமேறுதல் ஆகியவை அவருடைய சிறப்பு அம்சங்களாக அன்றைய மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். அது திருச்சபையின் துரிதமான வளர்ச்சிக்கு காரணமாயிருந்தது.

## யூதர்களால் உபத்திரவம்

இயேசுக் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்ட யூதர்கள் கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். முதல்முதலாக யூதர்களும் பின்பு புறஜாதியாரும் இயேசுவை ஏற்றுக் கொண்டு கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். முதலில் கிறிஸ்தவர்களுக்கு, கிறிஸ்தவர்கள் அல்லாத யூதர்களால் உபத்திரவம் ஏற்பட்டது. அவர்களுடைய உபத்திரவத்தினால் எருசலேமிலிருந்து கிறிஸ்தவர்கள் பல இடங்க ளிலும் சிதறடிக்கப்பட்டார்கள். கிறிஸ்தவர்களை உபத்திரவ படுத்தின யூதர்களில் மிக முக்கியமானவன் சவுல் என்பவன் ஆகும்.

## சவுலின் மனம் மாற்றம்

சவுல் என்பவன் கிறிஸ்தவர்களை துன்பப்படுத்துவதற்காக அதிகார பத்திரங்களோடு தமஸ்குவுக்கு சென்ற போது அங்கே இயேசுவால் சந்திக்கப்பட்டான். மனமாற்றமடைந்த அவன் இயேசுவை இரட்சகராக ஏற்றுக் கொண்டு தன் பெயரை பவுல் என்று மாற்றி இயேசுவின் சுவிசேஷத்திற்காக மிஷனறியாக தன்னை ஒப்புக் கொடுத்தான்.

## எருசலேம் தலைமையிடம்

அப்போஸ்தலர்கள் எருசலேமில் இருந்து கொண்டு ஊழியங்களை கவனித்தார்கள். எருசலேம் திருச்சபையின் தலைமை இடமாயிற்று.

## அந்தியோக்கியா இரண்டாம் மையம்

சிதறடிக்கப்பட்ட கிறிஸ்தவர்கள் பல இடங்களுக்கு ஓடிச் சென்றார்கள். அவர்கள் சென்ற இடங்களெல்லாம் சுவிசேஷத்தை பரப்பினார்கள். பவுல் அந்தியோக்கியாவில் அழைத்து வரப்பட்டார். அந்தியோக்கியாவில் அனேகர் சுவிசேஷத்தை ஏற்றுக் கொண்டார்கள். சபை வளர்ச்சி அடைந்து வந்தது. அந்தியோக்கியாவில் இயேசுவை ஏற்றுக் கொண்டவர்கள் முதன் முதலாக கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப் பட்டார்கள். அந்தியோக்கியா கிறிஸ்தவர்களின் இரண்டாம் மையமாயிற்று.

## புறஜாதியார் கிறிஸ்தவத்தில்

அந்தியோக்கியாவில் இருந்து பவுல் மிஷினெறி ஊழியத்திற்காக அனுப்பப்பட்டார். பவுல், பேதுரு போன்ற அப்போஸ்தலர்களின் ஊழியங்களால் யூதர்கள் அல்லாத புற ஜாதியாரான அனேகர் கிறிஸ் தவர்கள் ஆனார்கள். நியாயப் பிரமாணத்துக்கு உட்படாதவர்களும் விருத்தசேதனம் பண்ணாதவர்களுமாகிய புறஜாதியாரும் யூதர்களு டைய கிறிஸ்து மார்க்கத்தை ஏற்றுக்கொண்ட படியால் அவர்களுக் குள்ளே சில கருத்து வேறுபாடுகளும் வாக்கு வாதங்களும் ஏற்பட்டது.

## எருசலேம் கவுன்சில் - AD 50

இது சம்மந்தமாக AD 50 -ல் எருசலேம் கவுன்சில் கூட்டப்பட்டு இந்த காரியம் பரிசீலிக்கப்பட்டது. கூட்டத்தின் முடிவில் யூதர்களைப் போல புற ஜாதியாரும் கிறிஸ்தவர்களாக ஏற்றுக் கொள்ளப்படுவார்க ளென்றும், அதற்காக யூதர்கள் அல்லாத புற ஜாதியார் நியாயப் பிரமாண ஆசார முறமைகளை கைக்கொள்ளவோ விருத்தசேதனம் பண்ணிக் கொள்ளவோ வேண்டுவதில்லை என்றும் தீர்மானிக்கப்பட்டது.

அதோடு இயேசுவை ஏற்றுக் கொள்ளும் எந்த தேசத்தாரும், எந்த பாஷைக்காரரும், எந்த ஜாதிக்காரரும், எந்த பிரிவினரும் கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

அதிகாரம் 13

# கிறிஸ்து மார்க்கம்

(தொடர் - 9)

# கிறிஸ்தவம் ஐரோப்பாவுக்கு

### கிறிஸ்தவம் பரவுதல்

நேபுகாத்நேச்சார், தானியேல் ஆகியோருக்கு வெளிப்படுத்தப்பட்டபடி ரோம சாம்ராஜ்யம் கி.பி. 63 -ல் ஸ்தாபிக்கப்பட்டது. மத்திய தரை கடல் சுற்றியுள்ள பலஸ்தீனா, உள்ளிட்ட சகல தேசங்களும் ரோமா ஆட்சிக்குள்ளாயிருந்தது. கி.மு. 27 முதல் கி.பி. 14 வரை அகஸ்து ரோம சக்கரவர்த்தியாயிருந்தான். அவன் நாட்களில் இயேசு பிறந்தார். திபேரியூ மன்னனின் காலத்தில் (கி.பி. 14 - 37) இயேசு ஊழியம் செய்து அவன் நாட்களில் சிலுவையில் அறையப்பட்டார்.

### கிறிஸ்தவம் மேற்கு ஆசியாவிலிருந்து ஐரோப்பாவுக்கு

மன்னனான காயஸ்கலிகுலா என்பவனின் நாட்களில் (கி.பி. 37 - 41) பவுல் மனமாற்றமடைந்தார். மன்னனான கிலவுதியூவின் நாட்களில் (கி.பி. 41 - 54) பவுல் தன் முதலாம் மிஷனறி யாத்திரைகளை முடித்தார். கி.பி. 54 முதல் 68 வரை நீரோ மன்னன் ரோமா சாம்ராஜ்யத்தை ஆண்டான். அந்நாட்களில் பவுல் தன் 3-ாம் மிஷனறி யாத்திரையை முடித்தபோது எருசலேமில் கைது செய்யப்பட்டு விசாரணையில் ராயனுக்கு அபயமிட்டபடியால் கி.பி. 61-ல் ரோமாபுரிக்கு கொண்டு செல்லப்பட்டார்.

இந்நாட்களில் ரோமா சாம்ராஜ்யத்தின் எல்லைகளில் எல்லாம் கிறிஸ்த வம் வேகமாய் பரவிக் கொண்டே இருந்தது.

## கிறிஸ்தவர்கள் சித்திரவதை

கிறிஸ்தவர்கள் ரோமர்களின் தேவர்களையோ, ரோம சக்ரவர்த்திக ளையோ தேவர்களாக தொழ மறுத்தார்கள். அவர்கள் ஓர் வித்தியா சமான கூட்டமாக கருதப்பட்டார்கள். இதுபோன்ற பல காரணங்களால் ரோம அரசாங்கத்தார் கிறிஸ்தவர்களை வெறுத்தார்கள்.

அந்நாட்களில் ரோம சக்ரவர்த்தியாக இருந்த நீரோ மன்னன் கிறிஸ்தவர்களை துன்புறுத்தி சித்திரவதை செய்தான். கிறிஸ்தவர்களை பிடித்து மிருகங்களின் தோல்களை போர்த்து அரண் மனை நாய்களுக்கு முன் சண்டைக்கு விட்டு வேடிக்கை பார்த்தான். இரவு வேளைகளில் இந்நிகழ்ச்சிகளுக்காக கிறிஸ்தவர்களை பிடித்து ஒன்றாய் கட்டி தீக்கொளுத்தி அந்த வெளிச்சத்தில் அந்நிகழ்ச்சிகளை பார்த்து ரசித்தான். ரோமா நகருக்கு தீ வைத்து கிறிஸ்தவர்களை கொண்டு பழி சுமத்தினான். அந்நாட்களில் அனேக கிறிஸ்தவர்களை சிங்கக் கெபிகளில் போட்டு கொன்றான்.

## பவுல், பேதுரு ரத்த சாட்சி மரணம்

AD 67-ல் நீரோ மன்னன் பவுல், பேதுரு ஆகிய அப்போஸ்தலர் களையும் கொலை செய்தான். பேதுருவை தலைகீழாக சிலுவையில் அறைந்தும், பவுலை சிரச்சேதம் பண்ணியும் கொலை செய்தான் என்று கூறப்படுகிறது.

## புதிய ஏற்பாட்டு புத்தகங்கள்

இயேசுவின் அப்போஸ்தலர்களும்அவரோடு தொடர்புள்ள சீடர்களும் புதிய ஏற்பாட்டு புத்தகங்களை எழுதினார்கள். AD 100 -ம் ஆண்டிற்குள் புதிய ஏற்பாட்டு புத்தகங்கள் அனைத்தும் எழுதப்பட்டு விட்டது. கடைசியாக எழுதப்பட்ட புத்தகம் யோவான் எழுதிய வெளிப்படுத்தின விசேஷமாகும். அது கி.பி. 96-ல் எழுதப்பட்டது. யோவான் கி.பி. 100-ல் மரித்தான்.

**அதிகாரம் 14**

# கிறிஸ்து மார்க்கம்

(தொடர் - 10)

# கிறிஸ்தவம் இந்தியாவுக்கு

(ஆதி இந்திய கிறிஸ்தவம்)

## தோமாவின் இந்தியா வருகை

தோமா இயேசுவின் சீஷர்களில் ஒருவனாய் இருந்தார். உயிர்த்தெழுந்த பின் இயேசு சீஷர்களுக்கு தம்மை முதலில் காண்பித்த போது தோமா அங்கு இருக்கவில்லை. மற்றும் சீஷர்கள் அதைக் குறித்து அவனிடம் சொன்னபோது அவன் விசுவாசிக்கவில்லை. விசுவாசியாத தோமாவுக்கு இயேசு மறுபடியும் காட்சி அளித்தார். தோமா இயேசுவின் காயங்களை தொட்டு அதன் பின் விசுவாசித்து பெலப்பட்டார். விசுவாசத்தில் பெலப்பட்ட தோமா அப்போஸ்தலன் AD 52-ல் இந்தியா வுக்கு வந்தார்.

## தோமாவின் இந்தியா ஊழியம்

தோமா இந்தியாவில் பல இடங்களில் நற்செய்தியை அறிவித்தார். தட்ச சீலத்தில் சிற்றரசனாக இருந்த கொண்டோபரஸ் என்பவனை சந்தித்து கிறிஸ்துவுக்குள் கொண்டு வந்தார். தென்னிந்தியாவிலும் தமிழ் நாட்டிலும் 20 ஆண்டுகள் ஊழியம் செய்தார். AD 72ல் சென்னை மயிலாப்பூரில் இரத்த சாட்சியாய் மரித்தார்.

## ஆராய்ச்சிகள்

தோமா அப்போஸ்தலனின் ஊழியங்களை குறித்து மேலே கூறப்பட்ட யாவும் கற்பனை என்றும் கொண்டோபரஸ் என்ற சிற்றரசன் வட இந்தியாவில் ஆட்சி புரிந்ததில்லை என்றும் தோமா இந்தியாவுக்கு வரவில்லை என்றும் சமீபகாலம் வரை சிலர் கூறி வந்தார்கள். ஆனால் இதைக் குறித்து ஆராய்ச்சிகள் தீவிரமாய் நடை பெற்றன. அவ்வாராய்ச்சிகளின் அடிப்படையில் கொண்டோபரஸ் என்ற ஒரு சிற்றரசன் வடஇந்தியாவில் வாழ்ந்திருந்தான் என நிரூபிக் கப்பட்டுள்ளது. அவன் வெளியிட்டிருந்த நாணயங்கள் பல அகழ் வாரய்ச்சிகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

## தோமாவின் கல்லறை

மேலும் தோமா அப்போஸ்தலன் இந்தியாவில் ஊழியம் செய்து இரத்த சாட்சியாக மரித்தார் என்பதற்கு அனேக சான்றுகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவர் வசித்து வந்த இடம் செய்ன்ட் தோமஸ் மவுண்ட் என்று இன்றும் அழைக்கப்படுகிறது. அவர் சரீரம் சென்னை யில் அடக்கம் பண்ணப்பட்டுள்ளது. மட்டுமல்ல AD முதலாம் நூற்றாண்டில் தோமா அப்போஸ்தலன் இந்தியாவில் ஊழியம் செய்த காரணத்தால் அன்று இந்தியாவில் காணப்பட்ட மதங்களிலும், தொழு கைகளிலும் மாபெரும் மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதை பார்க்கிறோம்.

# தோமா வரும்போது இந்தியாவின் நிலை

## அன்று காணப்பட்ட மதங்கள்

கி.பி. 52-ல் தோமா இந்தியாவுக்கு வந்தபோது இந்தியாவில் காணப்பட்ட திராவிடர்களின் மதங்களாவன :-

1. சமண மதம்

2. புத்த மதம்

இவ்விரு மதங்களும் நாத்திகக் கொள்கை உடையவைகளாகும்.

## வழிபாடுகள்

### 1. திராவிட வழிபாடு

சிந்துவெளி நாகரீகத்தில் திராவிடர்களுக்கு ஞாபகக்கல் நாட்டி வழிபடும் முறை இருந்து வந்தது என்று முன்னால் பார்த்தோம். அந்த வழிபாட்டு முறைகளை திராவிட மக்கள் தொடர்ந்து நடத்தி வந்தார்கள் என்று காணப்படுகிறது. முற்காலத்தில் செய்து வந்த ஞாபகக்கல் வழிபாடு பிற்காலங்களில் 'சிவலிங்க' வழிபாடு என்று அழைக்கப்பட்டது. சங்க காலத்தில் சிவலிங்கம் கந்து என்று அழைக்கப்பட்டதாக பார்க்கிறோம். அப்போஸ்தலனாகிய தோமா இந்தியா வந்தபோது திராவிடர்கள் சங்க இலக்கியங்களில் கூறப்படும் கந்து அல்லது சிவலிங்கத்தையும் கொற்றவை என்ற யுத்த தேவதையையும் வேலன் என்ற குமரனையும் மற்று பல தெய்வங்களையும் வழிபட்டு வந்தார்கள். பலிகளும் செலுத்தினார்கள்.

### 2. அன்னியர்களின் தீ வழிபாடு

தோமா இந்தியாவுக்கு வந்த காலங்களில் இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் வெளிநாட்டாராகிய அன்னியர்கள், முன் விவரிக்கப் பட்டபடி, நாடோடிகளாக வசித்து வந்தார்கள். அவர்கள் தீ வழி பாட்டுக்காரர்கள். குதிரை, காளை, ஆடு, எருமை போன்ற மிருகங் களை தீயிற் சுட்டு, அவற்றின் மாமிசத்தை சோம, சுரா பானங்களோடு (மதுவகை) சாப்பிட்டு வந்தார்கள்.

## தோமாவின் உபதேசங்கள்

தோமா அப்போஸ்தலன் இந்தியாவுக்கு வரும்போது புதிய ஏற்பாட்டு புத்தகம் எழுதப்படவில்லை. தோமா பழைய ஏற்பாட்டு புத்தகங்களின் அடிப்படையிலும், விண்ணுலகத்தை விட்டு மனிதனாய் அவதரித்து தன்னோடு வாழ்ந்த இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கையின் அடிப்படையிலும் இந்திய ஜனங்களுக்கு போதித்தார். தோமா உபதேசித்த போதனைகளின் முக்கிய அம்சங்கள் ஆவன:-

1. ஓரே ஒரு தேவன் உண்டு. அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி ஆகிய திரித்துவ தேவன் ஆகும் (Doctrine of Trinity).

2. மனிதன் பாவமில்லாதவனாய் தூய நிலையில் தேவனால் படைக்கப்பட்டான். ஆனால் அவன் தேவகட்டளை மீறியதால் பாவத்தில் வீழ்ச்சியடைந்தான் (Doctrine of Fall of man).

3. வீழ்ச்சி அடைந்த மனிதனை மீட்கும் படி கடவுள் இந்த உலகத்தில் மனிதனாய் அவதரித்தார் (Doctrine of Avathar).

4. மனிதனாய் அவதரித்த தேவன் ஜனங்களின் பாவ பரிகாரத்திற்காக தன்னையே பலியாக்கினபடியால் இனிமேல் நாம் பலி செலுத்த வேண்டியதில்லை (Doctrine of Fulfillment of sacrifice).

5. நமக்காக தம்மையே பலியாக்கிய கடவுளை விசுவாசிப்பவனுக்கு இரட்சிப்பு உண்டு (Doctrine of Salvation by faith).

## தோமாவின் உபதேசங்களால் ஏற்பட்ட மாற்றங்கள்

தோமாவின் உபதேசங்களை சமண மதத்தை உடையவர்களும் புத்த மதத்தை உடையவர்களும் பழங்கால திராவிட தொழுகையை உடையவர்களுமான பெரும் கூட்டம் திராவிட மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். எனவே சமண பவுத்த மதங்களிலும் பழங்கால திராவிட தொழுகைகளிலும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டது.

### 1. புத்த மதத்தில் ஏற்பட்ட மாற்றங்கள்

### a) மகாயான புத்தமதம்

தோமா இந்தியாவுக்கு வரும் போது இந்தியாவில் காணப்பட்ட ஒரு முக்கியமான மதம் திராவிடர்களின் புத்தமதம் ஆகும். புத்த மதம் ஒரு நாத்திக மதமாக கருதப்பட்டது. தோமா தேவன் உண்டென்றும் அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி ஆகிய திரியேக தேவன் என்றும் அவர் மனிதனாக அவதரித்தார் என்றும் போதித்தார். இந்த கொள்கையை அனேக புத்த மதத்தவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் தங்கள் நாத்திக கொள்கையை விட்டுவிட்டு கடவுளை ஏற்றுக்

கொண்டார்கள். அவர்கள் கடவுளின் மூவொருமை கொள்கைக்கு தர்மகாயா, சம்போக காயா, நிர்மாண காயா என்ற திரித்துவ பெயரை வைத்துக் கொண்டார்கள். இவர்கள் புத்தரை தெய்வமாக வணங்க ஆரம்பித்தார்கள். இவர்கள் நாளடைவில் கோயில்களை கட்டி புத்தர் சிலையை வழிபட்டார்கள். இவ்வாறு தோமாவின் கடவுள் கோட்பாட்டை ஏற்றுக் கொண்ட புத்தர்கனின் மதம் மகாயான புத்த மதம் என்று அழைக்கப் பட்டது.

### b) ஹீனயான புத்தம்தம்

தோமாவின் கொள்கையை ஏற்றுக் கொள்ளாமல் முன்னிருந்த கொள்கைகளையே கடைபிடித்துக் கொண்ட புத்தர்கள் ஹீனயான புத்தர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

இவ்விதமாய் தோமாவின் உபதேசத்தின் காரணமாக புத்தமதம் மகாயானம் ஹீனயானம் என்று இரு பிரிவுகளாக பிரிந்தது. ஆதி கொள்கைகளைக் கொண்ட ஹீனயான புத்தமதம் பாலி மொழியில் எழுதப்பட்டது. ஆனால் கிறிஸ்தவக் கொள்கைகளால் மாற்றமடைந்த மகாயான புத்தமதம் கிறிஸ்துவுக்குப்பின் சமிஸ்கிருத மொழியில் எழுதப்பட்டது.

## 2. சமணமதத்தில் ஏற்பட்ட மாற்றங்கள்

### a) ஸ்வேந்தாம்பரர்கள்

சமண மதமும் கடவுள் நம்பிக்கையற்ற நாத்திக மதமாக இருந்து வந்தது. சமண மதத்திலும் ஒரு சாரார் தோமாவின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டார்கள். தோமாவின் கடவுள் கொள்கையை ஏற்றுக் கொண்ட சமணர்கள் ஸ்வேந்தாம்பரர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். இவர்கள் மிதவாதிகள். வெள்ளை ஆடைகளை அணிவார்கள்.

### b) திகம்பரர்கள்

கடவுள் கொள்கையை ஏற்றுக் கொள்ளாத சமணர்கள் திகம்பரர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். அவர்கள் அணிவதற்கு ஆடைகள் கூட

தேவையில்லை என்று தங்களை வெறுக்கிறவர்கள். அவர்கள் தங்களையே வெறுத்து மற்றெந்த உயிரையும் சேதப்படுத்தாமல் தனித்த வாழ்க்கை செய்து உணவையும் உட்கொள்ளாமல் தங்களையே சாவுக்கு ஒப்புக்கொடுத்து விடுவார்கள். இவ்வாறு, தோமாவின் கொள்கையால் சமணமதம் ஸ்வேந்தாம்பரம், திகம்பரம் என இரண்டாக பிரிந்தது.

## 3. திராவிட வழிபாடுகளில் மாற்றங்கள்

தோமா அப்போஸ்தலனின் கொள்கைகளை பழந்திராவிட வழிபாட்டை உடைய திராவிட மக்களும் ஏற்றுக் கொண்டார்கள். அதினிமித்தம் அவர்களுடைய வழிபாட்டு முறைகளிலும் மாற்றங்கள் ஏற்படலாயிற்று.

### மூவொருமை கொள்கையின் வளர்ச்சி

பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் ஆகிய தோமாவின் திரித்துவ கொள்கையை திராவிடர்கள் தங்கள் வழிகளில் ஏற்றுக் கொண்டார்கள். அதுமட்டுமல்ல, அதை தங்கள் தங்கள் நிலைகளில் விளக்கினார்கள். இவ்விளக்கங்களால் சைவம், வைணவம் ஆகிய இரு மதங்கள் தோன்றலாயிற்று. அதாவது பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் ஆகிய திரித்துவத்தில் பரிசுத்த ஆவியை பெண் பாலாய் எடுத்துக் கொள்வது சைவமும் ஆண்பாலாய் எடுத்துக் கொள்வது வைணவமும் ஆயிற்று.

இவ்வாறு கி.பி. முதலாம் நூற்றாண்டு முதல் தோமாவின் கிறிஸ்தவ கொள்கைகளால் திராவிட வழிபாடுகளில் மாற்றங்கள் ஏற்பட்டு பின் நாட்களில் பக்தி இயக்கங்களும் சைவ வைணவ மதங்களும் வளர்ச்சியடைந்தது என்று காணப்படுகிறது.

# கிறிஸ்தவம் - மேற்கிலும் கிழக்கிலும்

## மேற்கில் கிரேக்க மொழி

பவுலும் மற்று அப்போஸ்தலர்களும் மேற்கு நாடுகளில், குறிப்பாக ஐரோப்பிய நாடுகளில் நற்செய்தி பரப்பி சபைகள் ஸ்தாபித்து அச்சபை மக்களுக்கு பலகடிதங்கள் அனுப்பி சபைகளையும், கிறிஸ்

தவர்களையும் பலப்படுத்தினார்கள். அந்த உபதேசங்கள் கிரேக்க மொழியில் எழுதப்பட்டது. பின்பு அவைகள் தொகுக்கப்பட்டு இப்பொழுது புதிய ஏற்பாடு என்று அழைக்கப்படுகிறது.

## கிழக்கில் - தமிழ் மொழி

அவ்வண்ணமாக அப்போஸ்தலனாகிய தோமா கிழக்கு நாடுகளில், குறிப்பாக இந்தியாவில் நற்செய்தி அறிவித்ததின் பயனாக திராவிடர்கள் கிறிஸ்தவக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டார்கள். அப்போஸ்தலர் தோமா எழுதியதான இலக்கியங்கள் இதுவரையில் கிடைக்கப்படவில்லை. ஆனால் புதிய ஏற்பாடு புத்தகங்களில் லூக்கா என்பவன் தான் அறிந்தவற்றையும் அப்போஸ்தலர்களிடம் கற்றுக் கொண்டவற்றையும் கிரேக்க மொழியில் எழுதியதைப் போல இந்தியாவில் தோமா அப்போஸ்தலனிடம் கற்றுக் கொண்ட உபதேசங் களின் அடிப்படையில் எழுதப்பட்ட திருக்குறள், சைவ சித்தாந்தம், பன்னிரு திருமறை ஆகியவற்றை சரியாக புரிந்து கொண்டால் அவைகள் இந்தியாவில் தமிழ் மொழியில் எழுதப்பட்ட கிறிஸ்தவ நூல்கள் என்று கண்டு கொள்ளலாம்.

## பிரிவு : VII

# கி.பி 2 முதல் 6 நூற்றாண்டுகள்

இந்தக் காலங்களில் கிறிஸ்தவம் மாபெரும் உபத்திரவங்கள் மத்தியிலும் ரோம சாம்ராஜ்யத்தின் கீழான எல்லா நாடுகளிலும் பிறதேசங்களிலும் வளர்ச்சி அடைந்தது.

ஆனால் பாபிலோனிய மதம் கிறிஸ்தவத்தில் கலந்து விட்டது. திருச்சபையில் போப்பின் அதிகாரம் பெருகிற்று.

மேலும் இந்தக் காலங்களில் அரேபியாவில் இஸ்லாமிய மதம் ஆரம்பிக்கப்படுகிறது

இந்தியாவில் இந்தக் காலங்களில் தோமாவின் ஊழியத்தின் பயனாக திராவிட மக்களின் மத்தியில் பக்தி இயக்கங்கள் வளர்ந்தது. தொடர்ந்து சைவம் வைணவம் வளர்ச்சியடைய ஆரம்பிக்கிறது

மேலும் திராவிடர்களால் சமஸ்கிருத மொழி தோற்றுவிக்கப்பட்டு வேதங்களும் எழுதப்படுகிறது.

அதிகாரம் 15

# கிறிஸ்து மார்க்கம்

*(தொடர் - 11)*

# ஐரோப்பாவில் கிறிஸ்தவத்தின் வளர்ச்சி

## ஆதி கிறிஸ்தவத்தின் வளர்ச்சி

இயேசு கிறிஸ்துவின் நற்செய்தி அப்போஸ்தலர்களால் ஐரோப்பிய நாடுகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டதை பார்த்தோம். பவுல், பேதுரு என்பவர்கள் ரோமில் நீரோ மன்னனால் கி.பி. 67-ல் கொல்லப் பட்டார்கள். அந்நாட்களில் மேலும் அனேக கிறிஸ்தவர்கள் ரோமர்களால் கொல்லப்பட்டார்கள். இவ்வாறு கிறிஸ்தவர்கள் இரத்த சாட்சிகளாய் மரித்து சித்திரவதைச் செய்யப் பட்ட போதிலும் கிறிஸ்து மார்க்கம் எல்லா இடங்களிலும் படர்ந்து வளர்ந்து கொண்டே இருந்தது.

## அமைப்புகள் உருவாகுதல்

சபை ஸ்தாபிக்கப்பட்ட ஆரம்ப நாட்களில் பிஷப் மற்றும் ப்றிஸ்பிட்டர் (Prysbitor) என்பது ஒரே ஸ்தானமாக கருதப்பட்டது. ஒவ்வொரு கிறிஸ்தவ அமைப்புகளும் ஒரு பிஷப் அல்லது ப்றிஸ்பிட்டர்-னால் நடத்தப்பட்டது. ஆனால் 2 -ம் நூற்றாண்டிலிருந்து

ஒவ்வொரு சபை அமைப்புகளுக்கும் ஒவ்வொரு பிஷப்பும் அவருக்கு உதவியாக ப்றிஸ்பிட்டர்கள், டீக்கன்கள் ஆகியோரைக் கொண்ட ஓர் குழுவும் காணப்பட்டது.

### மாற்றங்கள் எவ்வாறு?

இந்த மாற்றம் எவ்வாறு ஏற்பட்டது என்பதை ஒருவராலும் கூற முடியாது. அது தானாகவே வளர்ச்சி அடைந்த ஓர் நிலை ஆகும். ஒவ்வொரு ஞாயிறும் சபை கூடியது. பிஷப் அல்லது ப்றிஸ்பிட்டர், டீக்கன்கள் ஆகியோர் அந்த கூடுகையில் காணப்பட்டார்கள். முதிர்ந்த ப்றிஸ்பிட்டர் தலைமை வகிப்பார். இதே முறையில் தான் இயேசுவின் சகோதரனான யாக்கோபு என்பவர் எருசலேமில் ஆதிச் சபையின் பிஷப்பாக செயல்பட நேர்ந்தது.

நாளடைவில் தலைமை வகிக்கும் முதியவர் அந்த சபையின் முக்கியத்துவம் வகித்தார். அவர் மற்றவர்களை விட வித்தியாசமான பொறுப்புகளை வகிக்கலானார். போகப் போக பிஷப், ப்றிஸ்பிட்டர், டீக்கன்கள் ஆகிய நிலைகள் தெளிவுபடலாயிற்று.

## கிறிஸ்தவத்தில் இரத்த சாட்சிகள்

கி.பி. 29 முதல் 313 வரை கிறிஸ்தவம் இரத்த சாட்சிகளின் மத்தியில் வளர்ந்தது. ரோமர்கள் கிறிஸ்தவர்களை ஒரு தனி கூட்டத்தாராகவும் ரோம சமுதாயத்தோடு ஒன்று கலவாத விகற்பமான ஒரு கூட்டத்தாராகவும் கருதினார்கள். கிறிஸ்தவர்கள் இரவு நேரங்களில் ஆண்களும் பெண்களுமாகக் கூடி அன்பின் விருந்து என்று கூறிக் கொண்டு எதைஎதையோ செய்கிறவர்கள் என்றும், “இது என் சரீரம், இது என் ரத்தம் இதை வாங்கிப் புசியுங்கள்” என்று சொல்லி நரமாம்சத்தை புசிக்கிறவர்களென்றும் வதந்திகளை கிளப்பினார்கள். எந்த தீங்கு ஏற்பட்டாலும் அதற்கு கிறிஸ்தவர்களே காரணமாக்கப்பட்டார்கள்.

### தெர்துள்ளியனின் குறிப்பு

தெர்துள்ளியன் என்பவர் இதைக்குறித்து எழுதுகையில் டைபர் ஆற்றில் தண்ணீர் அதிகரித்தாலோ, நைல் நதியில் தண்ணீர் குறைந்து

விட்டாலோ, வானங்கள் மழையை பொழியாவிட்டாலோ, பூமியில் நிலநடுக்கம் ஏற்பட்டாலோ, பஞ்சம், தொற்று வியாதி போன்ற பயங் கரங்கள் ஏற்பட்டாலோ உடன் தானே "கிறிஸ்தவர்களை சிங்கக் கெபி களுக்கு அனுப்புங்கள்" என்ற குரல் எழுப்பப்படும் என்று குறிப் பிடுகிறார். கிறிஸ்தவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்களுக்கு சாத்தானே காரணமாய் இருந்தான்.

## ட்ராஜனின் நாட்களில் (Trajan) (98-117 AD)

ட்ராஜன் என்ற சக்கிரவர்த்தி கிறிஸ்தவர்களின் ரகசியமான கூடுகைகளையும் சட்ட விரோதமாக்கினான். அவன் எருசலேமில் பிஷப்பாக இருந்த சிமியோன் என்பவரை அனேக சித்திரவதை களுக்குப் பின் சிலுவையில் அறைந்தான்.

## இக்னேஷியஸ் (115 AD)

அந்தியோக்கியாவில் பிஷப்பாக இருந்த இக்னேஷியஸ் என்பவர் காட்டு மிருகங்களுக்கு இரையாக எறியப்பட்டார். அவருடைய கடைசி வார்த்தைகள்:- "என்னை மிருகங்களின் உணவாக்கும் படி விட்டு விடுங்கள். நான் தேவனின் கோதுமை மணி, நான் மிருகங்களின் பற்களின் இடையில் அரைக்கப்பட்டு இயேசு கிறிஸ்துவின் பரிசுத்தமான அப்பம் ஆக்கப்படட்டும்", என்பதே. காட்டு மிருகங்கள் அவரை பீறி கொன்றன.

## கேட்றியன் நாட்களில் (Hedrian) (AD 117-138)

கேட்றியன் நாட்களில் ஒவ்வொரு கிறிஸ்தவனின் தலைக்கு மேலாக ஒவ்வொரு வாள் தொங்கவிடப்பட்டிருந்தது எனலாம். அந்நாட்களில் கொல்லப்பட்டவர்களில் முக்கியமானவர் அலெக்ஸாண்டறியா பிஷப் ஆவார்.

## சிம்பரோஸா (Symphorosa)

சிம்பரோஸா என்பவள் விக்கிரகங்களுக்கு படைக்க மறுத்தாள். அவளும் அவள் ஏழு பிள்ளைகளும் சித்திரவதை செய்யப்பட்டார்கள்.

## அன்றோனிநஸ், பயஸ் நாட்களில் (Antoninus, Pius) (AD 138-161)

இந்த மன்னனின் நாட்களில் ஸிமிர்னாவில் அனேக கிறிஸ்தவர்கள் காட்டு மிருகங்களுக்கு எறியப்பட்டார்கள். அனேகர் எரித்து கொல்லப்பட்டார்கள். ஆனால் ஒருவர் கூட முணுமுணுக்கவோ, சோகக் குரல் எழுப்பவோ இல்லை.

## போலிக்கார்ப் (Polycarp)

அந்நாட்களில் சித்திரவதை செய்யப்பட்டவர்களில் ஒருவர் போலிக்கார்ப் என்பவர் ஆகும். அவர் ஸ்மிர்னாவில் பிஷப்பாக இருந்தார். அவருக்கு வயது 86. எல்லாராலும் அன்பு பெற்றவர். அவரிடம் கருணை காட்டிய கொலையாளி இயேசுவை மறுதலித்து ஜீவனை காப்பாற்றுமாறு கூறிய போது போலிக்கார்ப் கூறிய வார்த்தைகளாவன:-

"86 வயது மட்டும் நான் இயேசுவை சேவித்தேன். அவர் எனக்கு எந்த தீங்கும் செய்யவில்லை. என்னை ரட்சித்த இப்படிப்பட்ட என் ராஜாவை நான் எப்படி மறுதலிக்க முடியும்?". என்பதே. அவர் உயிருடன் எரிக்கப்பட்டார். கொலையாளி தன் வாளை செலுத்தி துடித்துக் கொண்டிருந்த அவர் சரீரத்தின் துடிப்பை முடித்தான்.

## மார்க்கஸ் அரீலியஸ் அன்றோனிநஸ் நாட்களில் *( AD161 - 180)*

## போர்த்திநஸ்

போர்த்திநஸ் என்பவர் லியோன் பிஷப்பாகும். அவருக்கு வயது 90. அவர் போலிக்கார்ப்பை போல உயிருடன் எரிக்கப்பட்டார்.

## பெலின்டா

போர்த்திநஸ்- உடன் பெலின்டா என்ற அடிமைப்பெண் இருந்தாள். அவளும் இயேசுவுக்காக தைரியமாய் நின்றாள். அவளோடு கேட்கப்பட்ட எல்லா கேள்விகளுக்கும் "நான் ஒரு கிறிஸ்தவ பெண்" என்ற ஒரே பதிலை கூறிக்கொண்டே சாவை ஏற்றுக் கொண்டாள்.

## ஜெஸ்டின் மார்ட்டியர்

இவர் ஒரு தத்துவ மேதை. தத்துவங்கள் அவரை திருப்திப்படுத்த வில்லை. ஒரு நாள் கடற்கரையில் ஓர் வயோதிபன் இயேசுவை பற்றி கூறினான். அந்நேரமே அவர் இயேசுவை ஏற்றுக் கொண்டு சாட்சியாய் வாழ்ந்தார். AD *165* -ல் இரத்த சாட்சியாய் ஜீவனை விட்டார்.

## செப்டிமஸ் செவறஸ் நாட்களில் (Septimus, Severus) (AD 193-211)

இவன் நாட்களை குறித்து அலெக்ஸாண்றியாவில் உள்ள க்ளமண்ட் என்பவர் இவ்வாறு கூறுகிறார்:- "ஒவ்வொரு நாளும் நாங்கள் அனேக இரத்த சாட்சிகளை எங்கள் கண்கள் முன் பார்க்கி றோம். அனேகர் உயிரோடு எரிக்கப்படுகிறார்கள், அனேகர் சிலுவை யில் அறையப்படுகிறார்கள், அனேகர் சிரச்சேதம் பண்ணப்படுகிறார்கள்".

## பொட்டாமியானா (Potamiana)

இவள் மிக அழகு வாய்ந்த ஒரு இளம்பெண். அவளுடைய மன உறுதியால் கொலையாளிகள் கவர்ச்சி அடைந்தார்கள். அவளை சித்திரவதை செய்து நடத்திச் சென்ற போர் வீரன் திகைத்து நின்றான். அவள் இயேசுவுக்காக கொதிக்கும் கீலில் உருகிச் சேர்ந்தாள்.

## பெர்பெச்சுவா (Perpetua)

உபத்திரவ நாட்களில் உறுதியோடு நின்றவர்களில் இவளும் ஒருவர். அவளின் ஒரு பக்கம் தன்னையே சார்ந்திருந்த தள்ளாடின வயதை உடைய தன் தகப்பன். மறுபக்கத்தில் தன்னை பிரிக்காமல் இருக்க துடித்துக் கதறி அழுதுகொண்டிருக்கும் தன் பச்சிளம் குழந்தை. பெர்பெச்சுவா இவர்களின் நடுவில் தன்னை திடப்படுத்தி கொண்டு சாவை ஏற்றுக் கொண்டாள்.

### டேசியன் நாட்களில் (Decian) (AD 249-251)

டேசியன் தன் நாட்களில் ராஜ்யம் முழுவதிலும் உள்ள கிறிஸ்தவர்களை அழித்து கிறிஸ்து மார்க்கத்தையே துடைத்து மாற்ற திட்டமிட்டான். அவன் தன் சாம்ராஜ்யத்திலுள்ள ஒவ்வொரு வரும் கீழ் கண்டவாறு சான்றிதழ் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று கட்டளை பிறப்பித்தான்.

### சான்றிதழின் நகல்

பலி வழிபாட்டு உயர் அதிகாரி அவர்களுக்கு (Address) ............... இடத்தில் வசிக்கும் ....................... மகன் ........ வயது உள்ள .............................. எழுதி கொள்ளும் உறுதி மொழி. நான் எப்போதுமே ரோம தெய்வங்களுக்கு பலி வழிபாடு செலுத்தி வருகிறேன். இப்போது உங்கள் முன்னிலையில் முறைப்படி பலி வழிபாடு செலுத்தி பலி வழிபாட்டு பண்டத்தைப் புசித்திருக்கிறேன்.

கையொப்பம்

*1* - ம் சாட்சி

*2* - ம் சாட்சி

இந்த சான்றிதழ் பெற்றுக் கொள்ளாதவர்கள் கைது செய்யப்பட்டு சித்ரவதை செய்யப்பட்டார்கள்.

### வல்லேரியன் நாட்களில் (AD 253 - 260)

இவன் கிறிஸ்தவ பிஷப்புகளையும் ப்றிஸ்பிட்டர்களையும், டீக்கன்களையும், வாளினால் வெட்டி கொலை செய்யும் படி கட்டளையிட்டான்.

### டயக்கிளீசியன் நாட்களில் ( AD 284 - 305)

டயக்கிளீசியன் ஆரம்பத்தில் அமைதி காத்தான். அவன் மனைவி யும், மகளும் கிறிஸ்தவர்களுக்கு உதவியாய் இருந்தார்கள். ஆனால் AD *303* -ல் அவன் சடிதியில் தன் வழிகளை மாற்றிக் கொண்டான்.

ஆலயங்களை இடிக்கவும், கிறிஸ்தவ நூல்களை எரிக்கவும், கிறிஸ்தவ ஆராதனைகளை நிறுத்தி விடவும், கிறிஸ்தவர்களை கைது செய்யவும் கட்டளை இட்டான். கிறிஸ்தவர்கள் ரோம கடவுள்களுக்கு பலிவழி பாடு செலுத்த வற்புறுத்தப்பட்டார்கள்.

## இந்நாட்களை குறித்து இசுபியஸ்

இசுபியஸ் என்ற வரலாற்று ஆசிரியர் 'Ecclesiastical Histroy' என்னும் நூலில் இந்நாட்களின் சம்பவங்களைக் குறித்து :-

"ஆலயங்கள் இடிக்கப்பட்டன. வேத புத்தகங்கள் சந்தை வெளிக ளில் எரிக்கப்பட்டன. பிஷப்புகளும், ப்றிஸ்பிட்டர்களும், பிடிக்கப் பட்டு சிறைச் சாலைகளில் கூட்டமாக திணிக்கப்பட்டு கொலை செய்யும் படி வைக்கப்பட்டார்கள்." என குறிப்பிட்டுள்ளார்.

## பிறிஞ்ஜியாவின் சபை (Frygia)

பிறிஞ்ஜியா கிராமத்தார் முழுவதும் அவர்கள் சபையில் குழுமி இருந்து ஆராதித்து கொண்டிருந்தார்கள். கொலையாளிகள் ஆலயத்தை சுற்றித் திரிந்து தீ வைத்தார்கள். கிராமத்தார் ஆலயத்தில் கருகி செத்தார்கள்.

மேலும் கிறிஸ்தவர்கள் மூடைகளில் ஒன்றாக கட்டப்பட்டு கடலில் எறியப்பட்டார்கள். இப்படிப்பட்ட கொடும் செயல்களால் ரோமா ஸாம்ராஜ்யத்திலுள்ள கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டார்கள்.

## சிறியன் கிறிஸ்தவர்கள் இந்தியாவுக்கு

கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகளில் ரோம சாம்ராஜ்யத்துக்குட் பட்ட நாடுகளில் கிறிஸ்தவர்கள் பெருமளவில் துன்பப்படுத்தப்பட் டார்களென்று பார்த்தோம். இந்நாட்களில் சீரியா தேசத்தில் கிறிஸ்தவர் களுக்கு பெரும் நெருக்கடி ஏற்பட்டபடியால் கி.பி. 4-ாம் நூற்றாண்டில் ஒரு கூட்டம் சீரியர்கள் வாழ்வு தேடி இந்தியாவுக்கு வந்தார்கள். அவர்கள் சேர நாட்டில் குடியேறினார்கள். அங்கு அவர்கள் ஓர் தனி கிறிஸ்தவ இனமாக வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் தங்கள் கிறிஸ்தவ

கொள்கைகளை மற்றவர்களுக்கு பரப்பவில்லை. ஆனாலும் பிற்காலத்தில் இந்தியாவுக்கு வந்த ஐரோப்பிய கிறிஸ்தவர்களின் வழியாய் தங்கள் நிலைகளையும் மாற்றிக் கொண்டார்கள். அவர்கள் பின்நாட்களில் சிறியன் கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

## பாபிலோனிய மதம் கிறிஸ்தவத்தில்

4-ம் நூற்றாண்டு முதல் திருச்சபையின் நிலை மாற்றம் அடைந்தது. கான்ஸ்டன்டைன் என்பவன் AD 306 முதல் ரோமை சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியானான். அவன் தன் இக்கட்டு நேரத்தில் வானத்தில் ஒரு சிலுவை அடையாளத்தையும் விசேஷ காட்சிகளையும் கண்டு சிலுவை அடையாளத்தோடு போருக்குச் சென்று வெற்றி பெற்று ரோம சக்கர வர்த்தியானான். அவன் கிறிஸ்தவனானது மட்டுமல்ல, கிறிஸ்தவத்தை தன் அரசாங்க மதமாக்கினான்.

### உபத்திரவங்களுக்கு தீர்வு

கான்ஸ்டன்டைன் கிறிஸ்தவத்தை அரசாங்க மதம் ஆக்கியதோடு கிறிஸ்தவர்களின் துன்பங்களும் சித்திரவதைகளும் நின்று போயிற்று. கிறிஸ்தவர்களுக்கு அனேக சலுகைகள் அளிக்கப்பட்டது. ஆனால், உண்மையில் கிறிஸ்தவம் ஓர் இருண்ட காலத்தில் பிரவேசித்தது என்றே சொல்ல வேண்டும்.

### கான்ஸ்டன்டைன் கிறிஸ்தவத் தலைவன்

பாபிலோனிய மதம் ரோமுக்கு எடுத்துச் செல்லப்பட்டதையும் ரோம சக்ரவர்த்தியான ஜீலியஸ் சீசர் பாபிலோனிய மதத்தின் தலைவன் (Pontifex maximus) ஆனதையும் முன்னே பார்த்தோம். ஜூலியஸ் சீசருக்குப் பின் இருந்த ஒவ்வொரு மன்னர்களும் பாபிலோனிய மதத்தின் தலைவர்களாக இருந்து வந்தனர். கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டு அதன் தலைவனாக தன்னை ஏற்படுத்திக் கொண்ட கான்ஸ்டன்டைன் சாத்தானின் மதமான பாபிலோனிய ரகசியத்தின் (மதத்தின்) தலைவனாகவும் அதாவது தலைமை புரோகிதன் (Pontifex maximus) ஆகவும் இருந்தான்.

## ஏற்பட்ட தீமைகள்

பாபிலோனிய மதத்தின் தலைமை புரோகிதனான காண்ஸ்டன்டைன் கிறிஸ்தவ மதத்தின் தலைமை ஸ்தானத்தையும் தன்னோடு வைத்துக் கொண்டபடியால் அனேக தீமைகள் கிறிஸ்தவத்துக்கு ஏற்பட்டன. அவையாவன :-

பாபிலோனிய மதத்தவரான புறஜாதியாரை கான்ஸ்டன்டைன் மனமாற்றம் இல்லாமல் கிறிஸ்தவர்களாக்கினான். புறஜாதியாரின் விக்கிரகக் கோவில்களை கிறிஸ்தவ தேவாலயங்களாக்கினான். பாபிலோனிய மதப் புரோகிதர்களை கிறிஸ்தவ பிஷப்புகளாக்கினான். பிஷப்புகளுக்கு புகழும் செல்வாக்குகளும் அளிக்கப்பட்டது.

## ரோம பிஷப் பாபிலோனிய மதத் தலைவனாதல்

ரோமிலுள்ள பிஷப்புக்கு அதிக மதிப்புகளும் அதிகாரங்களும் கொடுக்கப்பட்டது. AD 378 -ல் ரோம பிஷப்பாக இருந்த டெமாசஸ் என்பவர் பாபிலோனிய மதத் தலைவராக்கப்பட்டு அவர் தலைமை போந்திப் (Pontifex maximus) பட்டமும் பெற்றுக் கொண்டார்.

## கிறிஸ்தவத்தில் பாபிலோனிய மதத் திணிப்பு

மேற்கூறியபடி ரோமாவிலுள்ள கிறிஸ்தவம் பாபிலோனிய மதத்தோடு இணைக்கப்பட்டது. அதாவது, பாபிலோனிய இரகசியம் கிறிஸ்தவத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. எல்லாமே சடங்காச்சாரங் களானது. மறுபடியும் பிறக்கும் இரகசியம், புண்ணிய ஜலத்தின் ரகசியம் பலிபீடத்தின் இரகசியம் போன்ற அனைத்தும் பாபிலோனிய மதத்தால் ஏற்பட்டவையாகும்.

## தாயும், குழந்தையும்

பாபிலோனிய மதத்தின் தாயும் குழந்தையும் (செமிராமிஸ்சும், நினஸ்சும்) கிறிஸ்தவத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டு கன்னிமரியாளும் குழந்தை இயேசுவுமாக்கப்பட்டார்கள். பாபிலோனிய மதத்தாரின்

பண்டிகைகளின் ஸ்தானத்தில் கிறிஸ்மஸ், ஈஸ்டர் போன்ற பண்டிகைகள் ஏற்படுத்தப்பட்டது.

## தலைநகர் மாற்றம்

கி.பி. 324-ல் கான்ஸ்டன்டைன் தன் தலைநகரை ரோமிலிருந்து பைசான்றியத்துக்கு (Byzantium) மாற்றி அதை கான்ஸ்ற்றான்டி நோப்பிள் (Constantinople) என்று அழைத்தான்.

ரோம சாம்ராஜ்யம் (Western Empire) மேற்கு சாம்ராஜ்யம் என்றும் கிழக்கு சாம்ராஜ்யம் (Eastern Empire) என்றும் இரண்டாக்கப்பட்டது.

## அப்போஸ்தல விசுவாசப் பிரமாணம்

கான்ஸ்டென்டைன் காலத்தில் தீமைகள் பல உண்டானாலும் சில நன்மைகளும் உண்டாயிற்று. காண்ஸ்டென்டைன் கி.பி. 325 - ல் 318 பிஷப்புகளை நிசியா என்ற இடத்தில் கூட்டினான். அங்கே நிசியன் விசுவாசப்பிரமாணம் அங்கீகரிக்கப்பட்டது. கி.பி. 381-ல் காண்ஸ் டான்டி நோப்பிளில் கூடிய கவுன்சிலில் அது விரிவுபடுத்தப்பட்டது.

## புதிய ஏற்பாடு (Canon)

கி.பி முதலாம் நூற்றாண்டு இறுதிக்கு முன் புதிய ஏற்பாட்டு புத்தகங்கள் ஒன்று சேர்க்கப்பட்டது. இன்றைய ரூபத்தில் அதை முதல் முதலாக குறிப்பிட்டவர் (கி.பி. 367-ல்) அலெக்ஸாண்டிரியாவிலுள்ள அத்தநேசியஸ் என்பவராகும். அதற்கு முன்னதாகவே அந்த ஒழுங்கு ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது.

## திருச்சபை ரோமப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்

ரோமப் பேரரசு கி.பி. 476 வரை நீடித்தது. விசிகோத்ஸ், அலறிக் என்பவன் கீழ் படை எடுத்து ரோமை வீழ்த்தினார்கள். அதோடு மேற்கு சாம்ராஜ்யம் (Western Empire) நின்று போயிற்று. கிழக்கு சாம்ராஜ்யம் (Eastern Empire) அல்லது பைசான்றியம் கி.பி. 1453 -ல்

ஆட்டோமான் (Ottoman Turks) துருக்கிகளால் வீழ்த்தப்படும் வரை 1000 வருடங்கள் நீடித்தது.

## ரோம சபையும் போப்பும்

ரோம் நகரம் ரோம சாம்ராஜ்யத்தின் தலை நகராயிருந்தபடியாலும் பேதுரு பவுல் ஆகிய அப்போஸ்தலர்கள் ரோமில் இரத்த சாட்சிகளாய் மரித்து அங்கேயே அடக்கம் பண்ணப்பட்டிருந்ததாலும் ரோமிலுள்ள சபை முக்கியமானதாக கருதப்பட்டிருந்தது.

## போப் என்னும் பதவி

ரோம சாம்ராஜ்யத்தின் வீழ்சிக்குப் பின், ரோமிலுள்ள சபை ஐரோப்பாவின் ஓர் முக்கியமான அமைப்பாக வளர்ந்து வந்தது. ரோமிலுள்ள பிஷப்புக்கு மற்று பிஷப்புகளை விட அதிகாரம் அளிக்கப்பட்டது. கி.பி. 5-ம் நூற்றாண்டிலிருந்து ரோமா பிஷப், 'போப்' என்று அழைக்கப்படுகிறார். (முதல் போப் Gregory I)

### சடங்காசாரங்கள்

போப்பின் அதிகாரங்கள் மிகவும் அதிகரித்தது. அதோடு சடங்கா சாரங்களும் மற்றும் தீய பழக்க வழக்கங்களும் ஆதி கிறிஸ்தவ நெறிக ளுக்கெதிரான கொள்கைகளும் கிறிஸ்தவத்தில் அதிகரித்துக் கொண்டே வந்தது.

அதிகாரம் 16

# அரேபியாவில் இஸ்லாமிய மதம்

ஆபிரகாமினால் கீழ் தேசங்களுக்கு அனுப்பி விடப்பட்ட அவன் சந்ததியார் அரபு தேசத்தில் குடியிருந்தார்கள். அவர்கள் அராபியர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

## இஸ்லாம்

இஸ்லாம் என்பது அராபிய நபியான முகமது என்பவரால் ஸ்தாபிக்கப்பட்ட மதமாகும். இஸ்லாம் என்றால் கீழ் அடங்குவது; கடவுளுக்கு விட்டுக் கொடுப்பது என்பது பொருள்.

## முகமதுக்கு முன் அரேபியா

மெக்கா, மெதீனா ஆகிய பட்டணங்கள் அரேபியாவின் சிறு பட்டணங்களாகும். மக்காவில் பல பிரிவினருக்குள் சண்டை ஏற்படுவது வழக்கமாயிருந்தது. முகமது மக்காவிலுள்ள ஒரு சிறு குடும்பத்தில் வாழ்ந்தார்.

## அரேபியாவில் காபா

ஆபிரகாம் ஞாபகக்கல் வழிபாடு செய்தது போல அவன் சந்ததியாரும் செய்து வந்தார்கள். முகமதின் நாட்களுக்கு முன்பே மக்கா மதபரமான ஒரு முக்கிய மையமாயிருந்தது. காபா அதின் புனித

ஸ்தலம். ஒரு சிறு கற்கட்டிடமும் அதின் தென்கிழக்கு மூலையில் ஒரு கறுப்புக் கல்லும் இருந்தது. அங்கு செல்லும் பக்தர்கள் காபாவைச் சுற்றி வந்து கறுப்புக் கல்லை முத்தம் செய்தார்கள். இந்நாட்களிலும் அங்கு வருகை தரும் அராபியர்கள் எந்த நாட்டை சேர்ந்தவர்கள் ஆனாலும் திராவிட உடை அணிந்து அதாவது இடுப்பில் ஒரு வேட்டியும் மேலே ஒரு துண்டும் கட்டி கொண்டு காபாவை சுற்றி வந்து கறுப்புக் கல்லை முத்தம் செய்கிறார்கள்.

### அல்லா

முகமதுக்கு முன் மக்காவின் முக்கிய கடவுள் அல்லா என்று அழைக்கப்பட்டார். அல்லா என்றால் 'கடவுள்' அதாவது உயர்ந்த கடவுள் என்பது பொருள். அராபியர்கள் மற்று தேவதைகளையும் வணங்கி வந்தார்கள்.

## முற்கால தொழுகை

அராபிய மக்கள் ஆவிகளையும் நம்பினார்கள். கிணறுகளின் ஆவிகள், ஊற்றின் ஆவிகள், பாறையின் ஆவிகள், போன்றவைகளை நம்பினார்கள். புனித கற்களில் ரத்த பலிகளை செலுத்தியிருந்தார்கள். கானானிய மக்களின் தொழுகை முறைகளுக்கு ஒத்த தொழுகை முறை காணப்பட்டது.

## கிறிஸ்தவர்கள் அரேபியாவில்

ரோம சக்கரவர்த்திகளால் துரத்தப்பட்ட அனேக யூதர்கள் மக்காவில் வசித்திருந்தார்கள். மட்டுமல்ல, அனேக கிறிஸ்தவர்களும் அங்கே வசித்திருந்தார்கள். யூதர்களும், கிறிஸ்தவர்களும் ஒரே 'புத்தகத்தின்' மக்கள். அவர்கள் ஒரே கடவுளை நம்பினார்கள். இது இஸ்லாமுக்கு வழி காட்டியது.

### முகமது

முகமது AD 570 -ல் பிறந்தார். அவர் தந்தை அப்துல்லா. அவர் முகமது பிறக்குமுன் இறந்தார். அவர் தாயார் அவர் 6-வது வயதில்

இறந்தார். எனவே முகமது தன் சித்தப்பாவான அபுதாலிப் உடன் வளர்ந்து சீரியா போன்ற இடங்களில் சஞ்சரித்தார்.

## விவாகம்

முகமது தன் 25-வது வயதில் கதீஜா என்ற 40 வயது பெண்ணை விவாகம் பண்ணினார். கதீஜா அவருக்கு ஆறு பிள்ளைகளை பெற்றாள். ஒரு மகளான பாத்திமா என்பவள் அலி என்பவரை மணந்தாள்.

## தரிசனம்

முகமது தன் 40-வது வயதுக்குப் பின் தீர்க்கதரிசன உரைகளுக்கு செவி கொடுத்து தியானங்களில் ஈடுபட்டார். ஒரு இரவில் தூதனான காபிரியேல் அவருக்கு தரிசனமாகி அவரை கடவுளின் தூதுவனாக அழைத்ததாக கூறப்படுகிறது. பயமடைந்த முகமதை கதீஜா தேற்றினாள். மறுபடியும் பல தரிசனங்கள் கிடைக்கவே ஊக்கமடைந்து தம் கருத்துக்களை மற்றவர்களுக்கு தெரிவித்தார்.

## கதீஜா மரணம்

சில அராபியர்கள் முகமதை பின்பற்றினார்கள். அதே வேளையில் எதிர்ப்பும் வலுக்க ஆரம்பித்தது. ஏனென்றால் அவர் விக்கிரகங்களை இகழத் தொடங்கினார். AD 619-ல் கதீஜா இறந்தார். பின்பு முகமது சாடா என்ற விதவையையும் அயிஷா என்பவளையும் மணந்தார்.

## ஹிஜ்றா

மதீனா பட்டணத்திலிருந்து மக்காவுக்கு புனித யாத்திரை வந்த சிலர் முகமதின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் எண்ணிக்கை அதிகரித்தது. அப்போது மக்காவில் முகமதை எதிர்த்த வர்கள் தடைகளை ஏற்படுத்தினார்கள். எனவே முகமது தன் பின்னடி யார்களை மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஓடிப் போகச் சொன்னார். பின்பு முகமதும் மதீனாவுக்கு ஓடிப் போனார். அவர் ஓடிப்போன பாதை ஹிஜ்றா என்று அழைக்கப்படுகிறது. அது முஸ்லீம் கால அட்டவணையின் ஆரம்பமாகும். *(AD. 622)*

## முகமது மதீனாவில்

மதீனாவில் முகமது ஒரு கூட்டத்தாரின் தலைவனானார். தன் கொள்கைகளை பரப்பி மக்களை ஒன்று படுத்தினார். யூதர்களைப் போல தன் சீஷர்களையும் எருசலேமுக்கு நேராக நின்று பிரார்த்தனை செய்யக் கட்டளையிட்டார். ஆனால் யூதர்கள் கேலி செய்த போது மக்காவுக்கு நேராக திரும்பி நின்று பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார் கள். இஸ்லாம் அராபியர்களுடைய தனி மதம் ஆனது. ஆனாலும் ஆபிரகாம் நாட்டியதாக கருதப்படும் காபா வழியாகவும் வேதாகம வழியாகவும் அவர்களுக்கு யூதர்களோடு அனேக தொடர்புகள் காணப்படுகிறது.

## புனிதப் போர்

அரேபியா முழுவதையும் இஸ்லாம் மதத்தில் கொண்டு வரவும், காபாவில் விக்கிரக வழிபாட்டை முறியடிக்கவும், யூத ஜனங்களை ஒழித்துக் கட்டவும் முகமது திட்டமிட்டார். அதற்கு அவர் புனிதப் போரைக் குறித்து கற்பித்தார். புனிதப் போர் (Holywar) அல்லது ஜிகாத் (Jihad) மக்களை கவர்ந்தது. முகமது மதீனாவில் பெரும் வெற்றி பெற்றார்.

## மக்காவினர் போருக்கு

AD 625-ல் மெக்காவினர் 3000 ஆட்களோடு மதீனாவை ஆக்கிர மித்தனர். முதலில் முகமது தோல்வியடைந்தார். அப்போது புனிதப் போரில் விசுவாசத்தோடு இறந்து போகும் போர் வீரர்களுக்கு பரதீசை அனேக கவர்ச்சிகளோடு வாக்களித்தார். அனேகம் பேர் போரில் சேர்ந்து கொண்டு வீரமாய் போராடியதால் வெற்றி பெற்றார்.

## மக்காவை பிடித்தனர்.

போரில் வென்றதோடு மக்காவினரோடு உடன்படிக்கை செய்து கொண்டனர். அதின் படி மெக்காவுக்கு புனித யாத்திரை செய்ய உரிமை பெற்றுக் கொண்டார். ஆனால் மறுபடியும் மக்காவினர்

எதிர்த்த படியால் AD 630-ல் முகமது பத்தாயிரம் வீரர்களோடு சென்று மக்காவை பிடித்துக் கொண்டார். அங்கு காபாக் கல்லை தொட்டு கடவுள் பெரியவர் Allahu Akbar (அல்லாகு அக்பர்) என்றார். சேனையும் மறுமொழி முழக்கியது. முகமது விக்கிரகங்களை ஒழித்து எதிரிகளை கீழடக்கி மதீனாவுக்கு திரும்பினார்.

## மரணம்

முகமது வயிற்று வலியால் கஷ்டப்பட்டார். AD 632-ல் கடும் ஜுரத்தால் பிடிக்கப்பட்டு காலமானார்.

## குர்ரான்

குர்ரானில் 114 அதிகாரங்கள் (Chapter) 'சுராக்கள்' உண்டு. குர்ரானின் முதல் சுராவின் (அதிகாரம்) தலைப்பு 'பிஸ்மில்லா' என்பதாகும். அதாவது In the Name of God என்பதாகும்.

## முதல் சுரா ஆரம்பிப்பது:-

Praise be to God, Lord of the worlds,
The compassionate, the merciful.
King on the day of Judgement.
Thee only do we worship,
and to Thee do we cry for help
Guide Thou us on the straight path,

The path of those to whom Thou
hast been gracious,
with whom Thou art not angry,
and who go not astray.

## பொய் கடவுள்கள்

சாத்தானைப் பற்றியும் ஜின்னைப் பற்றியும் (ஆவிகள்) குர்ரானில் கூறப்படுகிறது. ஒரே தேவன் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. பொய்க் கடவுள்கள் பழிக்கப்படுகின்றனர்.

## குர்ரானும், வேதாகமமும்

குர்ரானில் முகமது அல்லாவின் அப்போஸ்தலன் அல்லது 'ரசூல்' (Rasul) என்று கூறப்படுகிறது. மோசே, இயேசு ஆகியோரைப் போல முகமதும் ஒரு அப்போஸ்தலன் ஆகும். ஆபிரகாம் அராபியரின் முற்பிதா. குர்ரானில் வேதாகமத்திலுள்ள அனேக காரியங்கள் குறிப்பாக படைப்பு, ஆதாமின் வீழ்ச்சி, ஆபிரகாமின் வாழ்க்கை ஆகியவைகளைக் குறித்து கூறப்படுகிறது. பழைய ஏற்பாட்டு புத்தகங்கள் சரியாக வாசிக்காத குறைபாடுகளையும் காணாலாம். அரேபியாவிலிருந்த யூதர்களிடம் பழைய புதிய ஏற்பாட்டு சம்பவங்களைக் குறித்து அறிந்து கொண்டு அவைகளை அடிப்படையாகக் கொண்டு பல காரியங்கள் குர்ரானில் எழுதப்பட்டதாக கூறப்படுகிறது.

## குர்ரான் எழுதப்பட்டது

முன்பு குர்ரான் துண்டுப் பேப்பர்களிலும், கற்களிலும், பனை ஓலைகளிலும், தோல் துண்டுகளிலும் மனித இருதயங்களிலும் எழுதப் பட்டிருந்தது. பின்பு அபுபெக்கரின் ஆணைப்படி அவை சரியாய் எழுதப்பட்டது. குர்ரான்படி அதில் எழுதப்பட்டவை எல்லாம் கடவுள் வார்த்தையும் அழிவில்லாதவையும் ஆகும்.

## விசுவாச அறிக்கை

முஸ்லீம்கள் தங்கள் விசுவாசத்தை தினமும் 5 தடவை அறிக்கை செய்ய வேண்டும். கடவுள் பெரியவர். அல்லாவைத் தவிர வெறொரு தேவன் இல்லை என்று நான் அறிக்கை செய்கிறேன். முகமது, அல்லாவின் அப்போஸ்தலன் என்றும் அறிக்கையிடுகிறேன்.

*(அல்லாஹு அக்பர், லாயில்லாஹா இல்லல்லாஹு முகமது றசூலு-ல்லா)*

(Allahu Akbar, Laillaha, illallahu Mohammad Rasulu llah)

## தொழுகை

ஒரு முஸ்லீம் எங்கிருந்தாலும் பாயை விரித்து மக்காவின் திசையை நோக்கி பிரார்த்தனை செய்ய வேண்டும். (mosque) அல்லது பள்ளி என்றால் அடிபணிந்து கொள்ளுகிற இடம் என்பது பொருள். அங்கு விக்கிரகங்களோ, படங்களோ வைக்கப்படுவதில்லை. பாடற்கருவிகள் உபயோகிக்கப்படுவதில்லை. போதிப்பவன் குர்ரானை போதிப்பான். தர்ம்மம் செய்யவேண்டும். நோன்பு (Fasting) ஆசரிப்பதுண்டு. றம்சான் மாதத்தில் காலை முதல் மாலை வரை சாப்பிடல் ஆகாது. வாழ்க்கையில் ஒரு முறையாவது மக்காவுக்கு புனித பயணம் செய்து காபாக் கல்லை ஏழு தரம் சுற்றி முத்தமிடுவது மேன்மையானது.

## சமுதாய ஆசாரம்

முஸ்லீம்களுக்குள் சகோதரத்துவம் இருக்க வேண்டும். தேவனுக்கு முன் எல்லாரும் சமம்.

## பெண்கள்

பெண்கள் பொது ஆராதனைகளில் கலந்து கொள்வதில்லை. முஸ்லீம் சட்டப்படி நாட்டின் தலைவன் தேவனே. காலிப்புகள் அவரால் ஏற்படுத்தப்பட்டவர்கள்.

வாரீஸ் உரிமை, வரதட்சனை விவாகரத்து, அனாதைகளை பராமரித்தல் போன்றவற்றிற்கு போதனைகள் உண்டு. நான்கு மனைவி களுக்கு அனுமதி உண்டு. மறு மனையாட்டிகளுக்கு வரம்பு கிடையாது. ஆண்கள் எளிதில் விவாகரத்து செய்ய வாய்ப்பு உண்டு.

## மரித்தவனை அடக்கம் செய்வது

பழங்கால ஆசாரப்படி மரித்த அன்று அல்லது மறுநாள் அடக்கம் செய்ய வேண்டும். புனிதர்களை வணங்கும் முறையும் உண்டு. மந்திர வாதம், பிசாசுபிடி, கண்தோஷம் முதலியவற்றிலிருந்து விடுதலை பெற 113,114 சுராக்கள் பயன்படுத்தப்படுவதுண்டு.

## இஸ்லாம் பரவுதல்

AD 632-ல் முகமது மரித்த போது அரேபியா முஸ்லீம் ஆட்சியில் இருந்தது. 10 வருடங்களில் சீரியா, பலஸ்தீனா, மெசப்பட்டோமியா, எகிப்து ஆகிய நாடுகள் முஸ்லீம் ஆட்சிக்குள்ளானது. பிந்திய நாட்களில் காலிப்புகள் ராஜாக்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

## தலைநகர் மாற்றம்

உமாயத் (ஒரு வம்சம்) இராஜாக்கள் தலைநகரை சீரியாவுக்கு மாற்றினார்கள். முஸ்லீம்கள் ஐரோப்பா முதல் இந்தியா, சீனா மட்டும் நுழைந்தார்கள். AD 705 -ல் அரபு படைகள் இந்தியாவில் புகுந்து (Sindh) சிந்தை கைப்பற்றியது.

## மீண்டும் தலைநகர் மாற்றம்

உமாயத் வம்சத்துக்குப் பின் AD 750 -ல் அப்பாசிட் வம்சம் எழுந்தது. அப்போது தலைநகர் சீரியாவிலிருந்து மெசபட்டோமியா வுக்கு மாற்றப் பட்டது. காலிப்-ன் அதிகாரம் மிகவும் உயர்ந்தது. சாம்ராஜ்யம் பல சிறு நாடுகளாக பிரிந்தது.

## உடைவு

13 -ம் நூற்றாண்டில் அரபு ராஜ்யங்கள் செங்கிஷ்கான் என்பவனால் உடைக்கப்பட்டது. அவர்கள் (mongol) பெர்சியரின் அதிகாரத்தை முறியடித்து பாக்தாதை பிடித்துக் கொண்டார்கள்.

## துருக்கிகள்

AD 1453-ல் துருக்கிகள் காண்ஸ்டான்டி நோபிளை பிடித்து கொண் டார்கள். அவர்கள் காலிப் என்ற ஸ்தானத்தை வைத்துக் கொண்டார் கள். துருக்கிகளின் கீழ் அரபு உலகம் அனேக காலம் நிலைத்திருந்தது.

### சிலுவை போர்கள் (AD 1095 - 1291)

சிலுவைப் போர்கள் 200 ஆண்டுகள் நடந்தது. முஸ்லீம்கள் பரிசுத்த நகரமான எருசலேமை பிடித்துப் கொண்டார்கள். எருசலேமி லிருந்து முஸ்லீம்களை வேளியேற்றுவதற்காக இந்த சிலுவை போர்கள் நடத்தப்பட்டது. 200 ஆண்டுகள் நடந்த இந்தப் போர்கள் கிறிஸ்தவர் களுக்கு பெரும் தோல்வியில் முடிந்தது. மாபெரும் உயிர்ச்சேதமும் ஏற்பட்டது.

அதிகாரம் 17

# திராவிடர்களின் சைவ, வைணவ மதங்கள்

(தொடர் - 1)

## பக்தி இயக்கங்களும், கோயில்களும்

தோமாவால் போதிக்கப்பட்ட கிறிஸ்தவக் கொள்கைகளை (ஆதி இந்திய கிறிஸ்தவத்தை) திராவிட மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். அக்கொள்கைகளை திருவள்ளுவரின் திருக்குறள் மேலும் தெளிவுபடுத்தி வலுப்படுத்தியது.

### தோமாவின் கொள்கைள் திருக்குறளில்

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் தோமாவின் உபதேசக் கொள்கைகளை விளக்கிக் காட்டும் ஓர் சிறந்த நூல் என்று இந்நாட்களில் நிரூபிக்கப்படுகிறது. கிறிஸ்தவ நோக்கில் படித்தால் மட்டுமே திருக்குறளின் கருத்துக்களை சரியான முறையில் புரிந்து கொள்ள முடியும். எடுத்துக்காட்டாக ஓரிரு குறிப்புகள் மட்டும் கீழே தரப்படுகிறது.

### திருக்குறளில் இறை வாழ்த்து

திருவள்ளுவர் பாயிரமாகிய முதல் நான்கு அதிகாரங்களை முகவுரையாக கூறுகிறார். அவற்றில் முதல் மூன்று அதிகாரங்களும்

இறைவனை வாழ்த்திப் பாடுவது ஆகும். திருவள்ளுவர் கடவுளின் திருத்துவக் கொள்கையை இங்கே விளக்குகிறார். அவர் கடவுளை பிதா, பரிசுத்த அவி, குமாரன் ஆகிய திரித்துவ தேவன் என்ற நிலையில் கடவுள், வான், நீத்தார் என்று கூறி வாழ்த்துகிறார்.

## கடவுளின் திரித்துவம்

கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை ஆகிய மூன்று அதிகாரங்களில் திரித்துவ கடவுளை வாழ்த்துகின்ற சில வார்த்தைகள் மட்டும் உதாகரணமாக கீழே தரப்படுகிறது.

விவிலியம் 'ஆதியிலே தேவன்' என்று ஆரம்பிக்கும் வண்ணமாய் திருக்குறளின் முதல் குறள் 'ஆதிபகவனை' குறிப்பிடுகிறது. பகவன் என்றால் தன்னைத் தானே பகுத்து நிற்பவன் என்பது பொருள். கடவுள் தன்னை பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் என மூன்றாக பகுத்து நிற்கிறார்.

## மலர்மிசை ஏகினான்

விவிலியத்தில் நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்கள் என்று கூறியிருப்பதை பார்க்கிறோம். திருக்குறளில் கடவுள் இதய மாகிய தாமரையில் வீற்றிருப்பவர் என்று கூறப்பட்டுள்ளது.

## ஐந்தவித்தான்

திருக்குறளில் 6-வது குறள்பா :-

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடு வாழ்வார் "

பொறியாகிய கருவியில் (சிலுவையில்) தன் ஐந்து புலன்களையும் அவித்தவனாகிய அல்லது பலியாக்கியவனாகிய இறைவன் காட்டிய வழி நிற்பவன் நீடுவாழ்வு (நித்திய ஜீவன்) பெற்றுக் கொள்வான் என்பது இதன் பொருள். இது மனிதனாய் அவதரித்து சிலுவையில் தன்னை பலியாக்கிய இயேசுக் கிறிஸ்துவை மட்டுமே குறிப்பதாகும்.

## பரிசுத்த ஆவியை வாழ்த்தும் வான் சிறப்பு

விவிலியத்தில் பரிசுத்த ஆவியை மழையாகவும் முன்மாரி பின்மாரியா கவும் கூறப்படுகிறது (ஓசி. 6 : 3). திருவள்ளுவர் பரிசுத்த ஆவியை வான் சிறப்பாக வர்ணிக்கிறார்.

## குறள் 20

"நீரின்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின்று அமையாது ஒழுக்கு"

நீரில்லாமல் இந்த உலகம் இயங்காது. அதுபோல பரிசுத்த ஆவியின் அபிஷேகம் இல்லையெனில் உலக மக்களிடம் ஒழுக்கம் நிலைநிற்க முடியாது என்பது பொருள்.

## குமாரனை வாழ்த்தும் நீத்தார் பெருமை

குமாரனாகிய கடவுளைப் பற்றி சொல்லும் போது அவர் வானுலகை விட்டு மண்ணுலகிற்கு வந்து தன்னைத் தானே நீத்தவர் (பலியாக்கியவர்) என்றும், அந்த நீத்தாருடைய பெருமையை கூறும் நூலே (விவிலியம்) சிறந்த நூல் என்றும் விளக்கப்படுகிறது.

## உயிர்த்தெழுந்தவர்

அவர் தன்னைத் தானே பலியாக்கிய போதிலும் மீண்டும் புத்துயிர் பெற்றவர் அதாவது உயிர்த்தெழுந்தவர் (குறள் 24).

அவர் புத்துயிர் பெற்றதற்கு தேவதூதர்களால் சாட்சி பெற்றவர் (குறள் 25).

## நீத்தார் பெருமையை விளக்கும் விவிலியம்

அவர் பெருமையைக் குறித்து நிலத்து மறைமொழியாகிய விவிலியம் விளக்குகிறது (குறள் 28).

அவர் இவ்வுலகத்திலுள்ள அனைத்து உயிர்களையும் இரட்சிக்கும் அந்தணர் (குறள். 30).

இவ்வாறு திருவள்ளுவர் குமாரனாகிய நீத்தாரை வாழ்த்துகிறார்.

இதுபோன்று திருக்குறளில் எல்லா குறள்பாக்களிலும் கிறிஸ்தவ கொள்கைகள் நிறைந்திருப்பதை குறித்து Dr. தெய்வனாயகம் போன்ற அறிஞர்கள் விளக்கம் தருகிறார்கள்.

## பக்தி இயக்கங்கள்

தோமாவின் புது உபதேசங்களால் புத்துயிர் பெற்ற திராவிட பக்தர்கள் பக்தி பரவசத்தோடு தேவாரம், திருவாசகம், நாலாயிரம் திவ்யப் பிரபந்தம் போன்ற பக்தி பாடல்களை கி.பி 5-ம் நூற்றாண்டுக்குப் பின் உருவாக்கினார்கள். இவை திராவிட மக்களிடையில் பக்தி பரவசத்தையும் உற்சாகத்தையும் ஊக்கத்தையும் உருவாக்கிற்று. இதனிமித்தம் கி.பி. 5-ம் நூற்றாண்டிற்கு பின் தமிழகத்தில் உருவான இயக்கங்கள் பக்தி இயக்கங்கள் என அழைக்கப்படுகின்றன.

## தெற்கிலிருந்து வடக்கே

பக்தி இயக்கங்கள் தெற்கிலிருந்து வடக்கே பரவியது. சமண பௌத்த மதங்களிலிருந்த அனேக திராவிடர்கள் இப்புதிய இயக்கங்களில் சேர்ந்தார்கள். இவ்வாறு சேர்ந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் திருநாவுக்கரசர் என்பவராகும்.

## திருஞான சம்மந்தரால் வந்த வினை

திருஞான சம்மந்தர் என்ற பிராமணர் சைவ மதத்தில் சேர்ந்தார். அவர் அரசனை தூண்டி அனேக சமணர்களை கொலை செய்தார்.

## ஆழ்வார்கள், நாயன்மார்கள்

தோமாவின் கிறிஸ்தவ கொள்கைகளை ஏற்றுக் கொண்ட திராவிடர்களின் வழி பக்தி இயக்கம் உண்டானது என்று பார்த்தோம். இவ்வியக்கங்களில் இரு பிரிவுகளை பார்க்கிறோம். சைவத் தலைவர்கள் நாயன்மார் எனவும் வைணவத் தலைவர்கள் ஆழ்வார்கள் எனவும் அழைக்கப்பட்டார்கள். பக்தி பாடல்களான பன்னிரு திருமறைகள்

சைவப் பாடல்களாகவும் நாலாயிர திவ்ய பிரபந்தம் வைணவப் பாடல்களாகவும் காண்கிறோம்.

## சைவ வைணவ மதங்கள்

தோமாவின் திருத்துவக் கொள்கையை திருவள்ளுவர் போன்ற அறிஞர்கள் ஏற்றுக்கொண்டு அவர்கள் பாடிய சில பாடல்களின் கருத்துக்களை கவனித்தோம். சில காலங்களுக்குப்பின் அதைக்குறித்து சிந்திக்கத்தொடங்கிய பழந்திராவிட மக்களின் இடையே சிறு கருத்து வேறுபாடுகள் ஏற்படலாயிற்று. இதன் காரணமாக தோமாவால் கொண்டுவரப்பட்ட ஆதி இந்திய கிறிஸ்தவம், சைவம் என்றும் வைணவம் என்றும் இரு பிரிவுகளாக தோன்றலாயிற்று.

### 1. சைவம்

பழந்திராவிட மக்கள் தங்கள் முக்கிய கடவுளான சிவனை பிதா என்ற ஸ்தானத்தில் எடுத்துக்கொண்டார்கள். தங்களது வேலன் அல்லது குமாரன் என்ற கடவுளை குமாரன் என்ற ஸ்தானத்திலும் எடுத்துக் கொண்டார்கள். பரிசுத்த ஆவியைக் குறித்து சிந்திக்கலாயினர். பிதாவும் அதாவது அப்பனும், குமாரனும் அதாவது மகனும் இருப்பதால் பரிசுத்த ஆவி அம்மையாக அதாவது பெண்ணாகத் தான் இருக்க வேண்டும் என்ற கருத்தில் பரிசுத்த ஆவியை சக்தி (Power) என்று பெண்பாலாக அழைத்தார்கள். இவ்வாறு பரிசுத்த ஆவியை பெண்பாலக எடுத்துக் கொண்டு அவர்கள் திரித்துவத்தை சிவன், சக்தி, குமரன் என்று அழைத்தார்கள். இவர்கள் சைவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

### 2. வைணவம்

பரிசுத்த ஆவியை பெண்பாலாக எடுத்துக் கொள்வதை ஒருசாரார் ஒத்துக் கொள்ளவில்லை. பரிசுத்த ஆவியினாலே கன்னி மரியாள் கர்ப்பவதியானாள் என்று காணப்படுவதால், பரிசுத்த ஆவியை பெண்ணாக கூறக்கூடாது, ஆணாகத்தான் கூற வேண்டும் என்று அவர்கள் கருதினார்கள். எனவே அவர்கள் பிதாவை சிவன் என்றும்

பரிசுத்த ஆவியை விண்ணிலிருந்து வந்தவன் என்ற பொருளில் ஆண்பாலாக விட்டுணு (விஷ்ணு) என்றும் குமாரனை விஷ்ணுவிலிருந்து தோன்றிய பிரம்மா என்றும் திரித்துவத்தை சிவன், பிரம்மா, விஷ்ணு என்று எடுத்துக் கொண்டார்கள். இவர்கள் வைணவர்களென்று அழைக்கப் பட்டார்கள்.

## திராவிடர்களின் கோவில் வழிபாடு

இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் சுற்றித்திரிந்த அன்னியர் களுக்கு ஆலய வழிபாடு இருந்ததில்லை. இந்தியாவில் முதலாம் நூற்றாண்டுக்கு முன்னிருந்த மதங்களான சமணமும் பௌத்தமும் நாத்திக மதங்களானதால் கடவுள் வழிபாட்டுக்கான ஆலயங்கள் அவர்களுக்கு இருந்ததில்லை. தோமாவால் கிறிஸ்தவ கொள்கைகள் போதிக்கப்பட்டபின் திராவிட மக்களுக்கு ஆலயங்கள் தோன்றலாயிற்று.

## சமண பௌத்த கோயில்கள்

கடவுள் உண்டென்ற கொள்கையை ஏற்றுக் கொண்ட திராவிடர்க ளான சமண பௌத்த மதத்தவர்கள் கோயில்கள் அமைத்துக் கொண்டார் கள். அவர்கள் மகாவீரரையும், புத்தரையும் கடவுள் அவதாரங்களாகக் கொண்டு கோயில்களில் வழிபடத் தொடங்கினார்கள்.

## சைவ வைணவ கோயில்கள்

சைவ, வைணவ சமயங்களை சேர்ந்த திராவிடர்களும் தங்கள் வழிபாட்டிற்காக ஆலயங்களை அமைக்க தொடங்கினார்கள். ஆலயங்கள் ஆகம முறைப்படி பிராகாரம், பரிசுத்த ஸ்தலம், மகா பரிசுத்த ஸ்தலம் ஆகிய அமைப்புக்களோடு எருசலேம் தேவாலயத்தின் மாதிரியின்படி செய்யப்பட்டன. இந்தியாவில் பல்லவர்கள் நாட்களில் கோயில்களும், விக்கிரகங்களும் பெருகின.

## முதல் கோயில் வழிபாடு

கோயில் வழிபாடு அல்லது ஆலய வழிபாட்டின் ஆரம்பத்தைக் குறித்து பரிசுத்த வேதாகமத்தில் தான் பார்க்க முடிகிறது. மோசே இஸ்ரவேல் ஜனங்களை வழி நடத்தும் போது ஜனங்கள் சீனாய் மலை

அடிவாரத்தில் ஒரு வருடம் தங்கியிருந்தார்கள். தேவன் சீனாய் மலையில் மோசேயிடம் பேசினார். அங்கே ஜனங்களுக்கு சட்டதிட்டங்கள் கொடுத்தார். அதோடு, தேவன் ஜனங்களின் நடுவில் வாசம்பண்ண விரும்பினார். அதற்காக ஒரு வாசஸ்தலத்தை உண்டாக்க கட்டளையிட்டார். மட்டுமல்ல அதின் மாதிரியை மோசேக்கு காட்டி அதே வண்ணமாய் செய்ய கட்டளை யிட்டார். அதின் அளவுகளையும் கொடுத்தார். செலுத்த வேண்டிய பலிகளையும் அவைகள் செலுத்தப்பட வேண்டிய விதங்களையும் குறித்து கற்பித்தார். இவைகளைக் குறித்து யாத் 25, 26, 27 அதிகாரங்க ளில் வாசிக்கிறோம்.

## முதல் ஆராதனைக் கூடம்

தேவன் சீனாய் மலையில் காண்பித்த வண்ணமாகவும் அந்த அளவுகளின் படியேயும் முதற்கோயில் (ஆசரிப்பு கூடாரம்) அங்கே கி.மு. 1461-ல் செய்யப்பட்டது. கானானில் இஸ்ரவேலர் சென்றடைந்த பின் அந்த ஆசாரிப்பு கூடாரம் அனேக வருடங்கள் சீலோவில் வைக்கப் பட்டிருந்தது.

## கற்களாலான முதல் தேவாலயம்

சாலொமோனின் நாட்களில் எருசலேமில் கற்களாலான முதல் தேவாலயம் கி.மு. 972-ல் கட்டப்பட்டது. அதற்கு குறிக்கப்பட்ட ஆகம முறைப் படியே அந்த ஆலயம் கட்டப்பட்டது. அப்படியே அதன் பணிமுட்டுகளும் செய்யப்பட்டன.

## கட்டுமானப்பணிகள்

I ராஜா 6 ,7 அதிகாரங்களில் எருசலேம் தேவாலயம் கட்டப்பட்ட விதங்கள் விளக்கப்படுகிறது. அங்கே ஒடுக்கமான ஜன்னல்கள், சுற்றுக்கட்டுகள், அறைகள், ஒட்டுச்சுவர்கள், சுழல் படிகள், சித்திர வேலைகள், கொத்து வேலைகள், பொன் தகட்டால் மூடுதல், இரட்டை கதவுகள், தூண்கள் மேல் உத்திரங்கள், உத்திரங்கள் மேல் மச்சுப் பாவுதல், கும்பங்கள், ஜலதாரைகள் போன்றவைகளைக் குறித்து விளக்கப் படுகிறது. இவை யாவும் சைவக் கோயில்களில் நாம் பார்க்க முடிகிறது.

சைவ வைணவக் கோயில்கள் எருசலேம் தேவாலயத்தின் மாதிரியை பின்பற்றி பழைய ஏற்பாட்டு ஆகமங்களில் கூறப்பட்ட விதிகளின் படி கட்டப்பட்டவை என்று காணப்படுகிறது.

## வெண்கல பணிமுட்டுகளும் குத்து விளக்குகளும்

யாத் 27:3,19,20,21 வசனங்களில் பணிமுட்டுகளெல்லாம் வெண் கலத்தால் செய்யப்பட வேண்டுமென்றும், குத்துவிளக்கு எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்க வேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கிறது. சந்நிதிஸ்தானத்தில் ஆசாரியர்கள் குத்து விளக்கை சாயங்காலந் தொடங்கி விடியற்காலை மட்டும் எரிய வைக்க வேண்டும் (கி.மு. 1461). இவை சைவக்கோயில்களிலும் கடை பிடிக்கப்படுகிறது.

## கண் விழித்திருக்கும் ராத்திரி

யாத். 12:42 -ல் கர்த்தர் இஸ்ரவேலரை எகிப்து தேசத்திலிருந்து புறபடப்பண்ணினதினால் அதை அவருக்கென்று முக்கியமாய் ஆசரிக்க வேண்டிய இராத்திரியாக்கினார். சைவர்களும் கண்விழித்திருக்கும் ராத்திரியை ஆசரிக்கிறார்கள்.

## ஆசாரியனின் மணியோசை

யாத்.28 : 34 -ல் ஆசாரியனின் அங்கியின் ஓரங்களில் மணிகள் தொங்கவிட வேண்டுமேன்று பார்க்கிறோம். இதை ஒட்டி கோவில் களில் பூசாரி மணியடிப்பது வழக்கமாயிருக்கிறது. அவ்வாறு யாத் 28:34-ல் தலையில் ஒரு பட்டத்தை கட்டும் முறையும் பாற்கிறோம்.

## அபிஷேக தைலம், சாம்பிராணி

யாத் 30:23-25 வசனங்கிளல் அபிஷேக தைலம் உண்டு பண்ணும் முறைகளும் 34 ஆம் வசனத்தில் சாம்பிராணி செய்வது குறித்தும் சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளையும் தூபம் காட்டுதலையும் நாம் சைவக் கோயில்களில் பார்க்கிறோம்.

## தமிழ்நாட்டில் அதிகக் கோயில்கள்

இந்தியாவில் முக்கியமான -275 சைவக் கோயில்களில் 230 கோயில்கள் தமிழ்நாட்டில் அமைந்துள்ளன. அவ்வண்ணமாக இந்தியாவிலுள்ள முக்கியமான 108 வைணவ கோயில்களில் 96 கோயில்கள் தமிழ்நாட்டிலேயே உள்ளன. எனவே சைவ வைணவ கோயில்கள் தமிழ்நாட்டில் ஆரம்பிக்கப்பட்டு மற்று இடங்களில் பரவிற்று என்று அறிந்து கொள்ளலாம்.

## கோயில்களில் பலிபீடம்

எருசலேம் தேவாலயத்தில் இருந்த வண்ணமாய் கோயில்களில் பலிபீடங்கள் வைக்கப்பட்டிருந்தாலும் பலிசெலுத்தப்படாதது குறிப்பிடத் தக்கதாகும். சைவ, வைணவ கொள்கைகளில் ஒன்றான பலி நிறைவேற்று கொள்கையே பலிபீடம் இருந்தும் பலி செலுத்தப்படாமையின் காரணமாகும். *(இதைக் குறித்து விரிவாக திராவிட சமய வெளியீடுகளில் படிக்கலாம்.)*

## கோயிலில் கன்றுக்குட்டி

இஸ்ரவேலின் ராஜாவாகிய யெரொபெயாம் (கி.மு. 798 - 762) பொன்னினால் இரண்டு கன்று குட்டிகளை உருவாக்கி ஒன்றை பெத்தேலிலும் ஒன்றை தாணிலும் ஸ்தாபித்தான் என்றும் கோவிலை கட்டி லேவியின் புத்திரர் அல்லாத ஈனமானவர்களை ஆசாரியர் ஆக்கி பண்டிகைகளும் ஏற்படுத்தினான் என்றும் I இராஜ .12 :28 to 33 வசனங்களில் வாசிக்கிறோம். சைவ வைணவக் கோயில்களில் கன்றுக்குட்டி இடம்பெறுவது நோக்கத்தக்கது.

அதிகாரம் 18

# திராவிடர்களின் சைவ, வைணவ மதங்கள்

(தொடர் - 2)

# சமிஸ்கிருத மொழி தோற்றுவித்தல்

## சமிஸ்கிருத மொழி

பொதுவாக சமிஸ்கிருத மொழி கிறிஸ்துவுக்கு அனேக ஆண்டுகளுக்கு முன் இருந்த மொழியென்று பேசப்படுவதுண்டு. ஆனால் அது தவறாகும். சமிஸ்கிருத மொழி இந்தியாவில் கி.பி 2-ம் நூற்றாண்டில் திராவிடர்களால் உண்டாக்கப்பட்ட மொழியாகும். உலகின் எந்தப் பகுதிகளிலும் எந்தக் காலங்களிலும் இது தாய்மொழியாய் பேசப் படவோ உபயோகிக்கப்படவோ இல்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும். இது ஓர் குறிப்பிட்ட நோக்கத்துக்காக உண்டாக்கப்பட்ட பொம்மை மொழியாகும்.

## கி.மு 3-ம் நூற்றாண்டுக்குமுன்

கி.மு 3-ம் நூற்றாண்டில் திராவிட சக்ரவர்த்தியான அசோகன் புத்த மத கொள்கைகளை கல்வெட்டுகளிலும் ஸ்தூபிகளிலும் பொறித்து வைத்தான். அன்று இருந்த எல்லா மொழிகளிலும் அதை எழுதி வைத்தான். அந்நாட்களில் பெர்சியர், கிரேக்கர் போன்ற

அன்னியர்கள் இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் வசித்திருந்தார்கள். அவர்கள் கிரேக்க மொழி, அராமிக் மொழி ஆகிய அவரவர் மொழிகளை பயன்படுத்தி யிருந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவரும் சமிஸ்கிருத மொழி பேசியதில்லை. ஏனென்றால் சமிஸ்கிருத மொழி அன்று இருந்த தில்லை. எனவே கி.பி. 3ஆம் நூற்றாண்டில் அசோகன் எழுதிய கல்வெட்டுகளில்..... பாலி, அர்த்தமாகதி, கிரேக்கம் அராமிக் போன்ற எல்லா மொழிகளும் பயன்படுத்தப்பட்ட போதிலும் சமிஸ்கிருதம் இடம் பெறவில்லை. இதிலிருந்து கி.மு 3-ம் நூற்றாண்டிலும் சமிஸ்கிருத மொழி இருந்ததில்லை என்பது விளங்குகிறது.

## சமிஸ்கிருதம் - முதல் கல்வெட்டு

சமிஸ்கிருத மொழி முதல் முதலாக கல்வெட்டுகளில் உபயோகிக் கப்பட்டிருப்பது கத்தியவாறில் உள்ள 'கிர்னார்' என்ற இடத்தில் உள்ள பாறையின் ஒரு பகுதியிலாகும். அது கி.பி. 150-ல் வாழ்ந்த ருத்திரதமனா (Rudradhamana) என்ற உஜ்ஜெயினி பிரபுவால் 'பிரமி' எழுத்துக்களில் பொறிக்கப்பட்டதாகும். அதே பாறையில் கி.மு 3-ம் நூற்றாண்டில் அசோகனால் பொறிக்கப்பட்ட 'பிராகிர்த்' எழுத்துக்கள் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## சமிஸ்கிருத மொழியின் காலம்

மேலே கூறப்பட்டவைகளிலிருந்து சமிஸ்கிருத மொழி கி.மு. 3ம் நூற்றாண்டு வரை இருந்ததில்லை என்றும் அது முதலாம் நூற்றாண் டுக்குப் பின் தோற்றுவிக்கப்பட்ட ஓர் மொழியென்றும் கண்டு கொள்ளலாம்.

## சமஸ்கிருதம் பொருள்

'சமிஸ்கரிப்பது' என்றால் சீர்படுத்துவது என்று பொருள். சமஸ்கிருத மொழி என்பதின் பொருள் சீராக அமைக்கப்பட்ட அல்லது சமிஸ்கரிக்கப்பட்ட மொழி என்பதாகும்.

## சமிஸ்கிருத மொழி தோற்றுவிக்கப்பட காரணம்

கி.மு 6-ம் நூற்றாண்டுக்குப்பின் பெர்சியர்கள், கிரேக்கர்கள், ரோமர்கள், சகர்கள், கூஷாணர்கள் ஆகிய அன்னியர்கள் கூட்டம் கூட்டமாக இந்தியாவின் வட மேற்கு எல்லைகளில் குடியேறி வசித்து வந்தார்கள் என்று பார்த்தோம். இவர்கள் பல நாடுகளிலிருந்து வந்த படியால் பல பாஷைகள் பேசியிருந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவராகிலும் சமிஸ்கிருத மொழி பேசியதில்லை. அறிஞர்களின் ஆராய்ச்சிப் படி கி.பி 1-ம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த தோமாவின் கடவுள் கொள்கைகளை திராவிட மக்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்றும் அந்தக் கொள்கைகளை தீவிரமாக எல்லா மக்களிடமும் பரவச் செய்வதற்காக அன்று பேசப்பட்ட தமிழ், பாலி, அர்த்தமாகதி, பாரசீகம், கிரேக்கம், அரமேயம், லத்தீன் ஆகிய எல்லா மொழிகளையும் ஒன்று சேர்த்து சீர்படுத்தி அதாவது சமஸ்கரித்து திராவிட அறிஞர்கள் பொதுவான ஓர் புது மொழியை உருவாக்கினார்கள் என்றும் காணப்படுகிறது.

## கடவுள் கொள்கையை பரப்ப

சமிஸ்கிருதம் இயல்பாக ஓரிடத்தில் அல்லது ஒரு இனத்தவர் மத்தியில் பேசப்பட்ட மொழி அன்று. மாறாக அது ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் அதாவது கடவுள் கொள்கையை அனைத்து மக்களையும் அறிவிக்க திராவிட அறிஞர்களால் தோற்றுவிக்கப்பட்ட ஒரு மொழியென்று பார்க்கிறோம். புதிதாக உருவாக்கப்பட்ட இந்த சமிஸ்கிருத மொழி மூலம் திராவிட மக்கள் தாங்கள் அறிந்து கொண்ட கடவுள் கொள்கைகளை அன்று இந்தியாவில் வசித்து வந்த எல்லா மக்களுக்கும் அறிவித்தார்கள். அதற்காகவே சமிஸ்கிருத மொழி உருவாக்கப்பட்டது.

அதிகாரம் 19

# திராவிடர்களின்
# சைவ, வைணவ மதங்கள்

(தொடர் - 3)

## வேதங்கள் தோற்றுவித்தல்

### வேதங்கள் எழுதப்பட்ட காலம்

பொதுவாக வேதங்கள் கிறிஸ்துவுக்கு அனேக ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட ஒன்றாக பேசப்படுவதுண்டு. ஆனால், அந்தக் கருத்து தவறானதாகும். வேதங்கள் சமிஸ்கிருத மொழியில் எழுதப் பட்ட மத நூல்களாகும். சமிஸ்கிருத மொழி கி.பி. 2-ம் நூற்றாண்டுக்கு முன் இருந்ததில்லை என்பதை முன்னால் பார்த்தோம். எனவே இவை (வேதங்கள்) 2-ம் நூற்றாண்டிற்குப் பிந்திய காலங்களில் தான் எழுதப் பட்டிருக்க வேண்டும். அதற்கு முன்னதாக எழுதப்பட்டதாக இது மட்டும் சான்றுகளோடு எவராலும் நிரூபிக்கப்படவில்லை.

### Dr. அலெக்ஸாண்டர் ஹாரீஸ் கருத்து

இதைக் குறித்து Dr. அலெக்ஸாண்டர் ஹாரீஸ் என்பவர் "The development of civilization and religion in India and its influence on the world" என்னும் நூலில் கீழ்கண்டவாறு கூறியுள்ளார்.

"The bibliographical evidences indicate that the vedas are written in the Grantha and Nagari scripts, and according to tradition veda vyasa, a Dravidian complied and wrote the vedas. The Grantha Script belongs to the Southern group of scripts and veda vyasa being a Dravidian would certainly have used it since the earliest evidence for Grantha is only in the 5th C.AD, the vedas were written rather late".

### வேதவியாசர்

கி.பி. முதலாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த தோமா கடவுளைப் பற்றிய கொள்கைகளை போதித்தார். அதை ஏற்றுக் கொண்ட திராவிடர்கள் தாங்கள் அனுபவித்த பக்தி நிலைகளை எல்லாருக்கும் அறிவிக்கும் வகையில் சமிஸ்கிருத மொழியை உருவாக்கினார்கள் என்று பார்த்தோம். திராவிடரான வேதவியாசர் பலிக் கோட்பாட்டை விளக்கும் வகையில் முதலில் வேதங்களை எழுதினார்.

### பலிகள்

கி.மு 6-ம் நூற்றாண்டு முதல் பல காலங்களில் இந்தியாவில் புகுந்து கொண்டே இருந்த அன்னியர்கள் கூட்டம் கூட்டமாய் இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் சுற்றித்திரிந்தார்கள். அவர்கள் குதிரை, காளை, பசு ஆகிய மிருகங்களை தீயில் சுட்டு தின்று மது வகைகளை அருந்தி நாடோடி பாடல்களை பாடி வந்தார்கள். நாளடைவில் இது ஒரு வித பலி அல்லது யாகம் என்ற நிலை ஏற்பட்டது. திராவிடர்களும் தங்கள் பழந்திராவிட வழிபாட்டுப் பாடல்களை பாடி பலி செலுத்தி வந்தார்கள். தோமா பலி நிறைவேற்று கொள்கை போதித்த போதிலும் அன்றைய வேத புத்தகத்தில் அதாவது பழைய ஏற்பாட்டு நூல்களில் பலி செலுத்துவது குறித்து விவரிக்கப்பட்டிருந்தது. பலி நிறைவேற்றுக் கொள்கையை விளக்குவதற்கு பலிக் கொள்கைகளைக் குறித்தும் விளக்க வேண்டியிருந்தது.

### நான்கு வேதங்கள்

இந்நிலையில் சமிஸ்கிருத பண்டிதரான வேதவியாசர் மேற்கண்ட

எல்லா பலி முறைகளையும் மனதிற்கொண்டு சமிஸ்கிருத மொழியில் செய்யுள்களை 'ரிக்' என்ற பெயரிலும், இசையோடு கூடிய பாடல்களை சாமம் என்ற பெயரிலும், பலியிடும் முறைகளிலுள்ள பாடல்களை எஜுர் என்ற பெயரிலும் மற்றுப் பாடல்களை அதர்வணம் என்ற பெயரிலும் வேதத்தை நான்கு பகுதிகளாக உருவாக்கினார் என்று காணப்படுகிறது.

## 1. 'ரிக்' வேதம்

ரிக் வேதம் பத்து மண்டலங்களையுடையது. பத்தாம் மண்டலம் பிற் காலங்களில் சேர்க்கப்பட்டது என்று கூறப்படுகிறது.

### பிரிவுகள்

| | | |
|---|---|---|
| மண்டலங்கள் | - | 10 |
| சூக்தங்கள் | - | 1017 |
| மந்திரங்கள் | - | 10600 |

### அக்கினிக்கு முக்கியத்துவம்

ரிக்கு வேதம் ஆரம்பிப்பது அக்கினியை புகழ்ந்துக் கொண்டாகும்.

'அக்னி மீளே புரோகிதம்
யஜ்ஞசிய தேவம் ருத் விஜயம்
ஹோதாரம் ரதன தாதமாய், ருக் 1-1-1

எக்ஞ அல்லது யாக புரோகிதனும் தேவனும் ஹோதாரமும் முக்கிய தேவனுமான அக்னியை துதிக்கிறேன்.

### சோமனைப் பற்றிய பாடல்

அபாம சோமா ம்ருதா அத்ரம கன்ய
ஜோதிர விதாம தேவான்
திம் நூர நமஸ்மான் க்றண வதராதி
கிமுதூர் திரமிர்த மர்த்யஸ்ய ருக்கு- 8-48-3

ஓ : சோமமே நீ அமிர்தோடு கூடியவன். நாங்கள் உன்னை பானம் செய்து அமிர்தராக திகழ்வோம். பின்பு செர்க்கத்தில் சென்று தேவர் களோடு பழகுவோம். அப்போது சத்துருக்கள் என்ன செய்வார்கள் ?

அந்நாட்களில் பிராமணர்கள் (ஆரியர்கள்) பசு, ஆடு குதிரை, எருமை போன்ற மிருகங்களை பலி செலுத்தி அவைகளை ஆசையோடு சாப்பிட்டு சோம பானத்தை(மது) அருந்தி வந்தார்கள் என்று பார்க்கிறோம்.

## மிருகமாம்சம் வேகவைப்பது குறித்து

*யோவாஜினம் பரி பஸ்யந்தி ப்கவம்*
*யசு மாக்யூ சுரபிர் நிர்ஹரேதி*
*யெ சார்வதோ மாம்ச பிக்ஷாம் உபாசத*
*உதோ தோஷம பிதிர் ந இன்மது*

சூலத்தில் இருந்து வெந்து கொண்டிருக்கும் குதிரையின் மணம் நன்கு விரும்பத்தக்க நிலையை எட்டும்பொழுது அதை எடுக்க வேண்டும். பசுவின் பாகங்கள் சரியாக வேகவைக்க வேண்டும்.

*(வேகவைத்த மாமிசத்தை பங்குபோடுவதை ஆசையோடு காத்திருந்தார்கள்)*

*ருக் 1 - 162 - 10*

## 2. சாமவேதம்

இவை பாடல்கள் ஆகும். அதிலுள்ள 75 மந்திரங்களைத் தவிர மற்றவைகளெல்லாம் ரிக் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டவையாகும். இதில் மொத்தம் 1544 மந்திரங்கள் உண்டென்று கூறப்படுகிறது.

## 3. யஜுர் வேதம்

இவை பலிகளுக்கான மந்திரங்களாகும். இதில் 1999 மந்திரங்கள் உண்டு.

## 4. அதர்வணம்

இது பிற்காலங்களில் உண்டாக்கப்பட்டவை என்று கூறப்படுகிறது. ஆரம்ப காலங்களில் வேதங்கள் வேதத்றயீ (மூன்று வேதங்கள்) என்று அழைக்கப்பட்டிருந்தது. அதர்வணத்துக்கு 20 காண்டங்களும் 5987 மந்திரங்களும் உண்டு.

*(மேலும் விபரங்களை அறிய விரும்புவோர் 'பாரதீய மத சம்கிரகம்' By Krishnankutty படிக்கவும்)*

## கி.பி.6-ம் நூற்றாண்டில் காணப்பட்ட மதங்கள்

கி.பி 6-ம் நூற்றாண்டில் இந்தியாவில் காணப்பட்ட மதங்களாவன:-

1. சமண மதம்

2. புத்த மதம்

திராவிடர்களின் இவ்விரு மதங்களும் நாத்திகக் கொள்கை உடையவைகளாயிருந்தன. அவை பலி மறுப்புக் கொள்கை உடையவைகளாகும். அவைகளில் பலி செலுத்துவது கிடையாது.

3. சைவம்

4. வைணவம்

ஆகிய இவ்விரு மதங்களும் தோமாவின் ஆதி இந்திய கிறிஸ்தவ கொள்கைகளால் வளர்ச்சி அடைந்து கொண்டிருந்த சமயங்களாகும். இவையும் திராவிட மக்களால் பின்பற்றப்பட்ட மதங்களாகும். அவைகளில் பலி செலுத்தல் கிடையாது.

## அந்நாட்களில் காணப்பட்ட வழிபாடுகள்

## 1. பழந்திராவிட வழிபாடு

அந்நாட்களில் திராவிட மக்களில் ஒரு பிரிவினர் தங்கள் பழங்கால வழிபாடுகளை கடைபிடித்து வந்தார்கள். அவர்கள் பலி செலுத்துவதுண்டு.

## 2. அந்நியர்களின் தீ வழிபாடு

இந்தியாவில் வந்தேறிய அன்னியர்கள் தீ வழிபாட்டுக் காரர்கள். இவர்கள் பின்நாட்களில் ஆரியர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

இந்த ஆரியர்களின் தீ வழிபாடு இயற்கை வழிபாட்டோடு சேர்ந்ததாகும். பிருத்வி, வருணன், அக்கினி, சூரியன், வாயு போன்ற ஐம்பெரும் பூதங்களையும் தியசு, அதிதி, மருத்துக்கள் இந்திரன், மிந்திரன் முதலான பிற தேவர்களையும் அன்னியர்கள் வழிபட்டு வந்தார்கள். திராவிட அறிஞர்கள் உருவாக்கிய வேதங்களை அன்னியர் களான ஆரியர்கள் பின்பற்றி அதை தங்களுடையதாக்கிக் கொண்டார்கள். மிருகங்களை பலி செலுத்தி அவைகளின் மாம்சத்தை சாப்பிட்டு வந்தார்கள்.

## மத ஒற்றுமை

கி.பி. 6-ம் நூற்றாண்டு இறுதி வரை இந்தியாவில் மத ஒற்றுமையும் மத நல்லிணக்கமும் இருந்து வந்ததென்று காணப் படுகிறது. திரு. நீலகண்ட சாஸ்திரி என்பவர் இதைகுறித்து கூறுகையில் "Till the close of the 6th century A.D, different Religious Sects lived together in adminerable harmony" என்று கூறுகிறார்.

பிரிவு : VIII

# கி.பி 7 - 14 நூற்றாண்டுகள்

இந்தக் காலங்களில் ஐரோப்பிய நாடுகளில் போப்பின் அதிகாரங்களுக்கு உடைவு ஏற்பட்டு ரோமன் கத்தோலிக்க, ஆர்தடாக்ஸ் சபைகள் உண்டானது.

இந்தியாவின் வரலாற்றில் இந்தக் காலங்கள் மிக மிக முக்கியமானவையாகும்.

தோமா அப்போஸ்தலனின் ஆதி இந்திய கிறிஸ்தவ அடிப்படையில் திராவிடர்களின் சைவ வைணவ மதங்களும் இலக்கியங்களும் கோயில் வழிபாடுகளும் மிகவும் வளர்ச்சியடைந்தன.

ஆனால் அதே காலங்களில் அன்னியர்கள் கூணர்க ளின் உதவியோடு ஆரிய வர்த்தத்தில் ஆட்சியமைத்துக் கொண்டார்கள்.

அவர்கள் ஆரியர்கள் என்ற பெயரில் திராவிட மக்களை இழிவுபடுத்தி அவர்கள் மேல் ஜாதிக் கொள்கையை திணித்து விட்டார்கள்.

ஜாதிக்கொள்கையால் திராவிடர்களின் உரிமைகள் அனைத்தும் படிப்படியாக பறித்துக் கொள்ளப்படுகிறது.

**அதிகாரம் 20**

# கிறிஸ்து மார்க்கம்

**(தொடர் - 12)**

## ஐரோப்பிய கிறிஸ்தவ சபையில் பிளவு

### போப்பின் அதிகாரம்

ரோம சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்குப் பின்பும், போப்பானவர் ரோமில் இருந்து கொண்டு, மத சம்மந்தமான தன் அதிகாரத்தை மேற்கத்திய நாடுகளிலும் கிழக்கத்திய நாடுகளிலும் செலுத்தி வந்தார். ஐரோப்பாவின் எல்லா நாடுகளிலும் போப்பின் அதிகாரம் மிகவும் உயர்ந்த நிலையில் சென்று விட்டது. அதே சமயம் போப்பானவர் தன் அதிகாரங்களை சொந்த விருப்பப்படி பிரயோகிக்கலானார். இதினிமித்தம் ஐரோப்பிய கிறிஸ்தவ சபையில் உடைவு ஏற்பட்டது.

### போப்பின் அதிகாரம் உடைவு

பாபிலோனிய மதக்கலவையினால் கிறிஸ்தவம் சீரழிக்கப்படுவதை விரும்பாத அனேகர் சபையில் இருந்தனர். அந்நிலையில் கி.பி 1054-ல் போப் லியோ என்பவர் காண்ஸ்டான்டினோப்பிளில் பாட்றியாற்க்காயிருந்த (சபைப்பிதா) செருலேறியஸ் என்பவரை சபையை விட்டு நீக்கம்

செய்தார் (Excommunicate). எனவே கிழக்குச் சபைகள் போப்பின் அதிகாரத்திலிருந்து பிரிந்து போயிற்று.

### ரோமன் கத்தோலிக்கா × ஆர்தடாக்ஸ்

மேலே கூறப்பட்ட பிரிவினால் ரோமில் போப்பின் கீழ் உள்ள மேற்கு சபைகள் ரோமன் கத்தோலிக்க சபைகள் என்றும், போப்பின் அதிகாரத்திலிருந்து விலகிக் கொண்ட கிழக்கு சபைகள் ஆர்தடாக்ஸ் சபைகள் என்றும் அழைக்கப்படலாயிற்று.

### 1. ரோமன் கத்தோலிக்க சபைகளின் தன்மைகள்

★ அந்த சபைகளில் லத்தீன் மொழி பயன்படுத்தப்பட்டது.

★ இவர்கள் போப்பின் அதிகாரத்தை ஆதரித்தார்கள்

★ இவர்களுக்கு சொரூப வழிபாடு உண்டு.

★ இவர்களுடைய ஊழியர்கள் திருமணம் செய்து கொள்வதில்லை.

★ அங்கு சமயப்பணித்துறை அமைப்புகள் அதிகம்.

### 2. ஆர்தடாக்ஸ் சபைகளின் தன்மைகள்

★ இவர்கள் கிரேக்க மொழியை பயன்படுத்தினார்கள்.

★ இவர்களுக்கு போப்பின் ஆளுகை இல்லை

★ இங்கே சொரூப வழிபாடு இல்லை

★ இவர்கள் ஊழியர்கள் விவாகம் பண்ணுவார்கள்.

### ரோமன் கத்தோலிக்காவில் மீண்டும் பிளவு

மேற்கத்திய சபையான ரோமன் கத்தோலிக்கா சபை மறுபடியும்

(1) கத்தோலிக்கா சபை (Catholics) என்றும்

(2) புறொட்டஸ்டேன்ட் சபை- (Protestant) என்றும் இரண்டாக பிரிந்தது.

### பிரிவதற்கு காரணங்கள்

1. போப்பின் அதிகார துர்ப்பிரயோகம்
2. கிறிஸ்தவ குருமாரின் துர் நடத்தை
3. சபை நிறைவேற்றிய கொடூரமான சிறைத் தண்டனைகள், சித்திரவதைகள், மரணதண்டனைகள் போன்றவைகள்.
4. பாவ மன்னிப்புச் சீட்டு விற்பனை.
5. ஹென்றி 8th போன்றவர்களின் எதிர்ப்புகள்.

அதிகாரம் 21

# திராவிடர்களின் சைவ, வைணவ மதங்கள்

(தொடர் - 4)

## சைவ வைணவ இலக்கிய வளர்ச்சி

தோமா அப்போஸ்தலனின் கொள்கைகளின் அடிப்படையில் உருவான திருக்குறள், பக்திப் பாடல்கள், ஆகியவைகளைத் தொடர்ந்து திராவிட அறிஞர்கள் தமிழில் அனேகம் சமய இலக்கிய நூல்களை இயற்றினார்கள்.

இவ்விலக்கியங்களை ஆராய்ந்து பார்க்கும் போது அவைகள் அனைத்தும் தோமாவினால் புகட்டப்பட்ட விவிலியத்தின் அடிப்படை கருத்துக்கள் என்று அறிந்து கொள்ளலாம்.

### சைவ சித்தாந்தம்

சைவமதத்தின் கொள்கைகள் சைவ சித்தாந்தம் என்று அழைக்கப் படுகிறது. சைவ சித்தாந்தம் 14 சாஸ்திரங்கள் அடங்கியதாகும். இது மெய் கண்ட சாஸ்திரம் என அழைக்கப்படுகிறது. இது மெய் கண்டாரால் எழுதப்பட்ட சிவஞான போதத்தின் அடிப்படையில் எழுதப்பட்டவையாகும்.

## சிவஞானபோதம்

சிவஞானபோதம் கி.பி 13-ம் நூற்றாண்டில் மெய்கண்டாரால் எழுதப்பட்டதாகும். இது சூத்திரத்தால் ஆக்கப்பட்டது. சூத்திரம் என்பது பெரிய ஆலமரத்தை ஒரு சிறு புல்லின் நுனியிலுள்ள பனித்துளியில் பிரதிபலித்துக் காட்டுவது போன்று பரந்த கருத்துக்களை சிறு சூத்திரத்தில் பிரதிபலிப்பதாகும்.

## உள்ளடக்கம்

சிவஞான போதத்தில் 40 வரிகள் அடங்கிய 12 சூத்திரங்கள் மட்டுமே உள்ளன. சிவஞானபோதம் என்றால் சிவம் அல்லது அன்பு ஆகிய ஞானத்தை போதிப்பது என்பதே பொருள். அதாவது யோ. 3:16-ல் கூறப்படும் தேவ அன்பு இங்கே விளக்கப்படுகிறது. 'தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும் படிக்கு அவரை தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்' சிவஞான போதம் கிறிஸ்தவ அடிப்படையில் எழுதப்பட்டிருப்பதால் இதைக் கிறிஸ்தவ அடிப்படையில் நோக்கினால் மட்டுமே அதின் விளக்கங் களை சரியாய் புரிந்து கொள்ள முடியும்.

## சிவஞான போதத்தின் கருத்துக்கள்

பரிசுத்த வேதாகமத்தில் ஆதியாகமம் முதல் வெளிப்படுத்தின விசேஷம் வரை கூறப்பட்டிருக்கும் கருத்துக்களின் சத்து சிவஞான போதத்தில் தரப்பட்டுள்ள 12 சூத்திரங்களில் அடக்கப்பட்டுள்ளது. இதை 5 முக்கிய பகுதிகளாக பிரித்துக் கூறலாம்.

## 5 பகுதிகள்

1. மனிதனின் படைப்பும் வீழ்ச்சியும்.
2. வீழ்சியடைந்த மனிதனின் (ஆன்மாவின்) நிலை.
3. வீழ்சியடைந்த மனிதனை கடவுள் தேடி வந்து மீட்பது.
4. மீட்கப்பட்டபின் மனிதனின் நிலை.
5. மீட்கப்பட்ட மனிதன் கடவுளோடு நித்திய வாழ்வில் இணைவது.

## விளக்கத்திற்கு சில எடுத்துக்காட்டுகள்

## மனிதனின் படைப்பும் வீழ்சியும் குறித்து

சூத்திரம் -1

*அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்*
*அந்தம் ஆதி என் மனார் புலவர்*

### விளக்கம்

*(அவன், அவள், அது)* அவன் ஆகிய முதல் மனிதன் (ஆதாம்) அவளாகிய ஏவாள் அதுவாகிய உலகம் எனும் அவை மூன்றையும் *(மூவினைமையின்)* மூன்று வெவ்வேறு செயல்களால் *(தோற்றிய திதியே)* இறைவன் தோற்றுவித்தான். *(ஒடுங்கி)* அவை தூய நிலையிலிருந்து ஒடுங்கி, *(மலத்துளதாம்)* பாவத்தில் விழுந்தது. *(அந்தம் ஆதி)* அது தூய நிலையின் அந்தமும் பாவ நிலையின் ஆரம்பவுமானது. *(என்மனார் புலவர்)* இது அறிஞர்கள் கூற்று

### படைப்பும் வீழ்ச்சியும் - விவிலியத்தில்

விவிலியத்தில் கூறப்பட்டுள்ள படைப்பும் மனிதனின் வீழ்ச்சியும் குறித்து இங்கே தெளிவாக விளக்கப்படுகிறது. ஆதாம், ஏவாள், உலகம் ஆகிய மூன்றும் வெவ்வேறு வினைகளால் படைக்கப்பட்டதைக் குறித்து வேதம் தெளிவாய் கூறுகிறது. ஆதிமனிதனாகிய ஆதாம் மண்ணினால் படைக்கப்பட்டான். முதல் பெண்ணாகிய ஏவாள் எலும்பிலிருந்து படைக்கப்பட்டாள். உலகம் வார்த்தையினால் படைக்கப்பட்டது.

### தூய நிலையும் பாவ நிலையும்

படைக்கப்பட்ட நிலையில் ஆதாமும் ஏவாளும் தூய நிலையில் இருந்தார்கள். சர்ப்பமானது (சாத்தான்) அவர்களை வஞ்சித்த போது அவர்கள் தூய நிலையிலிருந்து ஒடுங்கி, பாவநிலையில் விழுந்தார்கள். இது தூய நிலையின் அந்தமும் பாவநிலையின் தொடக்கவும் ஆயிற்று.

இவ்வாறு மனுக்குலத்தில் பாவம் பிரவேசித்த விதம் விளக்கப் படுகிறது. பரிசுத்த வேதாகமத்தின் அடிப்படையில் அல்லாமல் சிவ ஞான போதத்தின் இந்த சூத்திரத்துக்கு சரியான விளக்கம் கொடுக்க எவராலும் கூடாது.

## வீழ்ச்சியடைந்த மனிதனின் மீட்பு குறித்து

*சூத்திரம்: 8*

*ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்*
*தம் முதல் குருவு மாய்த் தவத்தினில் உணர்த்த விட்டு*
*அன்னியம் இன்மையின் அரன் கழல் செலுமே.*

ஆன்மாவானது(ஐம்புலவேடரின்) மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புல இச்சைகளாகிய வேடனுடன் வளர்ந்து (அயர்ந்தனை என) தன்னையும் தன்னைப் படைத்த கடவுளையும் அறியாமல் மயங்கி விட்டதை(தம்முதல்) தமக்கு முதல்வனாகிய இறைவன் கண்டு (குருவுமாய்) குருவாக உலகில் வந்து (தவத்தினில்) பாவத்துன்பத்தை தாமே ஏற்றுக் கொண்டு, சிலுவை மரணமாகிய தவத்தை நிறைவேற்றியதை (உணர்த்தி) ஆன்மாவுக்கு உணர்த்தி காட்டும் போது (விட்டு) ஆன்மாவானது தன் பாவத்தை விட்டு பிரிந்து, (அன்னியம்- இன்மையின்) இறைவனோடிருந்த பிளவு நீக்கப்பட்டு (அரண்) இறைவனின் (கழல் செலுமே) திருவடியை சென்று அடையும்.

## அங்கு கூறப்படும் உதாரணம்

இதை சைவ சித்தாந்தம் ஒரு உதாரணத்தோடு விளக்குகிறது:-

ஒரு ராஜா தன் மகனை இழந்துவிட்டான். அந்த மகன் வேடர் களோடு வேடனாக காட்டில் வசிக்கிறான். தான் ஒரு ராஜாவின் மகன் என்பதையும் அவன் மறந்துவிட்டான். ஒரு நாள் ராஜா தன் மகன் வேடர்களோடு காட்டில் வசிப்பதை அறிய வந்தான். அவனை பார்க்க விரும்பினார். ஆனால் தான் ராஜாவாக அங்கு சென்றால் மகன் தன்னிடம் வராமல் ஓடிவிடக் கூடும் என்று உணர்ந்தான். எனவே

தானும் ஒரு வேடனாக வேடம் பூண்டு காட்டுக்குச் சென்றான். மகனோடு பேசினான். உண்மையை விளக்கிக் கூறினான். பின்பு தன்னோடு அழைத்துக் கொண்டு சென்றான்.

## விவிலிய விளக்கம்

தேவ சாயலாக படைக்கப் பட்ட மனிதன் பாவத்துக்கு உட்பட்டு தேவனை விட்டு தூரம் போனான். உலக சிற்றின்பத்திற்கு தன்னை ஒப்புக் கொடுத்தான். தப்பிப் போன மனிதனை மீண்டும் தன்னிடம் சேர்ப்பதற்காக தேவன் பரலோகத்தை விட்டு பூமியில் ஒரு மனிதாக அவதரித்து அவனை இரட்சித்து மறுபடியும் தம்மிடம் சேர்த்துக் கொள்கிறார்.

இழந்து போனதை தேடவும் இரட்சிக்கவுமே மனுஷ குமாரன் வந்திருக்கிறார். *(லூக் 19 :10)*. பாவிகளை ரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் *(1 தீமோ1:15)* அவர் தம்மைத் தாமே வெறுமை யாக்கி அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார். *(பிலி 2:7)*

## மீட்கப்பட்ட மனிதன் கடவுளோடு இணைதல் குறித்து

சூத்திரம்-12

*செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா*
*அம்மலம் கழீஇ அன்பரோடு மரீஇ*
*மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே.*

## பொருள்

*(செம்மலர்நோன் தாள்)* மனிதனுக்காக தம் உயிரை பலியாக் கியதால் ரத்தம் சொட்டி காட்சி அளிக்கும் சிவந்த பாதங்களை *(சேரல் ஒட்ட)* சேரவிடாமல் தடுத்து நின்ற*(அம்மலம் கழீஇ)* அந்த கொடிய பாவம் கழுவப்பட்டவர்கள் *(அன்பரொடு மரீஇ)* அன்பராகிய அவரோடு இணைக்கப்பட்டு *(மால்அற)* மயக்கம் நீங்கி, *(நேயம் மலிந்து)* தேவ அன்பால் நிரப்பப்பட்டு *(அவர் வேடமும்)*

இறைவனின் மகிமையின் சாயலைப் பெற்று (அரண்) இறைவனோடு (ஆலயம் தானும் என) மகிழ்ந்து உறையும் கோயிலாக அமைந்து இறைவனை என்றும் வாழ்த்தி இன்புறுவான்.

## விளக்கம்

சிலுவை தவத்தால் சிந்தப்பட்ட இரத்தம் இறைவனாகிய இயேசுவின் காலடிகளில் காணப்படுவதால் அவை செம்மலரைப் போல் காட்சியளிக்கிறது. ஒரு மனிதனை கடவுளோடு சேரவிடாமல் தடுத்து நிறுத்துகின்ற மலமாகிய பாவம் இயேசுவின் சிவந்த பாதங்களிலிருந்து வரும் இரத்தத்தால் கழுவப்படுகிறது. அப்பொழுது அவனை பற்றி நின்ற மயக்கம் நீக்கப்படுகிறது.

இந்த நிலையை அடைந்த மனிதன் கடவுளோடு இணைந்து வாழ தகுதி அடைகிறான். அப்படிப்பட்டவர்கள் (மீட்கப்பட்டவர்கள்) இயேசுவின் வருகையில் பழைய சரீரத்தின் தன்மைகளை களைந்து மறுரூபமடைந்து இயேசுவோடு சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். அவர்கள் இயேசுவோடு கூட இணைந்து நித்தியகாலமாக தேவனை துதித்து மகிழ்ந்திருப்பார்கள். இது மீட்கப்பட்டவர்களின் நித்திய வாழ்வு ஆகும்.

## விவிலியத்தில்

*1யோ.1:7*-ல் "கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்"என்றும் ஏசா 35:10 -ல் "கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பி ஆனந்தக் களிப்புடன் பாடி சீயோனுக்கு வருவார்கள் "என்றும் 1 கொரி. 15 : 52, 1 தெச. 4:16, 17-ல் "எக்காளம் தொனிக்கும் அப்பொழுது.... நாமும் மறுரூபமாக்கப் படுவோம்; கர்த்தர் தாமே... இறங்கி வருவார்; அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு உயிரோடிருக்கும் நாமும்.... மேகங்கள் மேல் அவர்களோடே கூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம் என்றும் வாசிக்கிறோம்.

## ரத்தினச்சுருக்கம்

இவ்விதமாய் சிவஞான போதம் விவிலியத்தின் முக்கிய கருத்துக்களான, மனிதனின் மகிமையான படைப்பு, மனிதனின் வீழ்ச்சி, வீழ்ச்சியால் பாவம் பிரவேசித்தல், பாவத்திலிருந்து மீட்டுக் கொள்ள கடவுள் மனு உரு ஆதல், கடவுள் தன்னையே பலியாக்குதல், அதன் மூலம் மீட்பை சம்பாதித்தல், அந்த மீட்பை ஏற்றுக் கொண்ட வர்கள் மறுரூபமடைந்து கடவுளோடு சேர்க்கப்பட்டு நித்திய சந்தோஷம் அனுபவித்தல் ஆகிய முக்கிய அம்சங்கள் அனைத்தும் இரத்தினச் சுருக்கமாக விளக்கப்படுவதை பார்க்கிறோம்.

*இதுகுறித்து மேலும் அறிய விரும்புவோர் சிவஞானபோதம் உரை by Dr. M. தெய்வனாயகம் M.A., Ph.D. பார்க்கவும்.*

## மற்றும் பாடல்கள்

இதே வண்ணமாய் கிறிஸ்தவத்தின் அடிப்படை கொள்கைகள் மற்று அனேக சைவ, வைணவ பாடல்களிலும் காணலாம். உதாரணமாக:-

### a) கடவுள் ஏன் மனிதனாய் பிறந்தார் என்பதைப் பற்றி:

i) *"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்*
*இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை உயிர் அளிப்பான்*
*எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா"*

*(நம்மாழ்வார் திருவிருத்தம் 1-3580)*

பொருள்

கறைபட்ட ஞானமும், தவறான ஒழுக்கமும் அழுக்கு (பாவம்) நிறைந்த உடம்பும் நம்மை ஆட்கொள்ளாமல் நமக்கு நல்லதோர் வாழ்வை தருவதற்காகவே இறைவன் ஒரு ஸ்திரீயில் பிறந்தார்.

ii) *"இறைவா இன்பத்து எமை இருத்த*
*வேண்டிப் பிறவா முதல்வன் பிறந்தான்."*

*(போற்றிப்ப ஃறொடை 69)*

பொருள்

நீங்காத நித்திய இன்பத்தில் நாம் இருக்க வேண்டும் என்பதற்காக பிறவா முதல்வனாகிய இறைவன் பிறந்தான்.

## b) சிருஷ்டி பாவத்தில் வீழ்ந்த காரணத்தை குறித்து

*"முக்தி முதற் கொடிக்கே மோகக் கொடி படர்ந்து*
*அத்தி பழுத்தது என்று உந்தீ பற*
*அப்பழம் உண்ணாதே உந்தீ பற"*

*(திருவுந்தியார் - 41)*

பொருள்:

முக்தி நிலையாகிய இன்ப நிலையில் படைக்கப்பட்டவற்றுள் முதல் கொடியில் (ஆதாம்) மோகமாகிய பாவக் கொடி படர்ந்தது. எப்பொழுதென்றால் 'உண்ணாதே' என்று கூறிய பழத்தை அவன் உண்டபோது.

## விவிலியத்தின் விளக்கம்

'அப்பழத்தை உண்ணாதே' என்று தேவன் முதல் மனிதனாகிய ஆதாமுக்கு கட்டளையிட்டார். ஆனால் அவன் கடவுளின் கட்டளையை மீறி பாவம் செய்த போது, முதல் கொடியாகிய ஆதாமில் மோகக் கொடியாகிய பாவம் படர்ந்தது.

எனவே ஆதாம் வழி பிறக்கிற மக்கள் அனைவருமே பாவத்துக்கு உள்ளாயினர். இவ்வாறு பிறக்கும் போதே அவர்களைத் தொடர்ந்து வருகின்ற பாவத்தை 'சகஸமலம்"(இயல்பாகவே வரும் பாவம்) என சைவமும் "ஜென்மபந்தம் "என்று வைணவமும் குறிப்பிடுகின்றன.

## c) மனிதரை மீட்க கடவுள் மனிதனானார்

*"அவன் கண்டாய் நன்னெஞ்சே ஆரருளும் கேடும்*
*அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான் அவன் கண்டாய்"*

*(நாலாயிர திவ்விய பிரபந்தம் இயற்பா இரண்டாந் திருவந்தாதி (24)-3307)*

பொருள்

மாசே இல்லாத கடவுள் மாசுள்ள மனிதனின் பாவத்தை அறுத்து மீட்பதற்காக ஐம்புலன்களையுடைய மனிதனானார்

## சித்தர்கள் பாடல்கள்

சித்தர்கள் கடவுளோடு நெருங்கிய உறவை வளர்த்தவர்கள். அவர்கள் கடவுளின் அருளும் வல்லமையும் அதிகமாய் பெற்று அனேக பாடல்களையும், இலக்கியங்களையும், தத்துவங்களையும், சாத்திரங்களையும் இயற்றினார்கள். மட்டுமல்ல, அவர்கள் அந்நாட்களில் எழுந்த பொல்லாத பிராமணீய ஜாதிக்கொள்கைகளை எதிர்த்தார்கள். ஆரியர்கள் திராவிடர்களின் மதங்களில் பல திருக்குகள் செலுத்தி ஆரிய வைதீகத்துக்கு அடிமைப்படுத்த முயற்சித்த போது அதை சித்தர்கள் எதிர்த்தார்கள்.

## அகஸ்தியர் என்ற சித்தரின் பாட்டு

அகஸ்தியர் கடவுளின் பிறப்பு இறப்பு, உயிர்ப்பு ஆகியவற்றை சுட்டிக் காட்டி பாடும் பாடல்

*"வணங்குவாய் செகசோதி ஒருவனாகி*
*மாநிலத்தை ஒரு நொடியில் வகுத்தே மண்ணில்*
*குணமான மனிதரையும் படைத்த பின்பு*
*குவலயத்தில் தானுதித்துக் குருவாய் வந்து*
*சனமான சமுசாரம் ஒன்றில்லாமல்*
*சன்னியாசி போலிருந்து தவத்தைக் காட்டி*
*அன்பான சித்தர்களை இருத்திப் போட்டு*
*அகண்டதலஞ் சென்றவரை அண்டுவாயே"*

அதிகாரம் 22

# திராவிடர்களின் சைவ, வைணவ மதங்கள்

(தொடர் - 5)

## வேதாந்த வளர்ச்சி

திராவிடராகிய வேதவியாசரால் சமிஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட வேதங்களை குறித்து முன்னே பார்த்தோம்.

வேதங்களை விளக்குவது பிராமணங்களாகும். பிராமணங்களோடு இணைக்கப்பட்டவை ஆரண்யகங்கள். ஆரண்யகங்களின் கடைத்துகையாக இருப்பது உபனிஷத்துக்கள். எனவே ஒவ்வொரு வேதங்களுக்கும் பிராமணங்களும் ஆரண்யகங்களும் உபனிஷத்துக்களும் உண்டு.

### வேதங்களின் பிராமணங்கள்

#### 1. ரிக் வேத பிராமணங்கள்

ஐதரேயம், கவுஷிதம் போன்றவை

#### 2. சாம வேத பிராமணங்கள்

சாந்தோக்கியம் போன்றவை

### 3. சுக்ல எஜுர் வேதத்தில்

சதபதப் பிராமணம் போன்றவை

### 4. யஜுர் வேதத்தில்

தைத்தரீய பிராமணம் போன்றவை

### 5. அதர்வண வேதத்தில்

கோபதப் பிராமணம் போன்றவை

### உபநிஷத்துக்கள்

இவை வேதங்களின் விளக்க உரைகளான பிராமணங்களுடையவும் ஆரண்ணியகங்களுடையவும் கடைத்துகையாக உண்டாக்கப்பட்டவை. இவைகளுக்கு வேதாந்தம் என்று பெயர்.

### பிரிவுகள்

ரிக் வேதத்தில் 21 பிரிவுகளும் யஜுர் வேதத்தில் 109 பிரிவுகளும், சாம வேதத்திற்கு 1000 பிரிவுகளும் ஒவ்வொரு பிரிவுகளுக்கும் ஒவ்வொரு உபனிஷத்துக்களும் உள்ளதாக முக்தி கோபனிஷத்தில் சொல்லப்படுகிறது. ஆனால் 108 உபனிஷத்துக்கள் முக்கியமானவை என்றும் அது கூறுகிறது.

### 1. ரிக்வேத உபனிஷத்துக்கள்

ஐதரேயம் போன்ற - 10

### 2. கிருஷ்ண யஜுர் வேதிகம்

கடம், தைத்தரீயம் போன்ற - 30

### 3. சுக்ல யஜுர் வேத சாகியம்

ப்ரகதாரண்யம் போன்ற -19

### 4. சாம வேதம்

கேனம், சாந்தோக்கியம் போன்ற - 16

### 5. அதர்வ சாகீயம்

முண்டகம், மாண்டுக்யம் போன்ற -31

### தசோபனிஷத்துக்கள்

உபனிஷத்துக்களில் மிக முக்கியமானவையாக கருதப்படுபவை தசோபனிஷத்துக்கள் எனப்படுகிறது. அவையாவன :

"ஈசம், கேனம் கஃப்றஸ்ன முண்டக மாண்டூக்கிய, தித்திரி
ஐதரேயம், சஃச்சாந்தோக்கியம் ப்ரஹதாரண்யகம் ததா"

### கருத்துக்களின் வேறுபாடு

வேதங்களில் பல முறைகளில் விளக்கங்களும் சிந்தனைகளும் பல காலங்களில் அளிக்கப்பட்டுக் கொண்டே இருந்தது. நூல்களை எழுது பவர்கள் தங்கள் கருத்துக்களை வலியுறுத்தினார்கள். உபனிஷத்தை இயற்றியவர்களும் வேறுபட்ட கருத்துடையவர்களாயிருந்தார்கள். எனவே உபனிஷத்துக்கள் ஒவ்வொன்றும் வேறுபட்ட கருத்துடையவை களாகவும் காணப்படுகிறது.

### வேதமும் வேதாந்தமும்

பழைய ஏற்பாட்டு சமயம் பலி செலுத்தி வழிபட்ட சமயமாகும். அது போல ஆரியர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட வேதங்களும் பலி செலுத்தும் முறைகளை கூறுவதாகும். புதிய ஏற்பாடு பலி செலுத்தும் முறைகளை நிறுத்தி விடுவதாகும். அது குமாரனாகிய கிறிஸ்து மனுக்குலத்தின் பாவ பரிகாரத்துக்காக தம்மையே பலி செலுத்தி விட்ட படியால் இனிமேல் பலி செலுத்த தேவை இல்லை என்ற பலி நிறைவேற்று கோட்பாட்டை வலியுறுத்துகிறது. அதே வண்ணமாய் வேதாந்தம் வேதங்களில் கூறப்படும் பலி கோட்பாட்டை நிறுத்தி பலி

நிறைவேற்று கோட்பாட்டை வலியுறுத்துகிறது. வடநாட்டில் தோமாவின் ஊழியம் வேதாந்தமாக வளர்ந்தது.

## வேதாந்தத்தின் அடிப்படை நூல்கள்

வேதாந்தத்தின் அடிப்படையான நூல்கள் 'பிறஸ்தான த்றயா' என்று அழைக்கப்படுகிறது. அவையாவன 1. உபனிஷத்துக்கள் 2. பிரம்ம சூத்திரம் 3. பகவத் கீதை ஆகியவையாகும்.

## தரிசனங்கள்

உபனிஷத்துக்கள் பெரும்பாலும் உரைநடை வடிவங்களில் அமைந்துள்ளதாகும். இது பற்பல காலங்களில் பற்பல முனிவர்களின் மாணாக்கள் எழுப்பிய வினாக்களுக்கு அளிக்கப்பட்ட விடைகளாகும். உபனிஷத்துகளின் கருத்துகளை ஒன்றுபடுத்தி விளக்கும் முயற்சிகளாக வேதாந்த தரிசனங்கள் காணப்படுகின்றன. அந்த தரிசனங்களாவன :-

1. சாங்கியம் 2. யோகம் 3. நியாயம் 4. வைசேடிகம் 5. பூர்வ மீமாம்சை 6. உத்தர மீமாம்சை ஆகியவை ஆகும்.

## பூர்வமீ மாம்சை

தரிசனங்களில் பூர்வ மீமாம்சை மட்டும் ஆரியரான ஜைமினி எழுதியதாகும். மற்றவை எல்லாம் திராவிடர்களான கபிலன், பதஞ்சலி, அக்ஷபாதன், கணாதனன், பாதராயணன், வியாசர் ஆகியோர் எழுதியவை ஆகும். ஜைமினி என்பவர் பலிக் கோட்பாடு தொடர வேண்டும் என்ற கருத்தில் புரோகிதருடைய நலனுக்காக எழுதிய தரிசனமே பூர்வ மீமாம்சை என்பதாகும்.

## பிரம்ம சூத்திரம்

பூர்வ மாம்சையைத் தவிர மீதமுள்ள 5 தரிசனங்களும் இணைத்து பிரம்ம சூத்திரம் என்னும் வேதாந்த சூத்திரம் வியாசரால் இயற்றப் பட்டது. இது பிரம்மனாகிய கடவுளைப் பற்றிய ஞானத்தை விளக்கி

உரைக்கிறது. பிரம்மன் என்பது இயேசுக் கிறிஸ்துவையே குறிக்கும் என்றும் 'பிரம்ம சூத்திரம்' இயேசுக்கிறிஸ்துவைப் பற்றிய ஆன்மீக ஆராய்ச்சியே ஆகும் என்றும் காணப்படுகிறது. பிரம்ம சூத்திரம் சாரீரக 'மீ மாம்சை' என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது. அதாவது சரீரத்தில் வந்த கடவுளைப் பற்றிய ஞானம் என்பது இதன் பொருள். இது இயேசுவைப் பற்றியே இயற்றப்பட்ட நூல் என்பதைக் குறித்து சமீப கால ஆராய்ச்சிகள் விளக்குகிறது. வியாசரின் உத்தர மீ மாம்சை வேதாந்தம் என்றே அழைக்கப்படுகிறது.

## பலி நிறை வேற்று கோட்பாடு

வியாசரின் கருத்துகள் அனைத்தும் பலிநிறை வேற்றக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டவையாகும் .கடவுள் மனிதனாகி மனித னுக்காக பலியாகி விட்டார். எனவே இனிமேல் மனிதன் பலி செலுத்த வேண்டியதில்லை என்னும், கருத்து தோமாவால் உபதேசிக் கப்பட்டபடியால் ஆது வேதாந்தமாக இந்தியாவிலும் ஏற்றுக்கொள்ளப் பட்டது. பாவ பரிகாரத்துக்கு பலிகள் தேவை என்பதற்காக வியாசர் தாம் இயற்றிய வேதங்களில் பலிக் கோட்பாட்டை விளக்கினார். ஆனால் தேவனே மண்ணில் வந்து பலியாகி விட்டதால் இனிமேல் மனிதன் பலி செலுத்த தேவையில்லை என்பதே பலி நிறைவேற்றக் கோட்பாடு. இதை விளக்குவதே வேதாந்தம்.

## வேதாந்தத்தில் பலி நிறைவேறல்

ருக் வேதம் 10 - ஆவது காண்டத்தில் பிரஜாபதி அல்லது யஜ்ஞ புருஷனை குறித்து சொல்லப்படுகிறது. வேதத்தின் அந்தமாக யஜ்ஞ புருஷன் பலியாக்கப்பட வேண்டும். அது பாவியரின் பாவங்களுக்கு பரிகாரமாகும். யஞ்ன புருஷன் பலியாக்கப் பட்ட பின் வேதங்களில் கூறப்படும் பலி செலுத்தப்பட வேண்டியதில்லை. இதுவே வேதாந்தமாகும்.

## யாக புருஷன்

இந்த யஜ்ன புருஷனை குறித்து ருக் வேதத்தில் பின்னால்

சேர்க்கப்பட்ட 10- ஆவது காண்டத்திலும் மற்றும் உபநிடதங்களிலும் பார்க்கலாம்.

## பிராஜாபதி ஒரு 'யாக' சரீரத்தை விரும்பினார்

*தஸ்யஹ பிரஜாபதே ரற்த்தமேவ*
*மர்த்யமாஸி தர்த்தம மிற்தம்*
*சதேவேத்ய ஆத்மானம் பிறதாய*
*அதைய்த மாத் மன பிறதிமான மஸ்ய*
*ஜத்யல் யஜ்ஞும் தஸ்மா தாக்யூ*
*பிரஜாபதிர் யஜ்ஞ*

*சதபத பிராமணம் 10-1-3:2*

### பொருள்

பிரஜாபதி தனக்கு பாதி அழிவுக்குரியதும், பாதி அழிவில்லாதது மான ஒரு சரீரத்தை வாஞ்சித்து அதை பெற்றுக் கொண்டார். அதை அவர் தானாக பலியாக்கினார். எனவே பிரஜாபதியே யஜ்ஞும் அல்லது யாகம் ஆனார். இது இயேசு கிறிஸ்துவை தவிர வேறு ஒருவருக்கும் பொருந்தாது. இயேசு மனுஷ குமாரனும் தேவகுமாரனுமாய் உலகத்தில் வந்து தம்மையே சிலுவையில் பலியாக்கினார்.

## பிரஜாபதியே பலிப்பொருள்

*"புருஷோவா வயஜ்ஞ"*
*புருஷனே தான் யஜ்ஞும் (யாகம்)*

*சாந்தோக்ய உப 3-16-1*

*"சேயா காமயத மேத்யம் ஸ இதம் ஸ்யால்*
*ஆத்மன் வ்யனேன ஸ்யமிதி"*

*பிரகதா. உப 1-2-7*

பரிசுத்தமான ஒரு யஜ்ஞ (யாக) சரீரம் எனக்குண்டாகட்டும் என்று பிரஜாபதி விரும்பினார். (சங்கீதம் 40.6, எபி 10.6,7. காண்க).

## பலி மிருகங்கள் கடவுள் பலிக்கு நிழலே

*"தம் யஜ்ஞும் பற்ஹிஷி ப்றவ்ச்சன்*
*புருஷம் ஜாத மக்கிரத;*
*தேன தேவா அயஜந்தா*
*சாத்யா றுஷய ஸ்சயே"*

*ருக்- புருஷ சூக்தம் 90-7*

முதல்முதலாய் உண்டான அந்த யஞ்ன ரூபனான புருஷனை தேவர்களும் பலிப் பொருளாக ஏற்றுக் கொண்டு யஜ்ஞும் செய்தார்கள். (பசு மற்றும் மிருகங்கள் என்ற நிலையில் ஏற்றுக் கொண்டு)

## யஜ்ஞ புருஷனின் அற்பணம்

*ய இமா விஸ்வா புவனானி ஜுஹ்றவ த்றுஷிற்*
*ஹோதா ன்ய சீபத் பிதா ந:*
*ஸ ஆ சிக்ஷ த்ரமிணாமிச்ச மான :*
*ப்றதம ச்சதவராம் ஆ விவேச.*

*றுக் 81:1*

உலக சிருஷ்டிகரே எங்கள் பிதா. அவரே பலி செலுத்துபவர். அவர் தாமாகவே தம்மை பலியாக அற்பணித்தார்.

இங்கு கூறப்படும் பிரஜாபதி இயேசுக் கிறிஸ்துவுக்கே பொருத்த மானது. அவர் யஜ்ஞ சரீரத்தோடு பூமியில் வந்தார். (உலகத் தோற்றத் துக்கு முன் அடிக்கப்பட்ட தேவ ஆட்டுக் குட்டி) அவர் தாமாகவே தம்மை உலக வரலாற்றில் பலியாக்கினார். "அவர் உலகத்தில் பிரவேசிக்கும் போது ....ஒரு சரீரத்தை எனக்கு ஆயத்தம் பண்ணினீர் ....அப்பொழுது நான் தேவனே உம்முடைய சித்தத்தின் படி செய்ய இதோ வருகிறேன்...." எபி 10 :5,7.

## முக்திக்கு ஒரே வழி

*"தேவா ஹமேதம் புருஷம் மகாந்தா மதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் சமேவ விதித் வாதி ம்றுத்யு மேதி நான்ய பந்தா வித்ய தேயனாய"*

*யஜுர் வேதம் 31:18*

மகிமையுடையவராகிய இந்த- பிரஜாபதியை ஒளிமயமானவராய் நான் காண்கிறேன். இவரை அறிவதால் மட்டுமே சாவை ஜெயிக்க முடியும். வேறு வழிகளே இல்லை. இவரே- ஒரே வழி.

"நானே வழியும் சத்தியவும் ஜீவனுமாயிருக்கிறேன் என்னாலே அல்லாமல் ஒருவன் பிதாவிடத்தில் வரான்" யோ. 14.6 மனிதனுக்காக பலியானவர் மற்றொருவரும் இல்லை. அவரை ஏற்றுக் கொள்ப வருக்கு மட்டுமே இரட்சிப்பு உண்டு.

*(இவைகளைக் குறித்து மேலும் அறிய விரும்புவோர் கிருஷ்ணன் குட்டி என்பவர் எழுதிய 'பாரதீய மத சம்கிரகம்' என்ற நூலை படிக்கவும்.)*

## சைவம் வைணவம் வேதாந்தம் - கருத்தென்ன ?

சைவ வைணவ இலக்கியங்களையும் வேதாந்தக் கருத்துக்களையும் கூர்ந்து கவனிக்கும் போது அவை உலக வரலாற்றில் மனிதனாக அவதரித்த தேவனையே (இயேசு) வெளிப்படுத்துகின்றன என்று பார்க்க முடிகிறது. ஆனால் அவைகளுக்கு தவறான உரைகள் எழுதப்பட்டு திசை திருப்பப்பட்டு இருப்பதை பார்க்க முடிகிறது. இவை அனைத்தும் இந்துத்துவாவுக்கு அடிமைப்படுத்தப்பட்டு உண்மை கருத்துகளுக்கு மாறாய் விளக்கங்கள் கொடுக்கப்பட்டு இருப்பதை சமீப கால அறிஞர்கள் கண்டறிந்து கொண்டிருக்கிறார்கள். அதிவிரைவில் உண்மைக் கருத்துகள் முற்றிலும் வெளிக் கொண்டு வரப்பட்டு சைவ வைணவ சமய இலக்கியங்களில் அடங்கியிருக்கும் விவிலியக் கருத்துக்கள் விளக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## திருநீறு குங்குமம் - உண்மை விளக்கம்

சைவ மக்கள் பொதுவாக திருநீறு சந்தனப் பொட்டு, குங்குமம் ஆகியவை அணிந்து கொள்ளுகிறார்கள். ஆனால் இந்த ஆசாரங்கள் எங்கிருந்து வந்தது, எதற்காக செய்யப்படுகிறது என்பது குறித்து எவரும் சிந்திப்பதில்லை. இவற்றின் ஆரம்பத்தை குறித்து அறிய வேண்டுமானால் நாம் விவிலியத்தை நோக்க வேண்டும் என்பதே உண்மை.

## திருநீற்று திருநாள்

கிறிஸ்தவ திருநாட்களில் சாம்பற் புதன்கிழமை திருநீற்றுத் திருநாள் என்று சிறப்பிக்கப்படுகிறது. அந்நாளில் கிறிஸ்தவர்களின் சில பிரிவினர் தங்கள் நெற்றிகளில் திருநீறு பூசிக் கொள்ளுகிறார்கள். இது இயேசுக் கிறிஸ்துவின் பாடு மரணங்களை தியானம் செய்யும் தவசு காலத்தின் தொடக்க நாளிலாகும்.

## விவிலியத்தில் திருநீறு

பழைய ஏற்பாட்டில் திருநீறு தயாரிக்கும் முறை குறித்து எண்.19 அதிகாரத்தில் பார்க்கிறோம். பழுதற்ற ஒரு செங்கிடாரியை பாளை யத்துக்கு புறம்பே எடுத்துச் சென்று அதை அடித்து அதின் தோலும் மாம்சமும் இரத்தமும் சாணியும் சுட்டெரித்து அந்த சாம்பலை வாரி சுத்தமான ஒரு இடத்திலே இஸ்ரவேல் புத்திரரின் சபைக்கு தீட்டு கழிக்கும் பொருட்டாக கொட்டி வைக்க வேண்டும், அது பாவத்தை பரிகரிக்கும். புதிய ஏற்பாட்டு காலத்தில் இயேசுக் கிறிஸ்து இரத்தம் சிந்தியதால் அவருடைய இரத்தத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப் பட்டிருப்பதை எபி 9 : 13 -ல் வாசிக்கிறோம்.

## சைவ, வைணவ சமயங்களில் திருநீறு

திராவிடர்கள் தோமா அப்போஸ்தலரின் கிறிஸ்தவ கொள்கை களை ஏற்றுப் கொண்டபடியால் ஏற்பட்ட விளைவுகளே சைவ, வைணவ மதங்கள் என்று பார்த்தோம். பழைய ஏற்பாட்டு காலத் திற்குப் பின் கிறிஸ்தவத்தின் அடையாளமாக சைவர்கள் திருநீறை பயன்படுத்தலானார்கள். பிதா, குமாரன், பரிசுத்த ஆவி ஆகிய கடவு ளின் திரித்துவக் கோட்பாட்டை உலகத்தாருக்கு விளக்குவதற்காக திருநீற்றால் மூன்று கோடுகள் இடப்பட்டன. குமாரன் மரத்தில் இரத்தம் சிந்தியதால் பாவ மன்னிப்பு ஏற்பட்டது என்பதனை விளக்க மகனை குறிக்கும் மைய கோட்டின் மத்தியில் மரத்தின் வழியாக இரத்தம் சிந்தினார் என்பதை தெரிவிக்க சந்தன மரத்தினால் ஆன சந்தன பொட்டும் அதின் மையத்தில் இரத்தத்தை குறிக்க சிவப்பு

குங்கும பொட்டும் இடப்பட்டு இயேசுக் கிறிஸ்துவின் நற்செய்தியை சைவர்கள் வெளிப்படுத்துகிறார்கள்.

## திருநீற்றிலிருந்து திருமண்

சைவத்திலிருந்து வைணவம் பிரிய நேர்ந்த போது திருநீற்றிலிருந்த திருமண் அணியும் நிலை ஏற்பட்டது. இயேசு இரத்தம் சிந்தி நம்மை மீட்டுக் கொண்டார் என்பதை காட்ட நெற்றியில் மூன்று கோடுகள் செங்குத்தாக மேலிருந்து கீழாக இடப்பட்டன. குமாரன் இரத்தம் சிந்துவதை காட்ட மைய்யக்கோடு சிவப்பு கோடாக மாற்றப்பட்டது. மேலிருந்து இரத்தம் சொட்டுவதை காட்ட சிவப்பு கோடு மேலே ஒடுக்கமாகவும் கீழே வரவர விரிவாகவும் காட்டப் பட்டது.

பழைய ஏற்பாட்டில் கூறப்பட்டுள்ள திருநீற்றையும் புதிய ஏற்பாட்டில் கூறப்படும் இயேசு கிறிஸ்துவின் சிலுவை மரணத்தால் கிடைக்கப் பெறும் இரட்சிப்பயையும் அடிப்படையாகக் கொண்டு ஆதி இந்திய கிறிஸ்தவர்கள் திருநீறு, சந்தனப் பொட்டு, குங்குமம் ஆகியவற்றை உபயோகித்து வந்தார்கள். பின்நாட்களில் ஆதி இந்திய கிறிஸ்தவ நிலைகள் திசை திருப்பப்படவே சைவ, வைணவ மதங்கள் இந்து மதம் என்ற போர்வைக்குள் சிக்கி இவை இன்று பொருள் இழந்தவையாய் காணப்படுகிறது. மட்டுமல்ல, இவற்றின் உண்மை நோக்கத்தை அழித்துவிடத் தக்கதாய் திருநீறு, சந்தனம், குங்குமம் மாற்றப்பட்டு காவிப் பொட்டு மட்டும் வைத்துக் கொள்ள மக்கள் இழுக்கப் படுகிறார்கள்.

## ஓம், ஆம், ஆமேன்

ஆம் அல்லது ஆமேன் என்பதன் பொருள் அப்படியே ஆகக் கடவது என்பதாகும். விவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் அது கடவுளின் நாமமாகவும் கூறப்படுகிறது. ஓம் என்பதும் ஆம் என்ப தற்கு பதிலாய் பயன்படுத்தும் சொல்லாகவே காணப்படுகிறது. யோவான் ஆதியிலே வார்த்தை இருந்தது அந்த வார்த்தை தேவனாயிருந்தது.....

என்கிறார். ஆதி வார்த்தையின் தொனி (ஒலியாகவும்) காணப் படுகிறது.

ஓம் என்ற வார்த்தை வேதங்களிலும் பயன்படுத்தப்படுகிறது. அங்கே ஓம் என்பது முனை மந்திரம் அல்லது பிரணவ மந்திரம் என்று கூறப்படுகிறது. வேதாந்தத்தில் ஓம் என்ற மந்திரம் முக்கியமானதாக கருதப்படுகிறது. 'ஓம்' என்பது தமிழில் 'ஆம்' என்பதைக் குறிக்கும். ஆம், ஆமேன் என்னும் சொற்கள் இயேசுக் கிறிஸ்துவுக்கு வழங்கும் பெயர்களாகவும் காணப்படுகிறது (2கொரி 1 :20 வெளி 3:14). ஓம் என்பதை ஓம் காரம் என்றும் குறிப்பிடுவர். அது வார்த்தை. வார்த்தை கடவுளே. வார்த்தை மாம்சமாகியவர் இயேசுக் கிறிஸ்துவே ஆவார். ஓங்காரத்திலிருந்து பிரபஞ்சமே உண்டாயிற்று என்று சைவ வைணவ நூல்கள் கூறுகின்றன. தேவனே சருவ சிருஷ்டிகர்.

விவிலியத்தில் காணப்படும் ஆம் ஆமேன் ஆகிய வார்த்தைகள் பிற்காலங்களில் வேதங்களில் ஓம் காரமாக எடுத்துக் கொள்ளப்பட்டது. "அவருடைய நாமம் வார்த்தை என்பதே" - வெளி. 19 : 13

அதிகாரம் 23

# திராவிடர்களின் சைவ, வைணவ மதங்கள்

(தொடர் - 6)

## இதிகாசங்களும் புராணங்களும்

இதிகாசங்கள் இரண்டு

1. இராமாயணம்
2. மகா பாரதம்

### இராமாயணம்

இதை எழுதியவர் வால்மீகி என்ற திராவிடர். இது பாலகாண்டம், அயோத்திய காண்டம், ஆரண்ய காண்டம், கிஸ்கிந்த காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்தர காண்டம், என்று ஏழு காண்டங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறது.

இராமாயணக் கதைகள் அத்யாத்ம இராமாயணம், வால்மீகி இராமயணம், பாதாள இராமாயணம், தசமுக இராமாயணம் போன்ற பல விதங்களில் உண்டு. ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு விதமாக காணப்படுகிறது. சீதையை இராவணனின் மகளாக கூறப்படும் கதைகளும் உண்டு. இராமனின் கதை கற்பனை கதை என்று ஆர்.சி.தத்

என்பவர் கூறியிருக்கிறார். ஞான சூரியன் என்ற நூலில் இராமர் கதை அசோக மன்னனை மனதிற் கொண்டு இயற்றப்பட்ட ஒரு கற்பனை கதை என்று கூறப்படுகிறது.

## மகாபாரதம்

மகாபாரதத்தை இயற்றியவர் வியாசர் என்ற திராவிடர் ஆகும். உண்மைக் கதைகள் கற்பனை கதைகள், வரலாற்று கதைகள், புராணங்கள் ஆகியவற்றை பொருத்தப்படுத்தும் முயற்சிகளாகும் மகாபாரதம் என்று பாரதீய தர்சனத்தில் ராதாகிருஷ்ணன் கூறுகிறார்.

## பொருள் அடக்கம்

ஒரே குடும்பத்தின் அரச குமாரர்கள் ராஜ்யத்தின் உரிமை கோரி கோஷ்டிகளாக பிரிந்து நடத்திய போர்தான் மகாபாரதத்தின் முக்கிய பொருள். இதை ஆதிபர்வம், சபாபர்வம், வனபர்வம், விராடம், உத்யோகம், பீஷ்மம், த்ரோணம், கர்ணம், சல்யம், சௌப்த்திகம், ஸ்திரீ, சாந்தி, அனுஸாஸனம், அஸ்வ மேதிகம், ஆஸ்ரமவாசிகம், மௌசலம், மகாபிரஸ்தானம், சொர்கா ரோகணம் என்ற பதினெட்டு அதிகாரங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறது. பீஷ்மபர்வத்தில் ஒரு பாகம்தான் பகவத் கீதை.

## பகவத் கீதை

இது பீஷ்ம பர்வம் 25 முதல் 45 வரையிலான பாகங்களில் காணப் படுகிறது. கிருஷ்ணனுக்கும், அர்ஜீனனுக்கும், நடந்த உரையாடல் பகவத் கீதை என அழைக்கப்படுகிறது. கௌரவ பாண்டவர்கள் இரு பக்கங்களில் யுத்தத்திற்காக அணிவகுத்து நிற்கிறார்கள். சேனையின் மத்தியில் பாண்டவ சேனையின் சுடரென ஜொலிக்கும் அர்ஜீனன் தேரை ஓட்டி வந்த கிருஷ்ணனிடம் தேரை நிறுத்தச் சொன்னதையிட்டு தேர் நிறுத்தப்படுகிறது. சுற்றிலும் நிற்கும் சகோதரர்களையும், பெந்துக்களையும், சினேகிதர்களையும், குருமாரையும் பார்த்து யுத்தம் செய்ய மனமற்றுப் போயிருந்த அர்ஜீனனை ஊக்குவித்து உற்சாகப் படுத்தி யுத்தம் செய்ய தூண்டும் தத்துவ உபதேசம் ஆகும் கீதை.

அனாரியமான பாகவத மதத்தை ஆரிய தர்மமுமாக ஒன்று சேர்த்து பாகவதத்தின் வாசு தேவ கிருஷ்ண பக்திக்கு முக்கியத்துவம் கொடுத்து கிருஷ்ணனை உன்னத தெய்வமாக உயர்த்தி எழுதப்பட்ட ஒன்றாகும் கீதை என்று 'India Histroy'-யில் Sreedaramenon கூறியிருக்கிறார்.

## புராணங்கள்

புராணங்கள் என்றால் பழங்காலங்களில் உண்டானவை என்று பொருள். மகா புராணம், உப புராணம் என்று இருவகை புராணங்களை காண்கிறோம். வேதாந்தங்களை சாதாரண மக்கள் புரிந்து கொள்ளும் விதம் அவற்றின் கருத்துக்களை கதைகளில் புகுத்தி எழுதப்பட்டவை யாகும் புராணங்கள்.

### பிரிவுகள்

புராணங்களை 1. பிரம்ம புராணங்கள் 2. விஷ்ணு புராணங்கள் 3. சிவ புராணங்கள் என மூன்றாக பிரிக்கப்படுகிறது.

### புராணங்களும் அவதாரங்களும்

அவதாரம் என்ற வார்த்தைக்கு கீழே இறங்கி வருதல் என்பது பொருள். கடவுள் பரலோகத்தை விட்டு பூமிக்கு இறங்கி வந்தார் என்பதே அதின் பொருள். கடவுள் மனிதராக பிறந்தார் என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகும்.

இயேசுவைத் தவிர வரலாற்றில் மனிதனாகப் பிறந்த தேவன் மற்று எவரும் இல்லை. வரலாற்றுக்கு அடிப்படையான ஒன்றை விளக்குவ தற்காக புராண கதைகள் உண்டாக்கப்பட்டது. புராணங்களில் விஷ்ணு வுக்கு 24 அவதாரங்கள் உள்ளதாக கூறப்படுகிறது. தேவி பாகவதப்படி 26 அவதாரங்கள் என்றும் கூறப்படுகிறது. சிலர் பாலபத்திரனையும் சிலர் புத்தரையும் அவதாரமாக எடுத்துக் கொள்கிறார்கள். ப்றுகுவின் சாபத்தால் விஷ்ணு அவதாரங்கள் எடுக்க வேண்டியதாயிற்று என்று விளக்கப்படுகிறது. பொதுவாக முக்கியமானதாக கூறப்படும் அவதாரங்கள் பத்து என்பது கருத்து.

## தசாவதாரங்கள்

மத்ஸ்ய, கூர்ம, வராஹச்ச, நரசிம்ஹச்ச, வாமனா;
ராமோ, ராமஸ்ச, ராமஸ்ச, கிருஷ்ண, கல்க்கிற், ஜனாற்தனா.

## மத்ஸ்ய அவதாரம்

பிராம்மாவின் கைகளிலிருந்து வேதங்களை அபகரித்து கொண்டு சென்ற ஹயக்றீவனை கொன்று வேதங்களை மீட்பதே இவ் அவதார நோக்கம்.

## கூர்மம்

துர்வாசா மகரிஷியின் சாபத்தால் சபிக்கப்பட்ட தேவர்களை சாபத்தினின்று விடுவித்து முன் நிலைமைக்குகொண்டு சேர்ப்பதற்கு மருந்தாகிய அமிர்தத்தை எடுக்க பால்கடல் கடையப்பட்டது. மந்தர மலை கடைக்கோலும் வாசுகி என்ற சர்ப்பம் கயிறுமாக உபயோகிக்கப் பட்டது. ஆனால் மந்தரமலை தாழ்ந்து போக ஆரம்பித்த போது விஷ்ணு ஆமையாக அவதரித்து மலையை தாங்கிக் கொண்டார் (மீட்டுக் கொண்டார்) என்பது புராணம்.

## வராகம்

ஹிரண்யாக்ஷன் என்ற அசுரன் பூமியை கையில் எடுத்துக் கொண்டு பாதாளத்தில் ஓடி விட்டான். விஷ்ணு வராகமாய்(பன்றி) அவதரித்து ஹிரண்யாக்ஷனை கொன்று பூமியை மீட்டுக் கொண்டார்.

## நரசிம்ஹம்

பக்தனான ப்ரஹ்ளாதனின் பிதாவான ஹிரண்யகசிபுவை கொல்வதற்காக நரசிம்ஹமாக அவதரித்து ப்ரஹ்ளாதனை மீட்டுக் கொண்டார்.

## வாமனன்

மகா பலியை கீழ்படுத்தி தேவர்களை மீட்டுக் கொள்ள.

### பரசுராமன்

துன்மார்க்கரான சத்ரிய ராஜாக்களை கொன்று தர்மத்தை மீட்க.

### ஸ்ரீராமன்

இராவணனை கொன்று சீதையை மீட்க.

### பலபத்ரன்

கிருஷ்ணனின் அவதாரத்தை ஆதரித்து உதவி செய்ய.

### ஸ்ரீறி கிருஷ்ணன்

துஷ்ட நிக்ரகம் செய்து தர்மம் நிலைநாட்டி நீதியை மீட்க.

### கல்கி

கலியுகத்தில் அதர்மம் உன்னத நிலையில் எட்டும்போது துஷ்டரை நிக்கிரகம் செய்வதுதான் நோக்கம்

### வரலாற்றில் அவதரித்தவர்

உலக வரலாற்றில் தேவன் மனிதனாக அவதரித்தார். அவர் இயேசுக் கிறிஸ்து ஒருவரே. அந்த வரலாற்று நிகழ்ச்சியை தோமா திராவிடர்களுக்கு விளக்கினார். பின்நாட்களில் அந்த வரலாற்று நிகழ்ச்சியை ஆதாரமாக கொண்டு பல கதைகள் உருவாக்கப்படுவதை பார்க்கிறோம். இவை புராண கதைகளென்று அழைக்கப்படுகிறது. நடந்த ஒரே ஒரு வரலாற்று நிகழ்ச்சி (மனிதனை மீட்க கடவுள் உலகத்தில் அவதரித்தார் என்பது) பல புராண கதைகளில் கடவுள் உலகில் அவதரித்து மீட்டுக் கொள்கிறவர் என்பதை விளக்குகிறது.

அதிகாரம் 24

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 2)

## வரலாற்றுப் பின்னணி

கி.பி 7-ஆம் நூற்றாண்டு முதல் 14 ஆம் நூற்றாண்டு வரையிலான காலங்களில் திராவிட மக்கள் எந்தெந்த வகைகளில் முன்னேற்றம் அடைந்திருந்தார்கள் என்று பார்த்தோம். அதே வேளையில் அதே காலங்களில் (7 to 14 C. AD) அன்னியர்களான ஆரியர்கள் திராவிடர்களை படிப்படியாக கீழ்படுத்தி திராவிடர்களின் சகல மேன்மைகளையும் அபகரித்து அவர்களை இழிவுபடுத்தி ஜாதிக் கொள்கை என்ற வருணாசிரம தர்மத்தை அவர்கள் மேல் திணித்து அவர்களை ஆளத் தொடங்கிவிட்டார்கள். இதுவே இன்று பேசப்படும் இந்துத்துவாவின் ஆரம்பமாகும்.

### ஆரியர்கள் - ஒரு இனமா ?

பொதுவாக ஆரியர்கள் என்று ஒரு இனம் முன்னால் இருந்து வந்ததாகவும் அந்த ஜாதியினர் மிக மேன்மையானவர்கள் என்றும் அவர்கள் இந்தியாவில் குடியேறினார்கள் என்றும் கூறப்படுவதுண்டு. ஆனால் அந்தக் கூற்று முற்றிலும் தவறானதாகும். ஆரியர்கள் என்று ஒரு இனம் உலகின் எந்த தேசத்திலும் இருந்ததில்லை என்பது தான் வரலாற்று உண்மை. அப்படியானால் இன்று இந்தியாவில் ஆரியர்கள்

என்று அழைக்கப்படும் மக்கள் யார் ? எங்கிருந்து வந்தவர்கள் ? அவர்களுடைய வரலாற்றுப் பின்னணியம் என்ன ? அவர்கள் திராவிட இந்தியாவில் என்னென்ன செய்தார்கள் ? என்பதைக் குறித்து நாம் அறிய வேண்டும்.

## பன்னாட்டு அன்னியர்கள்

கி.மு 6- ஆம் நூற்றாண்டு முதல் அன்னிய நாட்டாராகிய பெர்சியர்கள், கிரேக்கர்கள், ரோமர்கள், சகர்கள், குஷாணர்கள் ஆகியோர் இந்தியாவில் குடியேறினார்கள் என்றும் அவர்கள் இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் வசித்து வந்தார்கள் என்றும் முன்னால் பார்த்தோம். கி.பி 4-ஆம் நூற்றாண்டிலிருந்து ஹீணர்கள் இந்தியாவுக்கு வர ஆரம்பித்தார்கள்.

## ஹூணர்கள் வருகை

ஹூணர்கள் சீனாவின் எல்லைப் பகுதிகளில் கி.மு 2 ஆம் நூற்றாண்டில் நாடோடிகளாக வாழ்ந்து கொண்டிருந்தவர்கள் ஆகும். இவர்களில் ஒரு பிரிவினர் ரோம பேரரசைத் தாக்கினர். மற்றும் ஓர் பிரிவினர் குப்த காலத்தில் இருந்தே அனேக தடவைகளில் இந்தியா மீது படையெடுத்தனர். கி.பி 606 க்கு பின் ஹர்ஷவர்த்தனனின் காலத்திலும் அவர்கள் இந்தியா மீது படையெடுத்து வந்தனர். ஹர்ஷவர்த்தனன் அவர்களை தடைசெய்து வந்தான்.

கி.பி. 647-ல் ஹர்ஷவர்த்தனின் மரணத்துக்குப் பின் அவர் சாம்ராஜ்யம் நலிவுற்றது. அதோடு ஹூணர்களின் பெலன் அதிகரித்தது. அவர்கள் படையெடுத்து கூட்டமாய் இந்தியாவில் பிரவேசித்தார்கள்.

## அன்னியர்கள் ஒன்றுபடுதல்

முன்பு இந்தியாவுக்குள் புகுந்து இந்தியாவின் வடமேற்கு பகுதிகளில் வசித்து நாடோடிகளாய் சுற்றித் திரிந்து, குதிரை, ஆடு, மாடு போன்ற மிருகங்களை தீயில் சுட்டுத் தின்று, சோமபானம், சுராப்பானம் ஆகிய மதுவகைகளை அருந்தி இவ்விதமாய் வாழ்க்கை

நடத்தி வந்த அன்னியர்களோடு ஹுணர்கள் சேர்ந்து கொண்டார்கள். இவ்வாறு பெர்சியர்கள், கிரேக்கர்கள், ரோமர்கள், சகர்கள், கூஷாணர்கள் ஆகிய கூட்டத்தாரோடு ஹுணர்களும் சேர்ந்து கொண்டு கி.பி 7-ம் நூற்றாண்டு முதல் ஓர் வேறுபட்ட வாழ்க்கை முறையை ஆரம்பித்தார்கள்.

## *மவுண்ட் அபு கூட்டணி*

கொடூரமான மூர்க்க வெறியுள்ள ஹுணர்களோடு அன்னியர்களான மற்று ஐந்து கூட்டத்தாரும் ஒன்று கலந்து வாழ ஆரம்பித்தார்கள். அவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து ராஜஸ்தானிலுள்ள மவுண்ட் அபு என்ற இடத்தில் வைத்து ஓர் கூட்டணி அமைத்துக் கொண்டார்கள். ஏழாம் நூற்றாண்டு வரை தங்களுக்குள் ஒற்றுமை இல்லாமல் ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொண்டிருந்த அன்னியர்கள் அது முதல் தங்களுக்குள் ஒற்றுமை ஆகி இந்திய மக்களை மிகவும் கொடுமைபடுத்தத் தொடங்கினார்கள். இவர்கள் இராஜ புத்திரர் என அழைக்கப்பட்டார்கள். வரலாற்று ஆசிரியர்கள் ஹுணர்களை சாத்தானின் கூட்டம் என குறிப்பிட்டுள்ளார்கள்.

## ஆரியவர்த்தம்

மேற்கூறியபடி ஒன்று சேர்ந்து கொண்ட பெர்சியர்கள், கிரேக்கர்கள், சகர்கள், ரோமர்கள், கூஷாணர்கள், ஹுணர்கள் ஆகிய அன்னியர்கள் பெரும் பெலன் பெற்று வடமேற்கு இந்தியாவின் சில பகுதிகளை பிடித்துக் கொண்டார்கள். அவர்கள் பிடித்துக் கொண்ட பிரதேசம் ஆரியவர்த்தம் என்று அழைக்கப்பட்டது. அந்த பிரதேசத்தில் இருந்த திராவிடர்களை அவர்கள் ஒடுக்கி துன்புறுத்தினார்கள். அனேகர் துரத்தப்பட்டார்கள். ஆரியர் என்ற வார்த்தைக்கு மேன்மையானவர்கள் என்பது பொருள். ஆரியவர்த்தத்தில் திராவிடர்களை கீழ்ப்படுத்தி தங்களை மேன்மைபடுத்தி தங்களுக்கென்று ஒரு வாழ்கை முறையை அமைத்துக் கொண்ட அன்னியர்கள் தங்களை ஆரியர்கள் அல்லது மேன்மையானவர்கள் என்று அழைத்துக் கொண்டார்கள்.

## ஆரியர்கள் யார் ?

முன் கூறியபடி பல தேசங்களில் இருந்து பல காலங்களில் இந்தியாவுக்கு வந்து நாடோடிகளாய் சுற்றி திரிந்து கூணர்களுடன் ஒன்று சேர்ந்து தங்கள் தனித்தன்மைகளை இழந்து ஒரு சமுதாயம் ஆக மாறி ஆரியவர்த்தத்தை பிடித்துக் கொண்ட அன்னியர்களே ஆரியர்கள் என்று அழைக்கப்பட்டார்கள் என்று காணப்படுகிறது.

## ஆரியர்களை குறித்து டாக்டர் அலெக்ஸாண்டர்

டாக்டர் அலெக்ஸாண்டர் ஹாரீஸ் என்பவர் The development of civilization and Religion in India என்ற நூலில் எடுத்துக் கூறியிருப்பதாவது :-

The Rajputs maintained their unchallenged supremacy over northern India from the death of Harsha to the first Turk invasion. That is why, the period between 647 to 1200 AD is known as the Rajput period . The Rajaputs were the descendants of sakas, Hunas and Kushans who came to India and settled here. Later they entirely mixed themselves in the Indian society and almost lost their individuality.

In Northern India after the regin of Harsha, that is in the 7th C.A.D the reign of 'Huns' started spreading and they are refrred to as demonic hordes by the historians. Huns were the cruel rulers who tyrannically suppressed and oppressed the Dravidians in northern India from 7th C.A.D. to 12th C.A.D. During this period the 1. persians 2. Greeks 3. Sakas 4. Romans 5. Kushans and the 6. Huns who came to India in different periods with out any religion were united as Aryans (sanskrit word for noble) and were ruling. During this time the Aryan laws like manudharma Sasthra, which elevate the Aryans ( Foreiners) and degrade the Dravidians (Indians) were devised.

அதிகாரம் 25

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 3)

## இனவெறி ஆரம்பம்

ஆரியர்கள் தாங்கள் பிடித்து கொண்ட ஆரிய வர்த்தத்தில் தங்களுக்கென்று ஒரு வாழ்க்கை முறையை ஏற்படுத்தி கொண்டார்கள். அது நிறம் அல்லது வருணத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டது. அதவாது, வந்தேறிய வெள்ளை நிறத்தார் ஆகிய அன்னியர்கள் உயர்ந்தவர்கள் (ஆரியர்கள்) என்றும் மண்ணின் மைந்தர்களாகிய கருமை நிறமுடைய திராவிடர்கள் (இந்தியர்கள்) தாழ்ந்தவர்கள் என்றும் ஓர் நிலை ஏற்படுத்தப்பட்டது. ஆரிய வர்த்தத்தில் திராவிடர்களுக்கு எந்த உரிமையும் கொடுக்கப்படாமல் அன்னியரான ஆரியர்களே இராஜ்யத்தின் முழு உரிமைகளையும் பங்கு போட்டு எடுத்துக் கொண்டார்கள். இது நிறத்தின் அடிப்படையில் உண்டாக்கப்பட்ட பொல்லாத ஜாதிக் கொள்கை ஆகும். இது ஜாதி வேற்றுமைக்கும் இனவெறிக்கும் காரணமாக அமைந்தது.

### முதலிடத்தில் பிராமணர்கள்

ஆரிய வர்த்தத்தில் புரோகிதத்துவம் பலி வழிபாடு ஆகிய கருமாதிகள் செய்யும் பொறுப்பு ஒரு கூட்டத்தாருக்கு அளிக்கப் பட்டது. அவர்கள் பிராமணர்கள் என்று பின்னால் அழைக்கப்பட்

டார்கள். அவர்களுக்கு அனேக சலுகைகள் கொடுக்கப்பட்டது. அவர்கள் அரசர்களுக்கு ஆலோசகர்களாகவும் வைக்கப்பட்டார்கள்.

### பிராமணர் என்ற பெயர்

பொது நிலையில் சிவனை வழிபடுவோர் சைவர் என்றும் விஷ்ணுவை வழிபடுவோர் வைணவர் என்றும் கிறிஸ்துவை வழிபடுவோர் கிறிஸ்தவர் என்றும் அழைக்கப்படுவார்கள். இவ்வடிப் படையில் பிரம்மனை வழிபடுவோர் பிராமணர் என்று அழைக்கப்பட வேண்டும். ஆனால் பிரம்மனை வணங்குவோர் எல்லாரும் பிராமணர் என்று இன்று அழைக்கப்படுவதில்லை. ஏனென்றால் பிராமணர் என்பது ஒரு சாதிப்பெயர் ஆக்கப்பட்டுவிட்டது.

### சாதிப் பெயராக்கப்பட்டது எப்படி ?

ஆதி சங்கரர் என்பவரின் 'அஹம்பிரம்மாஸ்மி' என்ற அத்வைதக் கொள்கை இதற்காக பயன்படுத்தப்பட்டது. திராவிடர்களுடைய சிவன், விஷ்ணு, பிரம்மா எனும் மும்மூர்த்தி கோட்பாட்டில் வரும் பிரம்மனுக்கு ஒரு திருப்பம் கொடுக்கப்பட்டது. அதாவது 'அஹம் பிரம்மாஸ்மி' என்பதற்கு நானே கடவுள் என்று விளக்கம் அளிக்கப் பட்டது.

பிரம்மத்தை உடையவர்கள் பிராமணர்கள். என்றாலும் பிராமணர் மட்டுமே (அகம் பிரம்மாஸ்மி) நானே கடவுள் என்ற நிலையில் இருக்க முடியும் என்றும், மற்றவர்கள் தங்களை அவ்வாறு கூற முடியாது என்றும் பின்னால் விளக்கம் கொடுக்கப்பட்டது. இதிலிருந்து பிராமணர் என்பது ஒரு சாதி பெயராக உருவாக்கப்பட்டது. அவ்வாறு பிராமணர் உயர் சாதியினராக அமர்ந்து கொண்டார்கள்.

### இரண்டாவது இடத்தில் சத்திரியர்கள்

ஆட்சி அமைத்து ஆளுகை செய்யும் பொறுப்பு அன்னியர்களான இரண்டாவது பிரிவினருக்கு அளிக்கப்பட்டது. அவர்கள் சத்திரியர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

## மூன்றாவது இடத்தில் வைசியர்கள்

வணிகம் செய்வதும் மற்றும் தொழில்கள் நடத்தும் பொறுப்பும் அன்னியர்களான மூன்றாவது பிரிவினருக்கு அளிக்கப்பட்டது. அவர்கள் வைசியர்கள் என அழைக்கப்பட்டார்கள்.

## அடிமைப்பட ஒப்புக்கொண்ட திராவிடர்கள் சூத்திரர்

மேற்கூறிய மூன்று பொறுப்புகளையும் அன்னியர்களான ஆரியர்களே வைத்துக் கொண்டார்கள். திராவிடர்கள் தங்கள்நாட்டில் தங்களுக்கு பொறுப்புகள்கொடுக்கப்படாததால் கலக்கமடைந்தார்கள். இந்நிலையில்ஆரியர்கள் திராவிடர்களை தங்களுக்கு அடிமை வேலை செய்ய வற்புறுத்தினார்கள். வேறு வழியின்றி திராவிடர்களில் ஒரு பிரிவினர் ஆரியர்களுக்கு அடிமைகளாக இருக்க ஒப்புக் கொண்டார்கள். அவ்வாறு அடிமைகளாக்கப்பட ஒப்புக் கொண்ட திராவிடர்களை ஆரியர்கள் தங்களோடு சேர்த்துக் கொண்டு அவர்களை சூத்திரர் என்று அழைத்தார்கள்.

## நான்கு ஜாதிகள்

இவ்வாறு 1.பிராமணன், 2. சத்திரியன், 3. வைசியன் (இவர்கள் 3 கூட்டத்தாரும் அன்னியர்கள்), 4. சூத்திரன் (இவர்கள் திராவிட இனத்திலிருந்து பிரிக்கப்பட்ட ஒரு பகுதியினர்) என்ற நான்கு ஜாதிகள் உருவாக்கப் பட்டது. இதுவே சதுர்வர்ண்ணம் என்பது. இவர்கள் சவருணர்கள் (ஜாதியுடையவர்கள்) என்றும் அழைக்கப்பட்டார்கள்.

## கீழடங்க மறுத்தோர்

ஆரியர்கள் ஏற்படுத்திய மேற்கூறியவாழ்க்கைமுறையை ஒரு கூட்டம் திராவிடர்கள்எதிர்த்தார்கள். எதிர்த்தவர்கள் அரச பரம்பரையை சேர்ந்தவர்களும்,சிறந்த எழுத்தாளர்களும், பண்டிதர்களும்,தத்துவ மேதைகளும், சித்தர்கள், முனிவர்கள், புரோகிதர்கள் போன்றவர்களும் ஆகும். எதிர்த்த திராவிடர்களை ஆரியர்கள் மிககொடுமையாய் நடத்தினார்கள். அவர்களைபஞ்சமர்கள், ஜாதி இல்லாதோர் (அவர்ணர்

கள்) தீண்டத்தகாதவர்கள், அதமர்கள், தஸ்யூக்கள் எதிரிகள் சண்டாளர்கள் என்றெல்லாம் அழைத்து துரத்தினார்கள். துரத்தப்பட்ட திராவிடர்கள் பலர் காடுகளுக்கு ஓடிச்சென்றார்கள். சிலர் வேறு வழியின்றி அங்கேயே வசிக்கலாயினர்.அப்படிப்பட்டவர்கள் மிகமிலேச்சமான வேலைகள் செய்ய வற்புறுத்தப்பட்டார்கள்.

இவ்வாறு அன்னியர்களான ஆரியர்களின் ஜாதிக் கொள்கை ஆரிய வர்த்தத்தில் திணிக்கப்பட்டு திராவிட மக்கள் சூத்திரர்கள் என்றும் பஞ்சமர் என்றும் இரு ஜாதிகளாக பிரிக்கப்பட்டு இழிவுபடுத்தப் பட்டார்கள். இதுவே இந்நாட்களில் 'இந்துத்துவா' என்று கூறப்படும் வாழ்க்கை முறையின் ஆரம்பம்.

அதிகாரம் 26

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 4)

## சட்டமாக்கப்பட்ட ஜாதிக்கொள்கை

ஆரியவர்த்தத்தில் ஏற்படுத்தப்பட்ட வாழ்க்கை முறை என்ற ஜாதிக் கொள்கை ஆரியவர்த்தத்தின் அரசியல்சாசனமாக்கப்பட்டது. அவ்வாறு எழுதப்பட்ட நூல் மனுநூல் என்று அழைக்கப்பட்டது. அது வருணத்தை அடிப்படையாக கொண்டது. மனுச்சட்டம் மனித நேயத்திற்கும் மனித நீதிக்கும் மாறுபட்டதாகும். அது திராவிடர்களை இழிவுபடுத்தி அடிமைபடுத்துவதற்காக அன்னியர்களான ஆரியர்களால் உருவாக்கப் பட்ட சட்டம் ஆகும்.

### மனுச்சட்டம் கூறுவதென்ன ?

மனுச்சட்டப்படி மனிதனுக்கு சமத்துவம் கூடாது. சிறுமீன் பெரிய மீனுக்கு இரையாக வேண்டும் என்பது இயற்கையின் சட்டம். அது போல பெலவீனன் பெலவானுக்கு அடிமை ஆக வேண்டும். ஆரியன் பிறப்பால் உயர்ந்தவன், திராவிடன் பிறப்பால் தாழ்ந்தவன். திராவிடன் பிறப்பால் ஆரியனுக்கு அடிமை ஆக வேண்டும். இந்த மனுதர்ம்மப்படி கீழ்சாதியைச் சார்ந்த ஒருவன் மேல்சாதியைச் சார்ந்த ஒருவனை தன் உடலின் ஏதாவது ஒரு பகுதியால் தாக்கினால் அந்தப் பகுதியே வெட்டப்பட வேண்டும். அவன் தன் கையையோ கம்பையோ உயர்சாதிக்காரனுக்கு முன்பாக உயர்த்தினால் அவனுடைய கை வெட்

டப்பட வேண்டும். கோபத்தில் அவன் தன் காலடியால் தாக்கினால் அவன் காலடி வெட்டப்பட வேண்டும்.

மேல்சாதிகாரன் ஒருவன் உட்காரும் இடத்தில் கீழ்சாதிக்காரன் ஒருவன் உட்கார முயன்றால் அவன் இடுப்பில் சூடுபோட்டு அப்புறப்படுத்த வேண்டும். அல்லது அவன் உட்காரும் பிட்டத்தையே வெட்டி விட வேண்டும். அவன் மேல்சாதிக்காரன் மேல் இறுமாப் பாய் துப்பினால் அவனுடைய உதடுகள் இரண்டும் வெட்டப்பட வேண்டும். மேல்சாதிக்காரன் மீது சிறுநீர் கழித்தால் அவனுடைய ஆணுறுப்பு வெட்டப்பட வேண்டும். மேல் சாதிக்காரன் முடி, காலடி, தாடி, கழுத்து முதலிய ஏதாவதொன்றைப் பிடித்து இழுத்தால் அவன் கையைத் தயக்கமின்றி வெட்டிவிட வேண்டும்.

ஆரிய வர்த்தத்தில் திராவிட மக்கள் இப்படிப்பட்ட கொடூரமான மனுச்சட்டத்தின் கீழ் அடிமைப்படுத்தப்பட்டார்கள்.

*(கூடுதல் விவரங்களுக்கு திராவிட சமயம் பத்திரிகை படிக்கவும்)*

## சங்கரர் பெலப்படுத்திய ஜாதிக் கொள்கை

9-ம் நூற்றாண்டில் ஆதி சங்கரன் என்பவர் அத்வைதக் கொள் கையை பரப்பினார். அது 'அகம் பிரம்மாஸ்மி' என்று கூறும் கொள்கை ஆகும். எல்லாமே கடவுள், எல்லாமே ஒன்று தான், இரண்டல்ல. ஒவ்வொரு மனிதனும் பிரம்மம், என்பது அந்தக் கொள்கை. அதவாது, கடவுளின் அம்சம். ஆனால் அதிலும் ஆதி சங்கரர் ஒரு விளக்கம் கொடுத்து திருப்பிவிட்டார். எல்லாருமே பிரம்மம் என்றாலும் அவர்களில் பிராமணர்கள் மட்டுமே பிரம்ம நிலையில் உயர்த்தப்பட்ட வர்கள் என்று கூறினார். இந்த கொள்கையினால் பிராமணர்கள் கடவுள் நிலைக்கு உயர்த்தப்பட்டார்கள். ஆரிய புரோகிதர்கள் பிராமணர்கள் என்ற ஜாதியினராக அமைக்கப்பட்டார்கள்.

பிற்காலங்களில்ஆரியர்கள் திராவிடர்களின் தெய்வங்களையும் பறித்துக் கொண்டார்கள். பிரம்மா திராவிடர்களின் மும்மூர்த்திகளில் ஒருவர். ஆரியர்கள் திரவிட கடவுளாகிய பிரம்மாவை எடுத்துக் கொண்டு அகம் பிரம்மாஸ்மி என்றதத்துவத்தை உருவாக்கி அவர்களையே கடவுளாக்கி கொண்டார்கள்.

## நிரந்தரமாக்கப்பட்ட ஜாதிக்கொள்கை

வருணாசிரமம் என்ற ஜாதிக் கொள்கைகையை சங்கரர் உறுதி படுத்தினார். ஆரியர்கள் திராவிடர்களை அடிமைபடுத்தி நிரந்தரமாக ஆட்சி செய்யும்படியாக இந்தியாவில் ஐந்து இடங்களில் சங்கர மடங்களை அமைத்து கொண்டார்கள். அவையாவன 1. U.P யில் ஜோசி மடம் 2. குஜராத்தில் துவாரகை மடம் 3. ஒரிசாவில் பூரி மடம் 4. கன்னடத்தில் சிறிங்கேரி மடம் 5. தமிழ் நாட்டில் காஞ்சி சங்கர மடம் (தமிழ்நாட்டில் சங்கர மடம் பிற்காலங்களில் அமைக்கப் பட்டது).

## ரிக் வேதத்தில் ஜாதிக் கொள்கை

ஆரியர்களுடைய வாழ்க்கை முறையாக கருதப்படும் ஜாதிக் கொள்கை ரிக் வேதக் காலத்தில் இருந்ததில்லை என்று கூறப்படுகிறது. சதுர் வர்ணம்அதாவது நான்கு வர்ணங்களை பற்றி பின்னால் சேர்க்கப் பட்டதாக கருதப்படும் ரிக்வேதம் 10-ம் காண்டம் புருஷ சூக்த்தத்தில் கீழ்கண்டவாறு கூறப்படுகிறது :-

*பிராமணோஸ்யா சுக மாஸீத்*
*பாகியூ ராஜன்ய : க்றித:*
*ஊறு ததஸ்யா யத் வைசிய:*
*பத் ப்பியாம்சூத்ரோஅஜாயதா*

அதாவது, அவருடைய (பிரம்மாவின்) முகத்திலிருந்து பிராமண னும் தோளிலிருந்துசத்திரியனும் தொடையிலிருந்து வைசியனும் கால்களிலிருந்து சூத்திரனும் வந்தார்கள். இதுவும் ஓர் தவறான விளக்க மாகும். இதன் அடிப்படையில் மனுநூல் ஒரு தர்மம் ஆக்கப்பட்டு மனுதர்ம்ம சாஸ்திரம் என்றும், வருணாசிரம தர்மம் என்றும் அழைக்கப் பட்டது.ஆனால் உண்மையில் இது தர்மத்துக்கு மாறானதாகும். மதத்துக்கு இங்கு இடமே இல்லை என்று காணமுடிகிறது.

## பிறவிச் சுழற்சி திணிக்கப்பட்ட ஜாதிக் கொள்கை

பிறவிச் சுழற்சிக் கொள்கை (Cycle of Birth) அன்னியரான

ஆரியரின் கொள்கையுமல்ல, வேதங்களில் கூறப் பட்ட ஒன்றும் அல்ல. அது திராவிட மக்களின் சமண பௌத்த மதங்களின் கொள்கை ஆகும். ஆனால்பிராமணர்கள் தங்கள்அந்தஸ்தையும், முதன்மை ஸ்தானத்தையும் ஒருபோதும் இழந்துவிடாமல் இருக்கவும் திராவிடர் களை நிரந்தரமாக அடிமைபடுத்தி வைத்துக் கொள்ளவும் பிறவிச் சுழற்சி கொள்கைக்கு தவறான விளக்கம் கொடுத்து தங்கள் ஜாதிக் கொள்கையை நிலைநாட்ட பயன்படுத்தினார்கள்.

## தவறான விளக்கம்

பிராமணர்கள் பிறவிச் சுழற்ச்சி கொள்கைக்கு தவறான விளக்கம் கொடுத்தார்கள். அதாவது, முன் ஜன்மத்தில் சல்கர்மங்கள் (நற்கிரியைகள்) செய்தபடியால் பிராமணர்கள் இந்த ஜன்மத்தில் உயர்ந்த ஜாதியினராக பிறந்திருக்கிறார்கள். சண்டாளர்கள் முன் ஜன்மத்தில் துர்கிரியைகள் செய்தபடியால்இந்த ஜன்மத்தில் கீழ் சாதியினராய் பிறந்திருக்கிறார்கள்.இந்த சண்டாளர்கள் இந்த ஜன்மத்தில் தர்மத்தை காத்துவந்தால், அதாவது வருணாசிரம தர்மத்தை காத்து அதின்படி பிராமணர்களை முதன்மைஸ்தானத்தில் வைத்து நடந்தால் அடுத்த ஜன்மத்தில் உயர்நத ஜாதியாய் பிறக்கலாம் என கற்பித்தார்கள்.

## போராடாதே

எனவே, இதற்காக பொறாமைப்படுவதோ, போராடுவதோ கூடாது. அது அதர்மம். இந்த ஜன்மத்தில் தீண்டத்தகாத கீழ்ச் சாதியாய் பிறந்தவனை மனுதர்மப்படி கடினமாய் நடந்துவதை குறித்து எவ்வித தயவோ, பரிதபிப்போ இருத்தலும் கூடாது. அப்படி செய்வது அதர்மம் என்றும் போதித்தார்கள். இந்த கொள்கையை பாமர மக்கள் தொடங்கி பண்டிதர்கள் மட்டும் கோடிகோடியான மக்கள் இந்நாட்களிலும் கூட ஏற்றுக் கொண்டு நம்பி நடக்கிறார்கள். உயிரினங்களுக்கு பலபிறவிகள் உண்டென்றும் தாங்கள் செய்யும் நல்ல கர்மங்களால் அடுத்த ஜென்மத்தில் நல்ல பிறவி அடையலாம் என்றும் நம்புகிறார்கள். இது மதமற்ற ஜாதிக்கொள்கையினருக்கு (இந்துத்வ வாதிகளுக்கு) நல்ல வாய்ப்புகள் அளிக்கிறது.

**அதிகாரம் 27**

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

*(தொடர் - 5)*

# திராவிடர்களை சீர்குலைத்த ஜாதிக்கொள்கை

கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து ஆரிய வர்த்தத்தில் தங்கள் ஆட்சியை ஸ்தாபித்து திராவிட மக்களை அடிமைப்படுத்திய ஆரியர்கள் இந்தியாவின் மற்று இடங்களிலும் தங்கள் ஆதிக்கத்தை ஸ்தாபித்து திராவிட மக்களை அடிமைப்படுத்தலாயினர். திராவிட மக்கள் மேலும் சீர்குலைக்கப்பட்டார்கள். அவர்கள் தங்கள் ஆதி மேன்மைகள் எல்லாம் பறிக்கப்பட்டு இழிவுபடுத்தப்பட்டார்கள்.

## புலால் உண்ணாத திராவிட பூசாரிகள்

முற்காலத்தில் திராவிட மக்கள் பழந்திராவிட வழிபாட்டை கடைபிடித்து வந்தார்கள். அவர்கள் ஆடு, மாடு போன்ற மிருகங்களை பலி செலுத்தி அவற்றின் மாம்சத்தை புசித்து வந்தார்கள். ஆனால் கி.பி. முதலாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த தோமாவின் உபதேசத்தை ஏற்றுக் கொண்ட திராவிடர்கள் பின் நாட்களில் தங்களுக்கு சைவ, வைணவ மதங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். அதுமட்டுமல்லாமல் கடவுள் இந்த உலகத்தில் அவதரித்து மனிதனின்

பாவத்துக்காக தம்மையே பலி செலுத்தியபடியால் இனிமேல் கடவுளுக்கு பலிசெலுத்த வேண்டியதில்லை என்ற பலிநிறைவேற்று கொள்கையையும் ஏற்றுக் கொண்டார்கள். எனவே எருசலேம் தேவாலயத்தின் மாதிரியில் கட்டப்பட்ட சைவ வைணவ கோயில்களில் பலிபீடங்கள் இருந்தாலும் அங்கு பலி செலுத்தப்படுவதில்லை. மிருகங்களை பலி செலுத்தாத காரணத்தால் திராவிட புரோகிதர்கள் புலால் உண்ணுவதை நிறுத்தி விட்டார்கள். சைவ உணவுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

## புலால் உண்ணும் பிராமணர்கள்

வந்தேறிய அன்னியர்களான ஆரியர்களுக்கு மதம் கிடையாது. பிராமணர்கள் தீயை வழிபடுகிறவர்கள். வழிபாடு மதம் அல்ல, அது ஒரு தொழுகை மட்டுமே. அவர்களுக்கு கோயில் கிடையாது. அவர்கள் பிறித்துவி, வருணன், அக்கினி, சூரியன், வாயு போன்ற ஐம்பெரும் பூதங்களையும் தியசு, அததி, மருத்துக்கள் ஆகியவற்றையும் இந்திரன், மித்திரன் போன்ற பிற தேவர்களையும் வழிபட்டவர்கள். அவர்கள் குதிரை, ஆடு, மாடு, பசு, எருமை போன்ற மிருகங்களை தீயில் சுட்டு யாகம் செய்து அவற்றின் மாம்சத்தை சோமம், சுரா ஆகிய மதுபானங்களோடு சேர்த்து புசித்து வந்தார்கள்.

## திராவிட கோயில்கள் பறிப்பு

திராவிட மக்களின் உரிமைகளையும், உடைமைகளையும் பறித்துக் கொண்ட ஆரியர்கள் மதத்தின் அடிப்படையிலும் திராவிடர்களை கீழ்ப்படுத்த திட்டமிட்டார்கள். எனவே அவர்கள் திராவிடர்களால் கட்டப்பட்ட சைவ, வைணவ கோயில்களையும் பறித்துக் கொண் டார்கள். திராவிடர்கள் தீண்டத்தகாத கீழ்சாதியினர் என்றும் எனவே அவர்கள் அவர்களுடைய கோயில்களுக்குள் நுழைய அருகதை அற்ற வர்கள் என்றும் கூறி திராவிடர்களை கோவில்களில் நுழையக்கூடாத படி தடை செய்தார்கள். திராவிடர்களுக்கு தாங்கள் கட்டின கோயிலில் சென்று வழிபடுவதற்குக் கூட முடியாமலாயிற்று.

## திராவிட பூசாரிகள் துரத்தல்

திராவிடர்களின் கோயில்களில் திராவிட புரோகிதர்கள் பக்தி பரவசம் நிறைந்தவர்களாய் கடவுளின் அருள்வார்த்தைகளை பக்தர்களுக்கு பகிர்ந்து பறைசாற்றுகிறவர்களாய் இருந்தார்கள். எனவே இந்த திராவிட புரோகிதர்கள் 'பறயர்கள்' என்று பெரும் மதிப்போடு அழைக்கப்பட்டார்கள். இந்த புரோகிதத்துவம் மிக கனத்துக்குரிய வேலையாய் இருந்தது. பிராமணர்கள் திராவிட புரோகிதர்களை விரட்டி அவர்களை தங்கள் ஜாதிக் கொள்கையால் தீண்டத்தகாதவர்கள் என்று முத்திரை குத்தி கோயில்களிலிருந்தே துரத்தி விட்டார்கள். அனேக புரோகிதர்களை கொலையும் செய்தார்கள். "பாப்பனுக்கு மூத்த பறயன் கேள்ப்பாரில்லாமல் கீழ் சாதியானான்" என்ற பழமொழி இதை குறிப்பதாகும்.

## பிராமணர் சைவ உணவுக்கு மாற்றம்

மதம் இல்லாத ஆரியர்கள் திராவிடர்களின் கோயில்களை பிடித்துக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் வேள்வி செய்து குதிரை, எருமை, ஆடு, மாடு, பசு போன்றவற்றை தின்பவர்கள். திராவிடர்களின் சைவ, வைணவ கோயில்களில் பலி செலுத்தலும் கிடையாது, புலால் உண்ணுவதும் கிடையாது. ஆனால் புலால் உண்ணாத திராவிட புரோகிதர்களின் ஸ்தானத்தில் பிராமணர்களே பிரவேசித்து தங்களை புரோகிதர்கள் ஆக்கிக் கொண்டார்கள். இதற்காக அவர்கள் புலால் உண்ணுவதை நிறுத்தி விட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. திராவிடர்களை மேற்கொள்ள வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக பிராமணர்கள் சைவ உணவுக்கு மாறிவிட்டார்கள்.

## திராவிட தெய்வங்களை பறித்துக் கொள்ளுதல்

### சிவன்

திராவிடர்களை மதத்தின் அடிப்படையில் கீழ்ப்படுத்துவதற்காக மதமே இல்லாத ஆரியர்கள் திராவிடர்களுடைய தெய்வங்களையும் கூட எடுத்துக்கொண்டார்கள். ஆரம்பத்தில் திராவிடர்களின்

முக்கியகடவுளான சிவனை சூத்திர கடவுள் என இகழ்ந்த ஆரியர்கள் பிற்காலத்தில் சிவனை தங்கள் கடவுளாக்கி கொண்டார்கள். வேதங்களில் சிவன் என்ற கடவுளையே பார்க்க முடியாது. அங்கே காணப்படும் ருத்திரன் என்ற ஒரு கலகக்காரனான கடவுளை திராவிடர்களின் அன்பே உருவான சிவனோடு ஒன்றிணைத்து பின்நாட்களில் ருத்திர சிவன் என்றழைக்கத் தொடங்கினார்கள்.

## விஷ்ணு

அவ்வாறு வேதங்களில் விஷ்ணு என்ற கடவுள் கிடையாது. அங்கே விஷ்ணு என்று குறிப்பிட்டிருப்பது, சூரியனையே தவிர கடவுளை குறிப்பது அல்ல. திராவிடர்களுடைய கடவுளான விஷ்ணு என்பது விண்ணிலிருந்து அவதரித்தவர் என்பதையே குறிக்கும். பிற்காலங்களில் ஆரியர்கள் விஷ்ணுவையும் எடுத்துக் கொண்டார்கள்.

## பிரம்மா

தவிரவும் திராவிடர்களின் பிரம்மனை ஆரியர்கள் எடுத்துக் கொண்டு பிரம்மாவின் வாயிலிருந்து தோன்றியவர்களே பிராமணர்கள் என்று கூறி திராவிடர்களுடைய கடவுளான பிரம்மாவின் ஸ்தானத்தில் பிராமணர்கள் கடவுள்களாக அமர்ந்து விட்டார்கள். ஆரியர்களின் மேற்கண்ட செயல்கள்எல்லாம் திராவிடர்களின் சைவ வைணவ மதங்களை சீர்குலைத்தது. மட்டுமல்லஜாதி கொள்கையின் அடிப்படையில் சைவ வைணவ மதங்களும் வேத வேதாந்தங்களும் பிராமணருக்கு அடிமை பட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதாவது சைவ வைணவ மதங்கள் ஆரியர்களின் மதங்கள் என்று எல்லோரும் கருதுவதற்கேற்றவிதமாய் எல்லாவற்றையும் மாற்றி அமைத்துக் கொண்டார்கள்.

## சித்தர்களை அழித்தல்

தோமாவின் கிறிஸ்தவ நெறிகளை ஏற்றுக் கொண்டதிராவிடர்கள் பக்தி பாடல்களை இயற்றினார்கள். பக்தி வாழ்க்கையில் ஈடுபட்டார்கள். அவர்கள் எல்லா துறைகளிலும் ஞானவும் அறிவும் மிகுந்தவர்களாய்

இருந்தார்கள். தேவ பக்தியும் மனித நேயமும் மிகுந்த அவர்கள் பிராமணர்களின் ஜாதிக்கொள்கையை கடுமையாய் எதிர்த்தார்கள். பிராமணர்கள்அவர்களை அரசர்களின் உதவியோடு அழிக்கத் தொடங்கினார்கள்.

## குகையிடிக்கலகம்

ஆரியர்களின் ஜாதிக் கொள்கைகளையும்மதப்பேதமைகளையும் எதிர்த்த சித்தர்கள் பெருமளவில் கொடுமைபடுத்தப்பட்டார் கள்.இவ்வாறு கொடுமைப்படுத்தப்பட்ட சித்தர்கள் காடுகளுக்கு ஒடிச் சென்று குகைகளில் வசித்தார்கள்.அவர்களை ஆரிய பிராமணர் களின் தூண்டுதலினால் அரசர்கள் வெகுவாய் துன்புறுத்தினார்கள்.

3-ஆம் குலோத்துங்க சோழனின் நாட்களில் குகைகளில் வசித் திருந்த சித்தர்கள் அனேகர் கொல்லப்பட்டார்கள். இது குகையிடிக் கலகம் என்று அழைக்கப்படுகிறது.

## வேதங்களை தடைசெய்தல்

வேதங்கள், இதிகாசங்கள் வேதாந்தம் ஆகிய எல்லாவற்றையும் எழுதியவர்கள் திராவிடர்களே. அவைகள் சமிஸ்கிருத மொழியில் எழுதப்பட்டது. சமிஸ்கிருத மொழியும் திராவிடர்களால் உண்டாக்கப் பட்டது. ஆரியர்கள் திராவிடரின் சமிஸ்கிருத மொழியை எடுத்துக் கொண்டு அதை தேவமொழி என்றார்கள். ஆனால் அதோடு திராவிடர் கள் கீழ்சாதியினரென்றும் கீழ்ச்சாதியினரான திராவிடர்கள் வேதங்களை படிக்கக் கூடாதென்றும் தடை செய்தார்கள். சமிஸ்கிருதத்தில் எழுதப்பட்ட வேதங்களை திராவிடர் கேட்பதற்கு தடை விதித்தார்கள். மறுப்போரின் காதுகளில் ஈயம் உருக்கி விடப்பட்டது.

## தமிழை அழித்தல்

தமிழை நீச பாஷை என்று இகழ்ந்து அதை அழிப்பதற்கு ஆவன செய்தார்கள். தமிழ் இலக்கியங்கள் பல அழிக்கப்பட்டன. உயர்ந்த கருத்துக்கள் அடங்கிய தமிழ் இலக்கியங்கள் வெளிக்கொண்டு வரப் படாமல் மறைக்கப்பட்டன.

### இலக்கியங்களுக்கு தவறான உரைகள்

திராவிடர்களின் தமிழ் சமிஸ்கிருதம் ஆகிய இலக்கியங்களுக்கு ஆரியர்கள் தவறான உரைகள் எழுதி திராவிடர்களின் அரிய கருத்துக் களை திசை திருப்பினார்கள். மட்டுமின்றிதவறான கருத்துக்களை இலக்கியங்களில் உட்ச்சொருகவும் செய்தார்கள்.

இதனால்திராவிடர்கள் உண்மைக்கு மாறாக திணிக்கப்பட்ட கருத்துக்களையே படிக்க நேர்ந்தது.

## முஸ்லீம் ஆட்சியில் நீடித்த ஜாதிக்கொள்கை

AD 705-ல் அரபு படைகள் இந்தியாவில் புகுந்தது. துருக்கிகளும் இந்தியாவை ஆக்கிரமித்தார்கள். AD1400-ல் டைமூர் படையெடுத்து வந்தான். 1526 முதல் பாபர் தன் ஆட்சியை ஸ்தாபித்தான். 1757-ல் ஆங்கிலேயர் தங்கள் ஆதிக்கத்தை ஸ்தாபிக்கும் வரை மொகலாய ஆட்சி நீடித்தது. இந்நாட்களிலெல் லாம் பிராமணர்கள் தங்கள் உயர்நிலையை இழந்து விடவில்லை. ஆட்சிலிருந்தவர்களுக்கு அவர்கள் தங்களை ஆலோசகர்களாக ஆக்கிக் கொண்டார்கள்.

### தொடர்ந்து நீடித்த பிராமணீயம்

இவ்வாறு கி.பி 7-ம் நூற்றாண்டில் ஆரியர்களால் ஆரம்பிக்கப்பட்ட பிராமணீயம் என்றஜாதிக்கொள்கை கி.பி 14-ம் நூற்றாண்டுக்குப் பின்னும் திராவிட மக்களின் எல்லா மேன்மைகளையும் பறித்துக் கொண்டு திராவிட மக்களை மேன்மேலும் இழிவுப்படுத்தி ஒடுக்கிக் கொண்டே இருந்தது.

## பிரிவு : IX

# கி.பி 15-19 நூற்றாண்டுகள்

இந்தக் காலங்களில் ஐரோப்பிய கிறிஸ்தவத்தில் மறுமலர்ச்சி ஏற்பட்டு கிறிஸ்தவம் உலக தேசங்களில் கொண்டு செல்லப்படுகிறது.

இந்தியாவில் அன்று காணப்பட்ட 'இந்து' மற்றும் 'இஸ்லாமிய' மதக் கலவையால் சீக்கிய மதம் தோன்றியது.

மேலும் இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சி ஏற்பட்டு அவ்வாட்சியிலும் ஆரியர்களின் ஜாதிக் கொள்கை வளர்ச்சியடைந்தது.

மனுச்சட்டம் என்ற ஜாதிக் கொள்கை இந்திய சட்டமாக திணிக்கப்படுகிறது.

ஆரியர்களின் ஜாதிக்கொள்கைக்கு 'இந்துத்துவா' என்ற புதுப்பெயர் கொடுக்கப்படுகிறது.

திராவிடர்களின் சைவ வைணவ மதங்கள் இந்து மதம் என்ற போலிப் போர்வைக்குள்ளாக்கப்பட்டு ஆரியர்களின் இந்துத்துவாவுக்கு அடிமைப்படுத்தப் படுகிறது.

அதிகாரம் 28

# கிறிஸ்து மார்க்கம்

(தொடர் - 13)

## ஐரோப்பிய கிறிஸ்தவத்தில் மறுமலர்ச்சி

பலவித காரணங்களால் கறைபட்டுப் போன கிறிஸ்தவத்தை மறுபடியும் அதன் முன் நிலையில் கொண்டு வருவதற்கான முயற்சிகள் நடைபெற்றன. இந்நிலையில் சில மறுமலர்ச்சி வீரர்கள் எழும்பினார்கள்.

**மார்ட்டின் லூத்தர்** (1483 - 1546 A.D)

மார்டின் லூத்தர் தன் 33-ம் வயதில் பாவ மன்னிப்புச் சீட்டு விற்பனையை எதிர்த்தார். தன் 95 கேள்விகளை ஜெர்மனியிலுள்ள விற்றன் பர்க் சபைக் கதவுகளில் ஒட்டினார். லூத்தரின் கொள்கை ஜெர்மனி முழுவதும் பரவியது. போப் லியோ X லூத்தரை சபையை விட்டு தள்ளினார். இவரை பின்பற்றியவர்கள் லூத்தரன் சபையை ஸ்தாபித்தார்கள்.

**ஜாண் கேல்வின்** (1509 - 1564 AD)

இவர் ப்ரான்ஸ் (France) நாட்டை சேர்ந்தவர். இவரை சார்ந்தவர்கள் சீர்திருத்த சபைகள் ஸ்தாபித்தார்கள்.

**ஆங்கிலேய சீர்திருத்தம்** (1509 - 1547A.D)

இது ஹென்றி VIII ன் நாட்களில் நடந்தது. இங்கிலாந்து நாட்டின் அரசனான ஹென்றி காதறீனை விவாகரத்து செய்தார். போப் க்லெமென்ட் அவரை சபையை விட்டு நீக்கம் செய்தார். AD 1534-ல் British பார்லமென்றில் (Act of Supermacy) ஆக்ட் ஆப் சூப்பர்மசி என்ற சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி போப்புக்கு பதிலாக பிரிட்டிஷ் அரசன் கிறிஸ்தவ சபையின் தலைவராக்கப்பட்டார். அந்த சபைகள் ஆங்கிளிக்கன் சபைகள் (Anglican church) என்று அழைக்கப்பட்டது. இது ப்றொட்ஸான்ட் (Protestand) சபைகள் என்றும் அழைக்கப்படுகிறது.

## ஐரோப்பிய வழிக் கிறிஸ்தவம்

சீர்திருத்தமடைந்த கிறிஸ்தவ சபைகள் ஐரோப்பாவில் வளர்ச்சி யடைந்தது. அதோடு பல மிஷினரிகள் உலக தேசங்களில் கடந்து சென்றார்கள். ஐரோப்பிய வழி கிறிஸ்தவம் உலக நாடுகளில் பரவிற்று.

**பிரான்சிஸ் சேவியர் (Francis Xaviour)**

சேவியர் ஒரு கத்தோலிக்கா மிஷினறி. 1506-ல் ஸ்பெயின் நாட்டில் பிறந்தார். 1542-ல் கோவாவுக்கும் பின் தென் இந்தியாவுக்கும் 1549-ல் ஜப்பானுக்கும் மிஷனறியாகச் சென்றார். சீனாவுக்கு செல்லும் வழியில் மரித்துப் போனார்.

**வில்லியம் கேரி (william Carey)**

இவர் முதல் Protestand மிஷணறி. 1761 -ல் இங்கிலாந்தில் பிறந்தார். 1793-ல் கல்க்கட்டாவுக்கு வந்தார். ஈஸ்ட் இந்தியா கம்பனியின் எதிர்ப்புகள் மத்தியிலும் வல்லமையாய் ஊழியம் செய்தார். வேத புத்தகத்தை பல மொழிகளில் மொழி பெயர்த்தார். சிறாம்பூர் கிறிஸ்தவக் கல்லூரி போன்ற பல ஸ்தாபனங்களை ஸ்தாபித்தார். 1834-ல் தன் 73-வது வயதில் இந்தியாவில் மரித்தார்.

### டேவிட் லிவிங்ஸ்டன் (David Livingston)

இவர் 1813-ல் ஸ்காட்லாந்தில் பிறந்தார். தென் ஆப்பிரிக்காவில் மிஷணறியாகச் சென்றார். விக்டோறியா நீர் வீழ்ச்சியை கண்டு பிடித்தார். இருண்ட கண்ட மாகிய ஆப்ரிக்காவை ஒளியில் நடத்தினார். 1873-ல் சாம்பியாவில் மரித்தார். அவர் இருதயம் ஆப்பிரிக்காவிலும் உடல் இங்கிலாந்தில் வெஸ்ட் மினிஸ்டர் ஆபியிலும் அடக்கம் செய்யப்பட்டது.

### ஹட்சன் டெய்லர்

இவர் 1854-ல் சீனாவுக்கு மிஷணறியாச் சென்றார். பெருமளவில் சுவிஷேஷப்பணிகள் செய்து 1905-ல் சீனாவிலேயே மரித்தார்.

## ஐரோப்பிய வழி கிறிஸ்தவம் இந்தியாவுக்கு

மேற்காசியாவில் தோன்றிய கிறிஸ்தவம் ஐரோப்பாவில் பரவியதை குறித்தும் பின்பு அது ஐரோப்பிய வழி கிறிஸ்தவம் என்ற நிலையில் பல மாற்றங்கள் அடைந்தது என்பதைக் குறித்தும் பார்த்தோம். மட்டுமல்ல ஐரோப்பாவில் வளர்ச்சி அடைந்த ரோமன் கத்தோலிக்கா சபைகளில் ஏற்பட்ட மாற்றங்களை குறித்தும் பார்த் தோம்.

### இந்தியாவில் இன்று காணப்படும் கிறிஸ்தவம்

அனேக மிஷினெறி இயக்கங்கள் வழியாக ஐரோப்பிய வழியிலான கிறிஸ்தவம் ஐரோப்பாவிலிருந்து உலகத்தின் எல்லா தேசங்களுக்கும் கொண்டு செல்லப்பட்டது. ஐரோப்பிய வழி கிறிஸ்தவம் இந்தியாவுக் கும் கொண்டு வரப்பட்டது. இந்தியாவில் இன்று காணப்படும் கிறிஸ்தவம் ஐரோப்பிய வழி கிறிஸ்தவம் ஆகும். இந்த ஐரோப்பிய வழி கிறிஸ்தவ முறைகள் எல்லாம் முதலாம் நூற்றாண்டிலிருந்த ஆதி திருச்சபையிலிருந்து பெரிதும் வேறுபட்ட நிலையில் காணப்படுகிறது என்பதே உண்மை. இதை இந்துத்துவாவுக்கு அடிமைப்படுத்தப்பட்ட பெருவாரியான திராவிட மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

**அதிகாரம் 29**

# இந்தியாவில் சீக்கிய மதத்தின் தோற்றம்

## இரு மதங்களின் கலவை

ஒரே ஒரு கடவுள் உண்டு என்ற கொள்கையுடைய இஸ்லாமியரும் பல தெய்வ கொள்கையுடைய 'இந்துக்களும்' இந்தியாவில் வசிக்கலாயினர். பல வருடங்களுக்குப் பின் சில வகைகளில் இரண்டு மதங்களுக்கும் சில கலவைகள் ஏற்பட்டது. முகமது இறந்து நூறு ஆண்டுகளுக்குள் முஸ்லீம் படைகள் இந்தியாவுக்குள் வந்து AD 712 ல் சின்ட்-ஐ பிடித்துக் கொண்டது. மாஸ்குகள் கட்டப்பட்டது. 1022-ல் துருக்கிகள் பஞ்சாப், சிந்து ஆகிய பகுதிகளை பிடித்துக் கொண்டார்கள். 1400-ல் டைமூர் (Turco mongal) டில்லியில் படையெடுத்தான். இந்த போர்களில் அனேக இந்துக்கள் துன்புறுத்தப்பட்டார்கள். முஸ்லீம்கள் எல்லா விக்கிரக வணக்கத்தாரையும் எதிர்த்தார்கள். புத்த மதத்தவர்கள் அனேகர் நேப்பாளம் சென்றார்கள்.

## கொள்கைகளின் கலவை

இந்தியாவில் சில இடங்களில் இஸ்லாமியர் இந்து ஆசாரங்களை ஏற்றுக் கொண்டார்கள். இந்துக்களின் ஜாதிக் கொள்கை முஸ்லீம்களிலும் பிரதிபலித்தது. சில இடங்களில் கீழ் ஜாதியிலிருந்து மதம் மாறியவர்கள் முஸ்லீம் பள்ளிகளில் அனுமதிக்கப்படவில்லை. சில கிராமங்களிலுள்ள முஸ்லீம்கள் அந்த இடத்தின் தெய்வங்களை வணங்கி அக்னி வழிபாடு செய்தனர். இந்து கொள்கைகளை முஸ்லீம்

பக்தர்கள் பலர் கடைபிடித்தனர். இந்து சன்னியாசிகளைப் போல முஸ்லீம் பக்கீர்கள் வாழ்ந்தார்கள்.

### கபீர்

*15-ம் நூற்றாண்டிலிருந்து இந்து மதமும், முஸ்லீம் மதமும் சில வகைகளில் ஒன்று சேர்ப்பதற்கான முயற்சிகள் எடுக்கப்பட்டது. இப்படிப்பட்ட முயற்சிகளில் முதலில் ஈடுபட்டது 1440-ல் பிறந்த கபீர் என்பவராகும். அவர் ராமானந்தரின் சீடனாகும். ராமானந்தர் ராம பக்தனாயிருந்த போதும் உலக மதக்கொள்கை உடையவரும்* (Universal religion) *ஜாதி வேற்றுமை இல்லாதவருமாகும்.*

## இந்து முஸ்லீம் ஆலயம்

*கபீர் ஓர் முஸ்லீம். அவர் இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்கும் நடுவான கொள்கையில் நின்றார். அவருடைய சிற்றாலயம் உத்திர பிரதேசத்திலுள்ள மக்கோர்* (Maghor) *என்ற இடத்திலிருந்தது. அதில் இந்துக்களும், முஸ்லீம்களும் கலந்து கொண்டனர். கபீர் விக்கிரக ஆராதனை, ஜாதிக் கொள்கை, அவதாரக் கொள்கை விருத்த சேதனம் ஆகியவற்றை கடிந்து கொண்டார்.*

### நானக்

*கபீர் முற்றிலும் பக்தி இயக்கத்தவராகும். கடவுளைப் பற்றி பல பாடல்கள் பாடினார். இவர் கொள்கைகள் சீக்கிய மதஸ்தாபகரான* (Nanak) *நானக் என்பவரை பல முறைகளில் வசப்படுத்தியது. இவர் (1469-1538) இந்துவாக பிறந்து இஸ்லாம் மதக் கொள்கைகளில் நாட்டமுடைய வரானார். இவருக்கு கடவுள் காட்சி அளித்து ஜனங்களுக்கு போதிக்கும்படி கூறினார் என்று கூறப்படுகிறது.*

### சிக் (Sikh)

*நானக் முதலில் ஒரு மதப் பிரிவை ஏற்படுத்த விரும்பவில்லை. ஆனால் அவருடைய சீடர்கள் அவர் போதனைகளால் இழுக்கப்*

பட்டார்கள. Sikh என்ற வார்த்தைக்கு சீடர்கள் என்று பொருள். இந்துவும் இல்லை முஸ்லீமும் இல்லை என்றார். ஊக்கமான அவர் போதனை ஜனங்களை அவர் பக்கமாய் இழுத்தது.

## பொற்கோயில்

சீக்கிய ஆலயங்களில், ஒரே ஒரு கடவுள் இருக்கிறார், அவர் நாமம் சத்தியம், சிருஷ்டி கர்த்தா என்பதாகும், என்று சொல்லி ஆராதனை ஆரம்பிக்கப்படும். நான்காம் குருவின் நாட்களில் அனேக செல்வந்தர்கள் இந்த இயக்கத்தில் சேர்ந்தார்கள். அமிர்தசரசில் பொற்கோயில் 'Golden temple' கட்டப்பட்டது. சீக்கியரின் புனித நூல் ஆன (the Granth) கிரந்த், நானக், கபீர் போன்றவர்களின் பாடல் களிலிருந்து தொகுக்கப்பட்டது. இன்று ஒவ்வொரு சீக்கிய கோவில் களிலும் இது காணப்படுகிறது.

## ஆயுதங்கள்

முகலாயரின் உபத்திரவங்கள் இவர்களை ஆயுதங்கள் எடுக்க தூண்டியது. அதன் பின் அவர்கள் சகோதர போராளிகள் ஆனார்கள். அவர்களுடைய சில குறிப்பிட்ட தன்மைகள்:- முடிவெட்ட மாட்டார் கள். ஓர் இரும்பு சீப்பும் (Comb) கைவளையும் (bangle) ஒரு வாளும் அணிவார்கள்.

## சீக்கிய போராளிகள்

ஆங்கிலேயரின் ஆட்சியில் அவர்கள் உண்மையுடையவர்களாய் இருந்தார்கள். போர் வீரர்களில் அனேகர் சீக்கியராயிருந்தார்கள். இந்தியா (Partition) பாகப்பிரிவினையால் அவர்கள் மிகவும் பாதிக்கப்பட்டார்கள். அனேகர் கொல்லப்பட்டார்கள். சீக்கிய மதம் இந்து மதத்தின் ஒரு பாகமாக்கப்படும் என்று சில சீக்கிய எழுத்தாளர்கள் கூறும் போது சிலர் அதை எதிர்க்கிறார்கள். சீக்கிய மதம் தனித்ததாய் புத்துயிர் பெற வேண்டுமென்ற இயக்கமும் உண்டு.

**அதிகாரம் 30**

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை என்ற இந்துத்துவா

(தொடர் - 6)

## இந்துத்வா என்ற புதுப் பெயர்

### ஆங்கிலேயர் இந்தியாவில்

கி.பி 7 ஆம் நூற்றாண்டுக்குப் பின் ஆரியர்களின் ஜாதிக்கொள்கை என்ற பிராமணீயம் திராவிட மக்களை சீரழித்து கொண்டே இருந்தது என்று பார்த்தோம். அதோடு முகலாய ஆட்சி காலத்திலும் பிராமணர் தங்கள் பிராமணீயத்தை அரசாங்க உதவியோடு காத்துக் கொண்டார்கள். முகலாயர் ஆட்சிக்குப் பின் ஆங்கிலேயர்கள் தங்கள் ஆட்சியை ஸ்தாபித்தார்கள். ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் ஆரியர்களின் பிராமணீயக் கொள்கை அதன் உச்சநிலையை எட்டிற்று. மட்டுமல்ல அது இந்திய சட்டத்திலும் நுழைந்து "இந்துத்துவா" என்ற புதுப்பெயர் பெற்று திராவிட மக்களை மேலும் சீர் குலைக்க தொடங்கி விட்டது.

### ஆங்கிலேயர் ஆட்சியில் ஜாதிக்கொள்கை

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் வணிகத்துக்காக வந்தார்கள். அவர்கள் நாளடைவில் தங்கள் ஆதிக்கத்தை ஸ்தாபித்துக் கொண்

டார்கள். மேலும் இந்தியாவின் பல பகுதிகளை பிடித்துக் கொண்டு தேசத்தை ஆளத் தொடங்கினார்கள்.

### கல்கத்தாவில் உச்ச நீதி மன்றம்

இந்தியாவை ஆளத்தொடங்கிய ஆங்கிலேயர்கள் கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் கல்கத்தாவில் ஓர் உச்சநீதி மன்றம் அமைத்தார்கள். சர் வில்லியம் ஜோண்ஸ் என்பவர் அங்கு நீதிபதியாய் இருந்தார். இந்திய மக்களுக்கு நீதி வழங்குவதற்கான சட்டங்கள் இயற்ற வேண்டிய பொறுப்பு நீதிபதியான வில்லியம் ஜோன்சுக்கு ஏற்பட்டது. இந்திய மக்களில் இஸ்லாமிய மதத்தை சேர்ந்தவர்களுக்கு நீதி வழங்க அவர் இஸ்லாமிய சட்டத்தை பயன்படுத்தினார். அவ்வாறு கிறிஸ்தவ மதத்தை சேர்ந்தவர்களுக்கு நீதி வழங்க அவர் கிறிஸ்தவ மத சட்டத்தை (Christain law) பயன்படுத்தினார்.

### புதுச் சட்டத்தின் தேவை

முஸ்லீம்கள் கிறிஸ்தவர்கள் ஆகியோரை தவிர இந்தியாவில் வசித்து வந்த மற்று மக்களுக்கு நீதி வழங்குவதற்கு ஏற்ற முறையில் ஒரு சட்டம் இயற்ற வேண்டிய சூழல் அவருக்கு ஏற்பட்டது. இதற்கான வழி முறைகளை குறித்து வில்லியம் ஜோன்ஸ் ஆராயத் தொடங்கினார்.

### மனுச் சட்டம் கொடுக்கப்பட்டது

இந்திய மக்களுக்கு தகுந்த முறையில் ஓர் சட்டநூல் இயற்று வதற்காக ஏற்பட்டுள்ள சூழ்நிலையை கவனித்து அறிந்த பிராமணர்கள் அந்த சூழ்நிலையை தங்களுக்கு சாதகமாக பயன்படுத்தி கொண்டார்கள். ஆரியவர்த்தத்தில் திராவிடர்களை ஒடுக்கி இழிவுபடுத்தியும் அன்னி யரான ஆரியர்களை சிறப்பித்து உயர்த்தியும் எழுதப்பட்ட வருணா சிரமதர்மம் என்ற மனுச் சட்டத்தை சர் வில்லியம் ஜோன்சிடம் கொடுத்து இதை இந்திய மக்களுக்கு பொதுவான சட்டமாக பயன்படுத்தலாம் என்று ஆலோசனை கூறினார்கள்.

## மனுச்சட்டம் ஆங்கிலத்தில் மொழிப்பெயர்ப்பு

தம்மிடம் கொடுக்கப்பட்ட மனுச்சட்டம் என்பது மண்ணின் மைந்தர்களாகிய திராவிடர்களுக்கு எதிராக அன்னியர்களால் தயாரிக்கப்பட்ட ஒன்று என்ற உண்மையை புரிந்து கொள்ளாமல் சர் வில்லியம் ஜோன்ஸ் அதை சமஸ்கிருத மொழியிலிருந்து ஆங்கில மொழியில் மொழி பெயர்க்கச் செய்தார்.

## மொழிப் பெயர்ப்பால் வந்த விளைவுகள்

வருணாசிரம தர்மம் என்ற மனுச்சட்டம் நிறத்தின் அடிப்படையில் தயாரித்ததாகும். அது இந்தியாவில் வந்தேறிய வெள்ளை நிறமுடைய அன்னியர்களுக்காக இயற்றப்பட்டதாகும். அது அவர்களால் பிடிக்கப் பட்ட ஆரிய வர்த்தத்தில் திராவிடர்களை இழிவு படுத்தியும் வெள்ளையர்களை மேன்மைப்படுத்தியும் எழுதப்பட்டதாகும். அதில் வெள்ளை நிறமுடைய ஆரியர்கள் ஆளப்பிறந்தவர்களென்று சிறப்பிக்கப்பட்டிருந்தது. இந்த கூற்று வெள்ளை நிறமுடைய ஐரோப்பியர்களை எல்லாம் மெய் சிலுக்க வைத்தது.

## வில்லியம் ஜோண்ஸின் உருவச்சிலை

சந்தோஷத்தின் மிகுதியால் வெள்ளையர்கள் கையில் மனுநூல் பிடித்த வண்ணமான சர் வில்லியம் ஜோண்சின் உருவச் சிலை ஒன்றை வெஸ்ட் மினிஸ்டர் ஆபி (West minster Abby)-யில் வைத்தார்கள். அச்சிலை இன்றும் அங்கு வைக்கப்பட்டிருக்கிறது. அதைத் தொடர்ந்து வெள்ளை நிறத்தவரான ஐரோப்பியரெல்லாரும் தங்களை ஆரியர்கள் என்று கூறிக் கொள்ள தொடங்கினார்கள். அவர்கள் ஆரியர் என்பது ஒரு இனத்தவர் என்றே தவறாய் எண்ணிக் கொண்டார்கள். இப்படிப் பட்ட வீண் பெருமையினால் ஜெர்மனியில் ஹிட்லர் லட்சகணக்கான யூதர்களை கொன்று குவிக்க நேர்ந்தது.

## இந்துலா (Hindu Law)

அன்னியர்களின் வருணாசிரம தர்ம்மமென்ற மனு நூலை கி.பி. 1794-ல் சர் வில்லியம் ஜோண்ஸ் மொழி பெயர்த்து அதற்கு இந்து லா

புக் (Hindu law Book) என்று பெயர் வைத்தார். அது மட்டுமல்ல அதின் அடிப்படையில் இந்திய சட்டத்தையும் அமைத்து அதற்கு இந்துலா (Hindu law) என்று பெயர் வைத்தார். எனவே வில்லியம் ஜோண்ஸ் என்பவரால் வகுக்கப்பட்ட Hindu law என்பது ஆரிய வர்த்தத்தில் வந்தேறிய அன்னியர்களுக்காக அமைக்கப்பட்ட ஆரியர்களின் ஜாதிக் கொள்கை அல்லது வாழ்க்கை முறை என்ற வருணாசிரம தர்ம்மத்தின் அடிப்படையில் ஆனதே ஆகும்.

## 'இந்துலா' விலிருந்து 'இந்துயிஸம்'

வில்லியம் ஜோண்சால் ஏற்படுத்தப்பட்ட Hindu law என்ற ஆங்கில வார்த்தையிலிருந்து முதல்முதலாக இந்துயிசம் 'Hinduism' என்ற வார்த்தை உருவாக்கப்பட்டது. Hinduism என்பதற்கு Hindu law உருவாவதற்கு காரணமான அடிப்படை கொள்கைகள் என்பதே பொருள். Hindu law மனுநூலின் அடிப்படையில் உருவானதாகும். மனுநூல் என்பது ஜாதிக் கொள்கையே. அதாவது கருமை நிறமுடைய திராவிடர்கள் பிறப்பால் அடிமைகள், வெள்ளை நிறமுடைய ஆரியர்கள் பிறப்பால் உயர்ந்தவர்கள், அவர்கள் ஆளப்பிறந்தவர்கள், திராவிடர்கள் ஆரியர்களால் ஆளப்பட வேண்டும். இவ்வாறு திராவிடர்களை ஆரியர்கள் அடிமைகளாக்கி வாழும் வாழ்க்கை முறையே அந்த ஜாதிக் கொள்கை. இப்படிப்பட்ட ஜாதிக்கொள்கை என்ற வாழ்க்கை முறையை ஏற்படுத்துவதற்காக திராவிடர்களை எது வேண்டுமானாலும் செய்யலாம். அதுவே நீதி. அதுவே தர்ம்மம் என்று எடுத்துக் கொள்ளப்பட்டது.

## இந்துத்துவா என்ற புதுப்பெயர்

இந்துயிசம் 'Hinduism' என்ற ஆங்கில வார்த்தைக்கு பயன்படுத்தப் பட்ட சமஸ் கிருத வார்த்தையே 'இந்துத்துவா' என்பதாகும். எனவே இந்துத்துவா என்பது வருணாசிரம தர்மம் அல்லது ஜாதிக்கொள்கை அல்லது பிராமணீயம் என்ற ஆரிய வாழ்க்கை முறைக்கு உருவாக்கப் பட்ட புதுப்பெயராகும்.

## இந்துத்துவா ஒரு வாழ்க்கை முறை ?

இந்நாட்களில் இந்துத்துவா அல்லது Hinduism என்பது ஒரு மதம் அல்ல அது ஒரு வாழ்க்கை முறை என்று எல்லா இந்துத்வவாதி களாலும் பேசப்படுகிறது. அப்படியானால் அது யாருடைய வாழ்க்கை முறை ? அது யாரால் உண்டாக்கப்பட்ட வாழ்க்கை முறை ? அது யாருக்காக உண்டாக்கப்பட்டது ? என்பவைகளைக் குறித்து நாம் அறிய வேண்டியது அவசியமாகும்.

## ஆரியர்களின் வாழ்க்கை முறை

இது வெள்ளை நிறத்தவராகிய ஆரியர்கள் தங்களை உயர்த்தி கருமை நிறமுடைய திராவிடர்களை இழிவுபடுத்தி ஜாதியின் அடிப்படையில் தங்களுக்காக அமைத்துக்கொண்ட ஒரு வாழ்க்கை முறையே ஆகும். இது சிறுபான்மையினரான ஆரியர்கள் பெரும் பான்மையான திராவிடர்களை அடக்கி ஆளுவதற்காக ஏற்படுத்திக் கொண்ட சூட்சியே அல்லாமல் வேறல்ல.

## வாழ்க்கை முறையால் வகுக்கப்பட்ட ஜாதிகள்

1. அன்னியர்களுக்கு துணை நின்று சொந்த மக்களை காட்டிக் கொடுத்தவர்களை உயர்சாதி ஆக்கினார்கள். (Forward caste)

2. அன்னியர்களுக்கு அடி பணிந்த திராவிடர்களை இடை சாதியினர் அல்லது பிற்பட்ட சாதியினர் ஆக்கினார்கள். (Backward caste)

3. ஆதிக்கம் செலுத்திய அன்னியரை எதிர்த்த திராவிடர்களை கீழ்சாதியினர் அல்லது தீண்டத்தகாதவர்கள் என்று ஆக்கினார்கள். (Untouchable or scheduled caste)

4. அன்னியர்களின் கொடுமைகளுக்கு தப்பி காடுகளுக்கு ஓடினவர் களை மலை சாதியினர் ஆக்கினார்கள். (Scheduled tribes)

## வலியுறுத்துவது யார்?

ஜாதிக் கொள்கை என்ற வாழ்க்கை முறையை இந்தியாவில் வலியுறுத்துகிறவர்கள் அன்னியர்களான ஆரியர்களே ஆகும். அவர் களுக்கு மதம் கிடையாது. அவர்கள் தீ வழிபாட்டையுடையவர்கள். அவர்கள் எந்த மத நூலையும் எழுததாவர்கள். திராவிட அறிஞர்கள் எழுதிய வேதங்களை பறித்து கொண்டவர்கள். திராவிடர்களின் கோவில்களையும் அவர்களுடைய தெய்வங்களையும் பறித்து கொண்டவர்கள். திராவிட மக்களுடைய நிலங்களையும், உரிமைகளையும் பறித்துக் கொண்டவர்கள். திராவிடர்களுடைய அனைத்து செல்வங்களையும், செல்வாக்குகளையும் பறித்துக் கொண்டு அவர்களை தங்கள் கால்களின் அடியில் அடக்கி ஆளுகை செய்யும் பத்து சதத்துக்கு கீழான சிறுபான்மையினர் ஆகும்.

## அடக்கப்பட்டவர்கள் யார்?

Hindu law என்ற பெயரில் ஆங்கிலேயரால் திணிக்கப்பட்ட மனுச் சட்டத்தினால் இந்திய மக்களில் 90 சதத்தவர்களான திராவிடர்கள் பத்துசத ஆரியர்களின் கால்களின் கீழ் அழுத்தப் பட்டார்கள். அழுத்தப்பட்டு கிடக்கும் இந்த திராவிட மக்களுக்கு மதம் உண்டு.. அவர்கள் சிந்தனையாளர்கள். தெய்வ பயம் உடையவர்கள். ஒரு கூட்டத்தார் சைவ மதத்தினர். மற்றொரு கூட்டத்தார் வைணவ மதத்தினர். இவர்கள் பலி செலுத்தாதவர்கள். மேலும் ஒரு கூட்டம் திராவிட மக்கள் பழந்திராவிட தொழுகை உடையவர்கள். இவர்கள் பலி செலுத்துபவர்கள். மண்ணின் மைந்தர்களாகிய இந்த அழுத்தப்பட்ட திராவிடர்கள் ராஜாக்களாகவும், தத்துவ மேதைகளாகவும், கணித நிபுணர்களாகவும், மத ஆசாரியர்களாகவும், முனிவர்களாகவும் இருந்தவர்கள். தங்களுடைய எல்லா உரிமைகளையும் பறி கொடுத்தவர்கள்.

## அடக்கி ஆளும் வாழ்க்கை முறை

உயர் நிலைகளிலிருந்த 90 சதத்திற்கு அதிகமான திராவிட மக்களை அரசாங்க உதவியோடு தங்கள் கால்களின் கீழே அடக்கி வைத்துக் கொள்ள சிறுபான்மையினரான ஆரியர்கள் கையாண்டு வரும் "வாழ்க்கை முறையே" இந்துத்துவா என்பதாகும்.

*(மேலும் தெளிவுபெற திராவிட சமயம் பத்திரிகை காண்க)*

**அதிகாரம் 31**

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 7)

# இந்துத்துவாவும் இந்து மதவும்

## இந்து மதம் - பொதுக்கருத்து -

பொதுவாக இந்துமதம் ஒரு சமயமென்றும் அது இந்திய மக்களில் பெரும்பாலானோர் பின் பற்றும் ஓர் மதம் என்றும் கருதப்படுகிறது. மட்டுமல்ல, இந்து மதம் என்பது தொன்று தொட்டே இருந்து வரும் ஓர் பழங்கால மதம் என்றும் அது காலங்களை கடந்த காலத்தில் உருவானதால் எந்த காலத்தில் எவர் உருவாக்கினார் என்பது குறிப்பிடப் படவில்லை என்றும் அது "சனாதன தர்ம்மம் "அதவாது காலங்களுக்கு அப்பாற்பட்ட தர்மம் என்றும் அது தானாகவே வளர்ச்சியடைந்த ஒரு மதம் என்றும் பல நாகரீகங்களை உட்கொண்ட அதற்கு ஒரு குறிப்பிட்ட மத நம்பிக்கை இல்லை என்றும் ஒரு நாத்திகனோ, ஒரு ஆத்திகனோ ஒரு ஏக தெய்வ கொள்கை உடையவனோ, பல தெய்வ கொள்கை உடையவனோ, இந்துவாக இருக்க முடியும் என்றும் இது பல மதங்களின் கூட்டு சங்கமம் என்றும் எண்ணிறந்த ஆசார முறைகள் இதற்கு உண்டென்றும், முப்பத்து முக்கோடி தேவர்கள் உண்டென்றோ, எந்த ஒரு தெய்வமும் இல்லை என்றோ இயற்கை தான் தெய்வ மென்றோ, நானே தான் கடவுள் என்றோ கூறிக் கொள்பவனும் இந்துவாக இருக்க முடியும் என்றும் இப்படி எதையும் ஏற்றுக் கொண்டு

முற்போக்கில் செல்லும் ஒரு மதம் தான் இந்து மதம் என்று இந்து மதத்தை குறித்து அனேகர் பாராட்டி எழுதப்பட்ட அனேக நூல்களை நாம் பார்க்கலாம். ஆனால், இதைக் குறித்து நாம் ஆழ்ந்து கவனிக்கும் போது 'இந்து மதம்' ஓர் மதம் அல்ல அது நாம் கற்பனை செய்து கொள்ளும் மாயையான ஒன்று என்று பார்க்க முடிகிறது.

## போலிப்போர்வை

90 சதம் திராவிட மக்களை தங்களுக்கு கீழ்ப்படுத்தி ஆளுகை செய்யும்படி அரசாங்க உதவியோடு 10 சத ஆரியர்களால் உண்டாக்கப் பட்ட இந்துத்துவா என்ற ஜாதிக் கொள்கையாகிய அரக்கனின் நச்சுத் தன்மைகள் வெளியே தெரியாமல் மறைத்து மூடுவதற்காக இந்துத்துவ வாதிகளால் உருவாக்கப்பட்ட மாய்கைப் போர்வையே 'இந்து மதம்' என்ற பெயராகும். ஆரிய வர்த்தத்தில் ஆரியர்களால் ஏற்படுத்தப்பட்ட ஜாதிக் கொள்கையின் அடிப்படையில் உருவாக்கப் பட்டதே Hindu Law. அதிலிருந்து உருவாக்கப்பட்டதே Hinduism அல்லது இந்துத்துவா. இந்துத்துவாவை மூடி வைத்திருக்கும் போர்வையே இந்து மதம் என்பதாகும்.

## இந்துத்துவா மதமாக்கப்படுதல்

Hinduism என்ற இந்துத்துவாவின் கீழ் திராவிட மக்களை கொண்டு வருவதற்காக இந்துத்துவவாதிகளான ஆரியர்கள் திட்டம் வகுத்தார்கள். அதற்காக இந்துத்துவா என்பதை ஒரு மதமாக திரித்து அதனுள் திராவிட மதங்களை திணித்து அதற்கு இந்து மதம் என்ற போலி பெயர் கொடுத்து அதை பிரஸ்தாபப்படுத்தினார்கள். மட்டுமல்ல அவ்வாறு இந்து மதமென்ற போலி போர்வைக்குள் வலுக்கட்டாயமாய் திணிக்கப்பட்ட திராவிட மதங்களுக்கு மதமில்லாத பிராமணர்களே மதத் தலைவர்களாக அமர்ந்து கொண்டார்கள்.

## ஜாதிக் கொள்கை என்ற அரக்கன்

ஜாதிக் கொள்கை என்பது ஒரு அரக்கன். அது மதமல்ல அது பிராமணீயம். அது சிறுபான்மையினரான ஆரியர்களின் வாழ்க்கை

முறை. அந்த அரக்கன் 90 சதத்தவரான திராவிட மக்களை கட்டாயப் படுத்தி தன் கால்களின் கீழ் அடக்கிக் கொண்டான். மட்டுமல்ல அவர்களை நிரந்தரமாக ஆட்சி செய்ய சூட்சி செய்தான். அதற்காக உண்டாக்கப்பட்டதே அந்த மாயைப் போர்வை. அந்த அரக்கன் 'இந்து மதம்' என்ற போர்வையை எடுத்து தன்னையும் தன் காலடிகளில் வாடிக்கிடக்கும் 90 சதத்தவரான திராவிடர்களையும் சேர்த்து மூடிக் கொண்டான். மட்டுமல்ல நாங்கள் எல்லாரும் 'இந்துக்கள்' நாங்கள் தான் பெரும்பான்மையினர் என்று கூறிக் கொண்டு திராவிடர்களை ஆளத் தொடங்கி விட்டான்.

## கட்டாயப் போர்வைக்குள்ளே

ஆனால் அந்த 'இந்து மதம்' என்ற கட்டாய போர்வைக்குள் தவித்து கிடப்பது திராவிட மக்களின் சைவ வைணவ மதங்களும் பழங்கால திராவிட தொழுகையும் ஆகும். வேறு வழியில்லாமல் 90 சதத்தினர் ஆன திராவிட மக்கள் 10 சதத்தவரான ஆரியர்களுடன் இந்துக்கள் என முத்திரை குத்தப்பட்டார்கள். இதினிமித்தம் ஓர் கட்டாய கலவை ஏற்படலாயிற்று. பழங்கால திராவிட தொழுகை, அன்னியர்களின் தீ வழிபாடு, வைதீக வழிபாடுகள், சைவ வைணவ சமயங்கள் ஆகிய எல்லாமே ஒன்று கலக்கப்பட்டது. ஏக தெய்வ தொழுகையுடையவர்களும், பலதெய்வ கொள்கை உடையவர் களும், முப்பத்து முக்கோடி தேவர்கள் உண்டு என்பவர்களும் நானே கடவுள் என்பவர்களும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், பூமி, காற்று, மரம், காளை, யானை போன்ற எதையும் வணங்குகிறவர்களும், பலி கொடுப்பவர்களும் கொடாதிருப்பவர்களும், சடங்காச்சாரங்கள் உள்ளவர்களும் இல்லாதவர்களும் எல்லாருமே "இந்துக்கள்" என்ற வரிசையில் சேர்க்கப்பட்டார்கள். இதுவே பல்வேறு மதங்கள், கொள்கைகள், கோட்பாடுகள், எல்லாம் ஒன்று கலக்க காரணமாயிற்று.

## வெளியேறத் தடை

"இந்துமதம்"என்ற போலிப் போர்வைக்குள்ளிருக்கும் திராவிட மக்களில் எவரும் வெளியே சென்றுவிடாதபடி தடைசெய்ய சங்கர மடங்கள் எப்போதும் விழிப்போடு உள்ளன. சங்கர மடங்களோடு

இணைத்து இந்துத்துவாவை பாதுகாக்க BJP, R.S.S., விஸ்வகிந்து பரிசத், பஜ்ரங்தள், இந்துமுன்னணி போன்ற மற்று அமைப்புகளும் உண்டு.

## மதமென்றே நம்பும் பரிதாபம்

மேற்கூறப்பட்ட சங்கரமடங்களும் மற்று அமைப்புகள் எல்லாம் மத அமைப்புகள் என்றே பெருவாரியான எல்லா மக்களும் தவறாய் புரிந்திருக்கிறார்கள். ஆனால் உண்மையில் அவைகள் இந்துத்துவா கொள்கையின் அமைப்புகளாகும். இந்துத்துவா என்பது ஒரு மதமே அல்ல என்றும் அது ஒரு வாழ்கை முறை மட்டுமே என்றும் இந்நாட்களில் எல்லோருமே கூறுகிறார்கள். ஆனால் சாதாரணமக்கள் 'இந்து மதம்' என்பது ஒரு மதமென்றும் சங்கர மடங்களும் மற்று அமைப்புகளும் மத அமைப்புகளே என்றும் இன்னும் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். இல்லாதமதமாகிய இந்து மதத்தை இருப்பதாக மனப்பூர்வமாய் நம்பும் காரணத்தால் அப்பாவிமக்கள், இல்லாத அந்த மதத்துக்காக எதுவும் செய்ய தயாராக உள்ளார்கள். இதை பயன்படுத்தி இந்துத்துவவாதிகள் மதவெறி செயல்களை தூண்டி விடுகிறார்கள். இதினிமித்தம் திராவிடர்கள் நிரந்தரமாக மதக்கலவரங்களில் தீவிரப் படுத்தப்படுகி றார்கள். இந்துத்துவ வாதிகளோ அரசியல் செல்வாக்கு அடைகிறார்கள்.

## மதமற்ற பூசாரிகள்

திராவிட புரோகிதர்கள் துரத்தப்பட்டுவிட்டார்கள். கோவில்களுக்கு எந்த சம்மந்தமும் இல்லாத பிராமணர்கள் எல்லா கோயில்களிலும் புரோகிதர்கள் ஆக்கப்பட்டு விட்டார்கள். கழுதைக்கும் கழுதைக்கும் அல்லது மரத்துக்கும் மரத்துக்கும் திருமணங்கள் நடத்தி வைக்கவும் எந்த பூஜைகள் செய்யவும் பிராமண புரோகிதர்கள் தயாராகி விட்டார்கள். இந்த செய்திகளை பத்திரிகைகளில் இன்று ஏராளம் பார்க்கிறோம்.

## பற்பல பெயர்கள்

வருணாசிரம தர்மம், மனுதர்ம சாஸ்திரம், சதுர்வர்ணம், பிராம

ணீயம், வாழ்க்கை முறை என்றெல்லாம் அழைக்கப்படுவது ஜாதிக் கொள்கை ஆகிய இந்துத்துவா என்பதின் மற்றும் பெயர்களாகும். ஜாதிக் கொள்கை என்ற அரக்கன், தான் அடக்கி வைத்துள்ள 90 சதம் திராவிட மக்களை தப்ப விடாமல் மூடி வைத்திருக்கும் போலிப் போர்வையே இந்துமதம் என்பதாகும். எனவே தான் இன்று இந்து மதம் ஒரு மதம் அல்ல என்று பேசப்பட்டும் அது ஒரு மதம் என்ற நிலையில் செயலாற்றப்படுகிறது.

## போர்வைக்குள் ஓலம்

இந்து மதம் என்ற கட்டாயப் போர்வைக்குள் அழுகையும் ஓலமும் அபயக் குரல்களும் எழும்புவதுண்டு அவைகளை எல்லாம் அந்த அரக்கனே சமாளித்து விடுவான். தேவைப் படும் போது அரசாங்க உதவி எப்போதுமே உண்டு. போதாதற்கு சங்கரமடங்களும் உண்டு. போர்வைக்குள் எதிர்ப்புக் குரல் எழுப்பிய எத்தனையோ தத்துவ மேதைகள், சிந்தனையாளர்கள், கவிஞர்கள், சித்தர்கள், முனிவர்கள் ஆகிய திராவிடர்கள் கொலை செய்யப் பட்டிருக்கிறார்கள்.

## ஓடிப் போனவர்கள்

## ஈ.வே.ரா. பெரியார்

ஈ.வே.ரா. பெரியார் போன்றவர்கள் இந்து மதம் என்ற போர் வைக்குள் கிளர்ச்சி செய்தவர்களில் சிலர். பெரியார் அகில இந்திய காங்கிரஸ் பொதுச் செயலாளர் பதவியிலிருந்தே விலகி, திராவிட இயக்கம் ஆரம்பிக்க வேண்டிய கட்டாயம் இதனால் ஏற்பட்டது.

## ஜாதி அடிப்படையில் பந்தி

அகில இந்திய காங்கிரஸ் மாநாடு ஒன்றில் பார்ப்பன காங்கிரஸ் உறுப்பினர்களுக்கு ஒரு பந்தியிலும், பிராமணர் அல்லாத உறுப்பினர் களுக்கு வேறு பந்தியிலும் உணவு பரிமாறப்பட்டது. இந்த பாரம் பரியத்தை எதிர்த்து காங்கிரஸ் கட்சியில் சமத்துவம் வேண்டும் என்று பெரியார் ஆலோசனை கூறினார். அதை பிராமண உறுப்பினர்கள் ஏற்கவில்லை. எனவே தாம் அக்கட்சியில் இருக்க விரும்பவில்லை

என கூறிய பெரியார் காங்கிரஸ் கட்சியிலிருந்து வெளியேறி திராவிட இயக்கத்தை ஆரம்பித்தார்.

## Dr. அம்பேத்கார்

டாக்டர் அம்பேத்கார் போன்ற பலர் இந்து மதம் என்ற கட்டாய போர்வைக்குள்ளிருந்து தப்பி ஓடியிருக்கிறார்கள். டாக்டர் அம்பேத்கார் தம்மை சேர்ந்த பலரோடு இந்துமதம் என்னும் போர்வையிலிருந்து தப்பிச் சென்று புத்தமதத்தை தழுவிக் கொண்டார்.

## மகாத்மா ஜோதிராவ் பூலே

மகாத்மா ஜோதி ராவ் பூலே பிராமணனான தன் பள்ளிக்கூட நண்பனின் குடும்பத் திருமணத்திற்கு அழைக்கப்பட்டிருந்தார். ஆனால் அவர் அங்கு சென்றபோது தான் ஒரு தலித் என்பதால் அடித்து உதைத்து துரத்தப்பட்டார். மனமுடைந்த அவரும் அவருடைய மனைவியுமாக பிராமணீயத்திலிருந்து விடுதலைபெற, பிராமணர்கள் அல்லாதோரின் அமைப்பாகிய 'சத்திய சோதக் சமாஜ்' என்ற அமைப்பை உருவாக்கி, அனேக பள்ளிக் கூடங்களை, முக்கியமாக பெண்களுக்காக ஆரம்பித்தார்கள்.

## ஜெகஜீவன் ராமுக்கு ஏற்பட்ட அவலம்

ஜெகஜீவன் ராம் பல்லாண்டு மத்திய அமைச்சராகவும் பாதுகாப்பு மந்திரியாகவும் துணைப் பிரதமராகவும் இருந்தவர். அவர் வாரனாசியில் முன்னாள் சபாநாயகராயிருந்த பிராமணராகிய திரு. சம்பூர்ணானந்த் என்பவரின் உருவச் சிலையை திறந்து வைத்தார். இவர் தலித் இனத்தவரைச் சேர்ந்தவராகையால் அந்தச் சிலை தீட்டுப்பட்டு விட்டது என்று கூறி அந்த சிலை கங்கை நீரைக் கொண்டு சுத்தம் செய்யப் பட்டது.

இதுபோன்று எண்ணற்ற திராவிடர்கள் இந்து மதம் என்ற போலிப் போர்வைக்குள் தவித்துக் கிடக்கிறார்கள்.

## பிரிவு : X

# கி.பி 20 - ஆம் நூற்றாண்டுக்கு பின்

*இருபதாம் நூற்றாண்டுக்குப் பின் கிறிஸ்தவத்தில் ஓர் எழுப்புதல் உண்டாகி உலகம் முழுவதும் ஆதிக் கிறிஸ்தவ நிலையை நாடத் தொடங்கியது.*

*திராவிட மக்களுக்கு இந்தியாவில் விழிப் புணர்வு ஏற்பட்டது.*

*இது வரையில் ஒரு மதமாக கருதப்பட்ட 'இந்துமதம்' என்பது ஒரு மதம் அல்ல, அது ஒரு வாழ்க்கை முறை என்று வெளிப்படுத்தப் படுகிறது.*

*'இந்து' 'இந்துத்துவா' 'இந்துக்கள்' போன்ற சொற்களின் கருத்துக்களை மக்கள் புரிந்து கொள்ளத் தொடங்கிவிட்டார்கள்.*

*இந்துத்துவாவுக்கு எதிர்ப்புகள் வலுக்கின்றன.*

*இந்துத்துவா ஆட்சியை மக்கள் புறக்கணிக்கத் தொடங்கி விட்டார்கள்.*

அதிகாரம் 32

# கிறிஸ்து மார்க்கம்

(தொடர் - 14)

## சுதந்திர சபைகளின் தோற்றமும் வளர்ச்சியும்

ஆதிச்சபையின் தன்மைகளை மீண்டும் அடைய வேண்டுமென்ற அடிப்படையில் நடைபெற்ற முயற்சிகளையும் சீர்திருத்தங்களையும் முன்னால் பார்த்தோம். 19-ஆம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னும் அம்முயற்சிகள் தொடர்ந்து கொண்டிருந்தன. பாசில் மிஷன் பிரதரன் அசம்ப்ளி, இரட்ண்ணிய சேனை போன்ற பல இயக்கங்கள் இம்முயற்சிகளால் ஏற்பட்டவையாகும்.

### பெந்தேகோஸ்தே இயக்கம்

எழுத்தின்படி உள்ள புதிய ஏற்பாட்டு சபையின் செயல்பாடு களைப் போல் தற்கால சபைகளை செயல்படுத்தும் நிலையே பெந்தேகோஸ்தே இயக்கம் என்பதாகும். பெந்தேகோஸ்தே நாளின் அனுபவமான பரிசுத்த ஆவியில் அபிஷேகம் பண்ணப்படுதலும் அதை அன்னிய பாஷை மூலம் வெளிப்படுத்துதலும் இதன் முக்கிய அம்சங்களாகும். இவ்வனுபவமானது முதலாம் நூற்றாண்டு முதல் இந்நாள் வரை பலவிதங்களில் பல தனி நபர்கள் மூலம் செயல்படுத்தப் பட்டு வருகின்றது.

இரண்டாம் நூற்றாண்டில் சபை பிதாவான ஐரேனியஸ் (130 - 202 A.D.) என்பவர் "எங்களுடைய சபையில் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தால் நிறைந்து தீர்க்கதரிசனம் மற்றும் அன்னிய பாஷை பேசும் சகோதரர்கள் உள்ளனர்" என்று குறிப்பிடுகின்றார். இதுபோல் மூன்றாம் நூற்றாண்டு சபை பிதாவான தெர்துல்லியனும் சபையில் பரிசுத்த ஆவியானவரின் செயல்பாடு இருந்ததாய் கூறுகின்றார். பிற்காலங்களில் திருச்சபை பாபிலோனிய மதத்துக்கு அடிமைப் படுத்தப்பட்டபடியால் திருச்சபையில் பரிசுத்த ஆவியானவரின் செயல்பாடுகள் மங்கிய நிலையில் காணப்பட்டது.

## அமெரிக்காவில்

தற்கால பெந்தேகோஸ்தே இயக்கமானது அமெரிக்காவில் கேன்சாஸ் (Kensas) பட்டணத்திலுள்ள டொப்பிக்கா (Topeka) என்ற இடத்தில் 1901-ம் ஆண்டு ஆரம்பமானது. மெதடிஸ்ட் அமைப்பின் போதகரா யிருந்த பெர்க்காம் என்பவர் ஒன்றாம் நூற்றாண்டின் சபை அனுபவ மான பரிசுத்த ஆவியினால் அபிஷேகம் பண்ணப்படுவதை விசுவாசித்து அதை மக்களுக்கு போதிக்க பெத்தேல் வேதாகம பள்ளியை டொப்பிக்கா (Topeka) என்ற இடத்தில் நிறுவினார். 1901-ம் ஆண்டு புதுவருட தினத்தில் அவருடைய மாணவரில் ஒருவரான (18 வயது நிரம்பின ஒரு பெண்மணி) அக்னஸ் ஒஸ்மான் என்பவர் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தை பெற்று அன்னிய பாஷையில் பேசினார்.

## பெந்தேகோஸ்தே இயக்கத்தின் நம்பிக்கை

மேலும் பெர்க்காம் என்பவர் பரிசுத்த இயக்கம் என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தி இதில் விசுவாசத்தால் நீதிமானாக்கப்படுதல், பரிசுத்தமாக்கப்படுதல், தெய்வீக சுகம், இயேசுவின் இரண்டாம் வருகை என்பவைகளை அடிப்படையாக போதித்து வந்தார். இவ்வியக்கமானது ஆவிக்குரிய அனுபவத்தை அடிப்படையாக கொண்டது. வேத புத்தகத்தின் அதிகாரமும் எழுத்தின்படியான ஊக்குவித்தலும் விசுவாசிக்கப்பட்டது.

## ஆவியின் அபிஷேகம்

*1905*-ல் டெக்ஸாஸிலுள்ள கூஸ்டன் (Texas, Houseten) என்ற இடத்தில் மேலும் ஒரு வேதாகம பள்ளி நிறுவப்பட்டது. இப்பள்ளியின் மாணவரான கறுப்பினத்தைச் சேர்ந்த விலியம் ஜே. செய்மன் (William J Seimen) என்பவர் லாஸ் ஏஞ்சலிஸில் (Los Angeles) ஏப்ரல் *9, 1906* -ல் செய்தி கொடுத்தபோது அவர் மேலும் மற்றும் சிலர் மேலும் ஆவியின் அபிஷேகம் அனலாய் இறங்கியது. இதன் விளைவாய் மூன்று நாள் இரவு பகலாக ஜனங்கள் மிகுந்த சத்தத்துடன் ஆண்டவரை துதித்து ஆராதித்தனர்.

## பெந்தேக்கோஸ்தே சபைகள்

*1906*-ம் ஆண்டு இறுதியில் லாஸ் ஏஞ்சலிசில் ஒன்பது பெந்தே கோஸ்தே சபைகள் நிறுவப்பட்டன. *(1906 - 1920)* பெந்தேகோஸ்தே விசுவாசமானது அமெரிக்காவின் பல பகுதிகளிலும் ஜாண் வெஸ்லியின் மெதடிஸ்ட் சபையின் பல பகுதிகளிலும் பரவினது.

## மிஷனறி இயக்கம்

*1909* -ல் கனடாவின் பல பகுதிகளிலும் பெந்தேகோஸ்தே சபைகள் காணப்பட்டது. இங்கு பெந்தேகோஸ்தே மிஷனரி இயக்கம் தொடங் கப்பட்டது. *1908*-ல் இவ்வியக்கம் இத்தாலியிலும் ஆரம்பிக்கப்பட்டது. *1912*-ல் ஐரோப்பிய பெந்தேகோஸ்தே ஆலோசனைக் குழு என்ற குழு ஆரம்பிக்கப்பட்டது.

## இந்தியாவில்

*1906*-ல் பண்டித ராமாபாயியின் 'முக்தி மிஷன்' என்ற இயக்கத்தில் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் இறங்கியது. இதை கேள்வியுற்ற மேல்நாட்டு மிஷனரிகள் பலர் இந்தியாவில் குறிப்பாக கேரளத்தில் ஊழியம் செய்து இவ்விசுவாசத்தை பரப்பி வளரச் செய்தனர்.

## உலக அளவில் வளர்ச்சி

*1937-ல் அமெரிக்கன் அசம்பிளீஸ் ஆப் காட் சபையானது கூடி ஒரு உலக பெந்தேகோஸ்தே முகாம் 1940-ல் லண்டனில் நடத்த வேண்டு மென்று தீர்மானித்தனர். அதன்படி அவ்வாண்டில் தானே முகாம் நடத்தப்பட்டது.*

## கரிஸ்மாட்டிக் இயக்கம்

*இவ்வியக்கமானது பரிசுத்த ஆவியானவரின் இரண்டாம் அலை இயக்கம் என கருதப்படுகின்றது. இது பாரம்பரிய ஸ்தாபன சபைகளிலிருந்து எழும்பின ஒரு இயக்கமாகும். இன்று சுமார் இரண்டு கோடிக்கும் அதிகமானோர் இதில் அங்கத்தினராக உள்ளனர். வட அமெரிக்காவில் கத்தோலிக்கா சபையில் 18 சதவீதத்திற்கு அதிகமான வர்களும், மெதடிஸ்ட் சபையில் 18 சதவீதத்திற்கு அதிகமானவர்களும் பாப்டிஸ்ட் சபையில் 20 சதவீதத்திற்கு மேற்பட்டோரும் மற்றும் பல சபைகளில் அனேகம் பேரும் இவ்வியகத்தில் அங்கம் வகிக்கின்றனர்.*

## இயக்கத்தின் வளர்ச்சி

*இரண்டாம் உலகப்போரின் காலத்திலிருந்தே பல சபைகளிலி ருந்தும் ஜனங்கள் இவ்வியக்கத்தில் சேரத்தொடங்கினர். 1960-70-ல் உலகின் எல்லா பகுதிகளிலும் உள்ள ரோமன் கத்தோலிக்கா மற்றும் புரோட்டஸ்டாண்டு சபைகளின் அங்கங்கத்தினர்களில் பலர் இதில் சேர்ந்தனர். ஆதிகாலங்களில் இருந்த பெந்தேகோஸ்தே சபையின் விசுவாசிகள் இவ்வியக்கத்தின் தலைவர்களாய் மாறினார்கள்.*

*இவ்வியக்கமானது வட அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்திலும் மற்றும் ஐரோப்பிய நாடுகளிலும் பரவியது.*

## ரோமன் கத்தோலிக்க கரிஸ்மாட்டிக் இயக்கம்

*ரோமன் கத்தோலிக்க சபையில் இவ்வியக்கம் 1967-ல் உண்டானது. பிட்ஸ்பர்கிலுள்ள டுக்கர்சி பல்கலை கழகத்தில் மாணவர்களின் ஜெப கூடுகையில் சில மாணவர்கள் 'அப்போஸ்தல நடபடிகள்' புத்தகத்தை*

தியானிக்க வார இறுதியில் கூடினர். அங்கே பரிசுத்த ஆவியின் அனுபவம் ஏற்பட்டது. பின்பு இவ்வியக்கம் அமெரிக்காவின் பல பகுதிகளுக்கும் பரவியது. 1973-ல் தென் அமெரிக்காவின் எட்டு நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் கூடி தென் அமேரிக்க 'கரிஸ்மாட்டிக் மையம்' ஒன்றை நிறுவி இதனை ஒருங்கிணைத்தனர்.

ரோமன் கத்தோலிக்க சபையானது இவ்வியக்கத்தை கண்காணிக்க ஒரு கார்டினலை நியமித்தது. ஒவ்வொரு வருடமும் ரோமன் கத்தோலிக்கா கரிஸ்மாட்டிக் இயக்க முகாமானது கத்தோலிக்கா சபையின் அதிகாரத்தின் கீழ் நடத்தப்படுகின்றது.

## கத்தோலிக்கா கரிஸ்மாடிக் இயக்கத்தின் இறையியல் தன்மை

1. இவர்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தின் அனுபவத்தை விசுவாசிக்கின்றனர். ஆனால் பெந்தேகோஸ்தே கரிஸ்மாட்டிக் இயக்கத்தைப் போன்று அன்னிய பாஷை பேசுவதை அதிகமாய் முக்கியப்படுத்துவதில்லை.
2. வேத புத்தக்தைப் போல் சபையின் பல போதனைகளும் அதிகாரம் பெற்றதாய் நம்பப்படுகின்றது.
3. பரிசுத்த ஆவியின் ஸ்னானமானது சபையின் சடங்குகளை நிறைவேற்றுவதன் மூலம் ஏற்படுகின்றது என்று நம்பப் படுகிறது.
4. மரியாளை கன்னிகையாகவும், மத்தியஸ்தராகவும் நம்புவதுடன் மரியாளிடம் தியானவும் நடைபெறுகின்றது.
5. சபையின் அதிகாரத்தை நம்புவதுடன் போதகர்களுக்கு மத்தியஸ்த ஜெபம் செய்ய அதிகாரம் உண்டு என்றும் நம்புகின்றது.

## மூன்றாம் அலை இயக்கம் (Third wave)

பெந்தேகோஸ்தே இயக்கத்தைப் (முதல் அலை) போல மூன்றாம் அலையும் பரிசுத்த ஆவியின் வல்லமையில் விசுவாசம் வைத்துள்ளது. பிணியாளிகளை சுகப்படுத்துதல், பிசாசுகளை துரத்துதல், தீர்க்கதரிசனம் சொல்லுதல் ஆகியவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

## சில தன்மைகள்

a) இரட்சிக்கப்படும்போதே ஊற்றப்படும் பரிசுத்த ஆவியை விசுவாசிக்கின்றனர் (1 கொரி. 12 : 13).

b) அன்னிய பாஷை சிலருக்கு வரமாக கொடுக்கப்படுகிறது என்று நம்புகிறார்கள்.

c) பரிசுத்த ஆவியின் வல்லமையினாலும் அபிஷேகத்தினாலும் ஊழியம் செய்ய வேண்டும் என்கிறார்கள்.

d) ஆராதனையில் கைகளை உயர்த்துதல், வெளியரங்கமாக அன்னிய பாஷையில் ஆராதிப்பது ஆகிய முறைகளையும் இவர்கள் பின்பற்றுகின்றனர்.

1983-ல் பிட்டர் வேக்னர் என்பவர் இந்த இயக்கத்தை மூன்றாம் அலை என்று அழைத்தார். தற்பொழுது இதில் 2கோடி விசுவாசிகள் இருப்பதாக டேவிட் பேரட் என்பவர் கூறுகிறார்.

## கிறிஸ்தவர்களின் அடிப்படை விசுவாசம்

கிறிஸ்தவ சமயத்தில் பற்பல பிரிவுகள் இருந்த போதிலும் கிறிஸ்தவர்களின் அடிப்படை விசுவாசத்தில் ஒற்றுமை உண்டு. அவையாவன :-

## ஒரே தேவன்

★ தேவன் ஒருவரே. அவர் திருத்துவ தேவன். பிதாவாகிய தேவ னாகவும், சர்வ மகிமை பொருந்தியவராக செயல்படுகிறார். அவர் ஒருவரும் சேரக் கூடாத ஒளியில் வாசம் பண்ணுகிறார்.

★ குமாரனாகிய இயேசுக்கிறிஸ்து காணக்கூடாத தேவனின் தற்சொரூபமாக அவரை உலகிற்கு வெளிப்படுத்த மனித அவதாரமாக வரலாற்றில் வெளிப்பட்டவர். மனிதனின் பாவ பரிகாரத்துக்காக சிலுவையில் அறையுண்டு மரித்து மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து பிதாவின் வலது பாரிசத்தில் வீற்றிருக்கின்றவர்.

★ பரிசுத்த ஆவியாகிய தேவன் தேற்றரவாளராக உலகில் கிரியை செய்கின்றவர். அவர் பிதாவிலிருந்து வெளிப்பட்டு உலகில் கிரியை செய்கிறார்.

★ பிதா, குமாரன், பரிசுத்த ஆவியான தேவன் திரித்துவம் என்கின்ற செயல்பாடுகளில் கிரியை செய்கின்றவர். (ஒரே சாராம்சம், மூன்று செயல்பாடுகள்).

### மனிதன்

மனிதன் தேவ சாயலாக சிருஷ்டிக்கப்பட்டவன். ஆனால் பாவம் செய்து தேவமகிமை அற்றவனாய் மாறினான். மனிதனை பாவத்திலிருந்து மீட்பதற்காய் இயேசு உலகில் வெளிப்பட்டார்.

### பரிசுத்த வேத புத்தகம்

மனிதன் வாழவேண்டிய வழியை தேவன் வேதபுத்தகத்தின் மூலம் உலகிற்கு வெளிப்படுத்தினார். வேத புத்தகமானது தேவ ஆவியினால் ஏவப்பட்டு எழுதப்பட்டது.

### சபை

சபையானது இரட்சிக்கப்பட்ட தேவ பிள்ளைகளின் கூட்ட மாகும். அவர்கள் தேவனை ஆராதிக்க தேவனால் ஏற்படுத்தப்பட்ட கூட்டமாகும். உலகமெங்கிலும் இயேசுவை ஏற்றுக் கொண்டவர்கள் தேவனை ஆராதிக்கிறார்கள்.

### நித்திய வாழ்வு

எதிர்காலத்தில் கிறிஸ்து உலகில் மீண்டும் வந்து உலகத்தை நியாயந்தீர்த்து பரலோகத்தில் பரிசுத்தவான்களை சேர்ப்பார். பரிசுத்தவான்கள் நித்திய காலமாய் இயேசுவோடு வாழ்வார்கள்.

### தூதர்கள்

தூதர்கள் தேவனின் பணிவிடை ஆவிகள் ஆகும். அவர்கள் தேவனிடத்திற்கும் மனிதனிடத்திற்கும் வந்து போகின்ற ஆவிகள் ஆவர்.

### சாத்தான்

சாத்தானும் அவன் தூதர்களும் தேவனால் தள்ளப்பட்ட தூதர்கள் ஆகும். சாத்தானும் உலகில் தனது கிரியைகள் செய்கின்றான். உலகத்தின் முடிவில் சாத்தானும், அவனது தூதர்களும், அவனால் வஞ்சிக்கப்பட்ட ஜனங்களும், நரகத்தில் தள்ளப்படுவார்கள்.

*இவைகளை பொதுவாக கிறிஸ்தவர்கள் அனைவரும் விசுவாசிக்கிறார்கள்.*

## சபைகளில் சாத்தானின் கிரியைகள்

இன்று உலக நாடுகளில் அனேக சபை பிரிவுகள் காணப்படு கிறது. இது கடைசி காலம் ஆகையால் சாத்தானின் கிரியைகள் மிகுதியாய் இருக்கிறது. இதைக்குறித்து இயேசு கூறுகையில் கடைசி நாட்களில் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி கூடுமானால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக பெரிய அடையாளங் களையும் அற்புதங்களையும் செய்வார்கள் என்றார். மத். 24 : 24. இன்று நாம் அப்படிப்பட்ட காலத்தில் இருக்கிறோம்.

### இன்றைய ஊழியங்கள்

முழுக்க முழுக்க ஆவிக்குரிய நிலையில் தங்கள் வாழ்க்கையை ஆரம்பித்த விசுவாசிகள், போதகர்கள், சுவிசேஷகர்கள், சபைத்தலை வர்கள், அத்தியட்சர்கள் பிஷப்புகள் ஆகிய அனேகருடைய வாழ்க்கை முறைகளையும் ஊழியங்களையும் எல்லோரும் கவனிக்கிறார்கள்.

### சாத்தானால் வஞ்சிக்கப்படுகிறவர்கள்

இவர்களிலும் சிலர் சாத்தானால் வஞ்சிக்கப்படுகிறார்கள்.

அப்படிப்பட்டவர்கள் தங்கள் உடை, நடை, பாவனை மற்றும் வாழ்க்கை முறைகளில் உலக மனிதர்களைவிட கேவலமாய் காட்சியளிக்கிறார்கள். எப்படியாகிலும் தந்திரமாய் பணம் சம்பாதிப்பதே அவர்கள் குறிக்கோள். கர்த்தருக்கென்று கொடுக்கப்படும் காணிக்கை களை தகாத முறையில் துர்வினியோகம் செய்கிறார்கள். உலக இச்சைகளில் சிக்கி கொள்கிறார்கள். ஜெபிக்க வேண்டுமானால் கூசாமல் பணம் கேட்கிறார்கள். செய்தி அளிக்க தாங்கமுடியாத அளவுக்கு நிபந்தனைகளை போடுகிறார்கள். தங்களுக்கு பிடிக்காதவர் களை ஒழித்துக்கட்ட குண்டர்களை மறைமுகமாய் வைத்திருக்கிறார்கள். லஞ்சம் வாங்கவோ, கொடுக்கவோ ஆயத்தமாய் இருக்கிறார்கள். சபைத் தேர்தல்களில் தங்கள் கோஷ்டிகளின் வெற்றிக்காக எதை வேண்டுமானாலும் செய்கிறார்கள். அதிகாரத்தில் வந்துவிட்டால் தன் முன்நிலமைகளை மறந்து மனம்போல் செயல்படுகிறார்கள்.

## ஆசீர்வாத தோற்றம்

இப்படி இருந்தும் அவர்களுடைய ஊழியங்களில் பெரும் ஆசீர்வாதங்கள் இருப்பதுபோல் காணப்படுகிறது. அவர்களுக்கு சபைகள் நாளுக்குநாள் பெருகுகிறது. ஜனங்கள் அவர்களிடத்தில் கூட்டம் கூட்டமாய் ஓடி வருகிறார்கள். மக்கள் அவர்களுக்கு பணத்தை அள்ளி இறைக்கிறார்கள். அற்புதங்கள், அடையாளங்கள், தீர்க்கதரி சனங்கள் நாட்டையே அசைக் கிறது. அனேகம் பேர் இரட்சிக்கப்பட்டு ஆசீர்வதிக்கப்படுகிறார்கள்.

## பார்ப்போரின் கேள்வி

இவர்களுடைய அந்தரங்க வாழ்க்கையை பார்த்து அறிந்தவர்கள் இவைகளைக் கண்டு திகைத்து நிற்கிறார்கள். இது தேவனால் வரும் ஆசீர்வாதமா? அல்லது சாத்தானின் செயல்களா? இதுவே அவர்கள் கேள்வி.

## இவர்களைக் குறித்து இயேசு

தேவபிள்ளைகள் இதைக்குறித்து கலங்க வேண்டுவதில்லை.

இயேசு இவர்களைக் குறித்து (மத். 7:22, 23-ல்) 'அந்நாளில் அனேகர் என்னை நோக்கி கர்த்தாவே கர்த்தாவே உமது நாமத்தில் தீர்க்கத்தரிசனம் உரைத்தோமல்லவா? உமது நாமத்தில் பிசாசுகளை துரத்தினோமல் லவா? அனேக அற்புதங்களை செய்தோமல்லவா? என்பார்கள். அப்பொழுது நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை. அக்கிரம செய்கைக்காரரே என்னைவிட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்கு சொல்லுவேன்' என்று சொல்லியிருக்கிறார்.

## அக்கினி சோதனை

மட்டுமல்ல (I கொரி. 3 : 12-15 வசனங்களில்) பூமியில் செய்யப்படும் பொன், வெள்ளி, விலையேறப்பட்ட முத்து, மரம், புல், வைக்கோல் ஆகிய ஆறுவித ஊழியங்களைக் குறித்து சொல்லப் பட்டிருக்கிறது. பிரதிபலன் பரலோகத்தில் கொடுக்கப்படும். ஆனால் தேவன் அங்கே ஓர் அக்கினி பரீட்சை வைத்திருக்கிறார். அவர்கள் அங்கே அக்கினி வழியாய் தங்கள் வேலைப்பாடுகளோடு செல்ல வேண்டும். அந்த சோதனையில் பொன், வெள்ளி, முத்து ஆகியவை மேலும் சோபிக்கும். மரம், புல், வைக்கோல் ஆகிய, மாம்சத்தில் செய்யப்பட்ட 'பந்தா' ஊழியங்கள் அக்கினியில் எரிந்து போம். அந்த ஊழியக்காரனோ அக்கினியில் அகப்பட்டு விரூபமான தோற்றத்தோடு உயிர்தப்பிப் பிழைத்தவனைப் போல் பரிதாபமாய் காணப்படுவான்.

## சாத்தானை வென்றவர் கர்த்தர்

கர்த்தர் சாத்தானின் கிரியைகளை வென்றவர். அவர் இரங்கி அளிக்கும் கிருபை வரங்களை காத்துக்கொள்ள வேண்டியது நமது கடமை. காத்துக்கொள்ளாதவர்கள் அவருடைய நியாயசனத்தின் முன் அக்கினி சோதனையில் கதறுவார்கள். ஆனால் கர்த்தருடைய ஊழியம் தடைபடாமல் நடைபெறும். இரட்சிப்பை இழந்து விடுகிறவர்கள் பரிதாபத்திற்கு உரியவர்களே.

அதிகாரம் 33

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 8)

# இந்துத்துவாவுக்கு எதிரான விழிப்புணர்வு

## 20 ஆம் நூற்றாண்டு முதல் திருப்பம்

ஆரியர்களால் இழிவுப்படுத்தப்பட்ட திராவிட மக்கள் உலகிலேயே மிகச் சிறந்த நாகரீகத்தை உடையவர்கள் என்ற உண்மை கி.பி 20 ஆம் நூற்றாண்டில் ஆதாரப்பூர்வமாய் நிலைநாட்டப்பட்டது. கி.பி. 1920-ல் ஹரப்பா, மொஹஞ்சதாரோ ஆகிய இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சிகள் புகழ்பெற்ற சிந்துவெளி நாகரீகத்தை வெளிக் கொண்டு வந்துள்ளது. சிந்துவெளி நாகரீகம் திராவிடர்களின் நாகரீக மாகும். தங்கள் மகிமையான முன் நிலைமைகளை குறித்து அறிந்து கொண்ட திராவிட மக்கள் புத்துயிர் அடைய தொடங்கி விட்டார்கள். புதைக்கப்பட்டுக் கிடந்த பல இலக்கியங்களையும் அரிய பொக்கிஷங்க ளையும் வெளிக்கொண்டு வரவும் தொடங்கி விட்டார்கள். அதே வேளையில் அவர்கள் இந்துத்துவாவின் தன்மைகளை குறித்தும் ஆராயத் தொடங்கி விட்டார்கள்.

## ஆரியமயமாக்கும் முயற்சி

மேற்கூறப்பட்ட சிந்துவெளி நாகரீகத்தையும் திராவிடர்களிலிருந்து

பறித்துக் கொண்டு அதை தங்களுடையதாக்கிக்கொள்ள ஆரியர்கள் அரும்பெரும் பாடுகள் பட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்பது குறிப் பிடத்தக்கதாகும்.

## இந்தியா சுதந்திரத்துக்குப் பின்

இருபதாம் நூற்றாண்டில் (கி.பி. 1947) இந்தியா வெள்ளையர்கள் ஆட்சியிலிருந்து சுதந்திரம் அடைந்தது. அந்நாட்களிலும் முக்கியமான பொறுப்புகள் அனைத்தும் பிராமணர்களிடமே இருந்தது. இந்தியா வுக்கு ஓர் அரசியல் சட்டம் எழுதப்பட்ட போதிலும் அது முழு அளவில் மண்ணின் மைந்தர்களாகிய திராவிடர்களுடையதாக அமையவில்லை. இந்திய அரசியல் சட்டம் அமைப்பதற்கு Dr. அம்பேத்காருக்கு முக்கிய பொறுப்புகள் அளிக்கப்பட்டிருந்த போதிலும் அமைப்புகள் எல்லாமே ஜாதிக்கொள்கையின் பிடியில் இருந்த படியால் சுதந்திரமாக செயல்பட அன்னாருக்கு இயலவில்லை. வெள்ளையர்கள் நாட்டைவிட்டு வெளியெறும் போது இந்திய தேசம் ஆரியர்கள் கைகளிலேயே விட்டுச் செல்லப்பட்டது என்றே கூற வேண்டும்.

## தேர்தல்கள்

இந்தியா சுதந்திரமடைந்த பின் நாட்டில் சட்டசபைகளுக்கும் மக்களவைக்கும் தேர்தல்கள் நடத்தப்பட வேண்டியதிருப்பதால் ஆட்சி அமைப்பவர்களுக்கு மக்களை சந்திக்க வேண்டிய சூழல் ஏற்பட்டது. எனவே திராவிட மக்கள் படிப்படியாக தங்கள் உரிமைகளைக் குறித்து சிந்திக்கலாயினர்.

## மதத்தால் குழப்பங்கள்

திராவிட மக்கள் தங்கள் தேசீய உரிமைகளையும் அரசியல் உரிமைகளையும் குறித்து விழிப்புணர்வடைவது ஆரிய பிராமணர் களுக்கு பெரும் எரிச்சலை ஏற்படுத்தியது. எனவே திராவிட மக்களில் பெரும் பகுதியினரை 'இந்துமதம்' என்ற பெயரில் மேலும் மேலும் தங்களிடம் ஒன்று சேர்த்தார்கள். ஆனால் பிராமணீயத்தின் அடிஸ்

தானம் ஜாதிக்கொள்கை ஆகையால் இந்து மதம் என்ற போர்வைக்குள் அமைதி காக்க இயலவில்லை. இந்நிலையில் அனேக மதக்கலவரங்களும் குழப்பங்களும் ஏற்படத் தொடங்கியது. திராவிடர்கள் தங்களுக்காக அனேக இயக்கங்கள் ஆரம்பிக்க தொடங்கினார்கள். எனவே பிராமணர்களுக்கும் அவர்களை சார்ந்த இயக்கங்களுக்கும் திராவிட இயக்கங்களோடு எதிர்கொள்ள வேண்டியதாயிற்று.

## மாறுபட்ட அறிக்கைகள்

இந்துமதம் என்பது ஒரு மதமல்ல அது ஒரு வாழ்க்கை முறை என்று சிலர் கூறும் அதே வேளையில் இந்துமதம் இந்தியாவின் மதம் என்றும், இந்துக்கள் அல்லாதவர்கள் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என்றும், இந்தியாவை இந்து ராஸ்ட்ரம் ஆக்க வேண்டும் என்றும், இந்துக்கள் அல்லாதவர்களுக்கு இந்தியாவில் குடியுரிமை வழங்ககூடாது என்றும், இந்துத்துவா என்பது இந்திய மக்களின் ஆணிவேர் என்றும் பலதரப்பட்ட விவாதங்கள் இன்று நடந்து வருகிறது. இது பல குழப்பங்களையும் மதக் கலவரங்களையும் தூண்டி விட காரணமாகவும் அமைந்து வருகிறது. இந்நிலையில் இன்று உபயோகப்படுத்தப்படும் 'இந்து', 'இந்துமதம்', 'இந்துக்கள்' போன்ற வார்த்தைகளை பல தலைவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

## 'இந்து' நேருவின் விளக்கம்

'இந்து' என்ற வார்த்தையை பண்டிட் ஜவஹர்லால் நேரு தன் Discovery of India என்ற நூலில் கீழ்கண்டவாறு விளக்கியிருக்கிறார்கள்.

## 'இந்து' - ஒரு மதத்தை குறிப்பதல்ல

' 'இந்து' என்ற வார்த்தை நம் முற்கால இலக்கியங்களில் காணப்படுவதில்லை. ஒரு இந்திய நூலில் முதல் முதலாய் இவ்வார்த்தை காணப்படுவது கி.பி 8-ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட ஓர் நூலில் என்று அறிகிறேன். அங்கே 'இந்து' என்பது ஒரு ஜனம் என்ற கருத்தில் மட்டுமே உபயோகிக்கப்பட்டுள்ளது. ஒரு மதத்தை சுட்டிக் காட்டும் கருத்தே அங்கு எழவில்லை.'

சுராஷ்டிர மத நூலில்

' 'இந்து' என்ற வார்த்தை செண்ட்அவஸ்தி (சுராஷ்டிரமத நூல்) யிலும் முற்கால பாரசீக மொழியிலும் பயன்படுத்தப்பட்டிருப்பதால் அது அங்கே மிக பழமையான வார்த்தை என காணாலாம். பாரசீகத்திலும், மேற்கு ஆசியா, மத்திய ஆசியா, ஆகிய நாடுகளிலும் ஆயிரத்துக்கு மேற்பட்ட ஆண்டுகளுக்கு முன்பே இந்த வார்த்தை பயன்படுத்தப்பட்டிருந்தது.'

## சிந்து தேச மக்கள்

'அதாவது, முற்கால நூல்களில் இந்தியாவின் ஜனங்ளை சிந்து நதி தேசத்தின் மக்கள் என்று குறிப்பிடும் வகையில் அந்த வார்த்தை உபயோகிக்கப்பட்டுள்ளது. இன்டஸ் (Indus) என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் நதிக்கு முற்காலத்திலும் இன்றும் காணப்படும் பெயர் 'சிந்து' என்பதாகும். சிந்து என்னும் வார்த்தையிலிருந்தே 'ஹிந்து', 'ஹிந்துஸ்தானி', 'இந்தோஸ்', இந்தியா ஆகிய வார்த்தைகள் தோன்றியது என்பதற்கு சந்தேகமே இல்லை.'

## சீன யாத்திரிகன் குறிப்பிடும் - 'ஹிந்து தேசம்'

'கி.பி 7-ம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த சீன யாத்திரிகன் ஈட்சிங் தன் நூல்களில் மத்திய ஆசியாவில் உள்ள ஜனங்கள் இந்தியாவை "ஹிந்து தேசம்" என்று அழைப்பதாக குறிப்பிட்டுள்ளார். வேறுபொருளுடன் (ஒரு மதம் என்ற பொருளில்) இவ்வார்த்தையை இணைத்து உபயோகிப்பது சமீப காலங்களில் ஆகும்." இவ்வாறு நேரு தன் நூலில் விளக்கியுள்ளார்.

## 'இந்து தேசம்' விவிலியத்தில்

பெர்சிய நாட்டின் மந்திரியாய் இருந்த மொர்தெகாய் என்பவன் எழுதிய எஸ்தர் என்னும் நூலில் இந்தியாவை அந்நாட்களில் (கி.மு464) இந்து தேசம் என குறிப்பிட்டுள்ளான். அதாவது சிந்து நதியின் தேசம் என்று பொருள்.

## ‘சிந்து’ விலிருந்து ‘இந்து’

மேலே கூறப்பட்ட கருத்துக்களின் படி ஹிந்து என்ற வார்த்தை சிந்து என்ற நதியின் பெயரிலிருந்து உண்டாயிற்று என்று பார்க்கிறோம். சிந்து என்று உச்சரிக்க தெரியாத பெர்சியர்கள் ‘ஹிந்து’ என்று உச்சரித்ததால் ‘ஹிந்து’ என்ற வார்த்தை உண்டாயிற்று. அது ஒரு மதத்தின் பெயர் அல்ல. ஹிந்து தேசம் என்பதற்கு சிந்து நதியின் தேசம் என்பது பொருள். மட்டுமல்ல, ஹிந்து என்ற வார்த்தைக்கு ஒரு மதத்தின் பெயர் கொடுக்கப்பட்டது சமீப காலத்தில் அதாவது 1794-க்குப் பின் என்று பார்த்தோம்.

## ‘ஹிந்துக்கள்’

ஹிந்துக்கள் என்ற வார்த்தைக்கு ஹிந்து தேசத்தில் அதாவது, சிந்து நதியின் தேசத்தில் வசிக்கும் மக்கள் என்பதே பொருள். எனவே இன்று நம் தேசத்தில் வாழும் வைணவர், சைவர், பௌத்தர், ஜெயினர், சீக்கியர், கிறிஸ்தவர்கள் இஸ்லாமியர்கள் அனைவருமே இந்துக்கள் என்று கூறுவதே பொருத்தமாகும்.

## ‘இந்து மதம்’

‘இந்து மதம்’ என்று ஒரு மதம் இல்லாதிருந்தும் அது எப்படி ஒரு மதம் என்று இந்துத்துவ வாதிகளால் உருவாக்கப்பட்டது என்பதைக் குறித்து முன்னால் பார்த்தோம். அது இன்றும் ஒரு மதமாகவே கருதப்பட்டு வருகிறது என்பதே உண்மை.

## பத்திரிகைகளில் செய்திகள்

இன்று நம் பத்திரிகைகளில், இந்துக்களுக்கும் இஸ்லாமியருக்கும் தம்மில் சண்டை, சீக்கியருக்கும் இந்துக்களுக்கும் தம்மில் மதக்கலவரம், இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் சண்டை, இது போன்ற தலைப்புகளில் செய்திகள் வெளிவருகின்றன. இதிலிருந்து ‘இந்து மதம்’ ஒரு மதம் என்றே எடுத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது.

மேலும் 'இந்தியாவில் பெரும்பான்மையான இந்துக்களின் நல்லெண்ணத்தைப் பெற்று வாழ்வது தான் சிறுபான்மையினருக்கு உண்மையான பாதுகாப்பு என்று R.S.S. மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது' என்று செய்தித் தாள்களில் வெளிவந்த செய்தி நாடு முழுவதும் மிகுந்த சர்ச்சையை உருவாக்கியது.

## இந்து மதம் ஒரு மதமல்ல

இல்லாத இந்து மதத்தை இருப்பதாக உருவேற்றிய இந்துத்துவ வாதிகளே இந்நாட்களில் இந்துமதம் என்பது ஒரு மதம் அல்ல என்று பேசத் தொடங்கி விட்டார்கள். R.S.S. தலைவர் சுதர்சன் என்பவர் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கை 17-12-03 அன்று தினமலர் நாளிதழில் 'இந்து' மதத்தை குறிப்பது அல்ல'' என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது.

## செய்தி

"இந்து என்ற வார்த்தை எந்த ஒரு மதத்தையும் குறிப்பிடுவது அல்ல. இந்தியாவை தாயகமாக கருதும் அனைவரும் இந்துக்கள் தான்... இந்து என்ற வார்த்தை எந்த மதத்துடன் சம்மந்தப்பட்ட வார்த்தை அல்ல. எனவே, இந்தியாவில் வாழும் முஸ்லீம்கள் மற்றும் கிறிஸ்தவர்களை கூட இந்துக்களாக கருத முடியும். இந்து என்பது ஒரு வாழ்க்கை முறையை குறிப்பது என்று சுப்ரீம் கோர்ட் கூட ஒரு தீர்ப்பில் கூறியிருக்கிறது. அந்த விளக்கத்தில் R.S.S க்கு உடன்பாடு உண்டு" இவ்வாறு செய்தி வெளிவந்துள்ளது.

## இந்தியாவின் முன்னால் பிரதமரின் கூற்று

நமது தேசத்தில் முன்னால் பிரதமராய் இருந்த வாஜ்பாய் அவர்களும் இதே கருத்தை பல பத்திரிக்கைகள் வழியாக தெளிவு படுத்தி இருக்கிறார்கள். மேலும் அவர் இந்துத்துவா அல்லது இந்து மதம் என்பதில் கடவுள் கொள்கைக்கு இடமில்லை என்று தெளிவாகக் கூறியுள்ளார்.

## உச்ச நீதி மன்றம் தீர்ப்பு

இந்நிலையில் சமீபகாலத்தில் நமது உச்சநீதி மன்றம் 'இந்து மதம்' ஒரு மதமல்ல அது ஒரு வாழ்க்கை முறை மட்டுமே (Hinduism is not a religion. It is only a way of life) என்று சில வழக்குகளில் தீர்ப்பு கூறி இருப்பதையும் பார்க்கிறோம்.

## வியப்பூட்டும் நிலை

இந்த நிலை ஓர் விந்தையான நிலையாக காணப்படுகிறது. நம் நாட்டில் பல்லாயிரக்கணக்கான மக்கள் தங்களை இந்து மதத்தவர்கள் என்று கூறி செயல்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். பற்பல முறைகளில் வித்தியாசமான வழிபாடுகளை செய்கிறார்கள். அரசு அலுவலகங்களுக்கு விண்ணப்ப படிவங்களில் தங்கள் மதம் இந்து மதம் என்று எழுதப்பட்டு அவை அரசால் அங்கிகரிக்கப்படுகிறது. எல்லா வேலை வாய்ப்பு துறைகளிலும் அரசு ஊழியங்களிலும் தங்கள் மதம் எது என்று எழுப்பப்படும் கேள்விகளில் அதற்கு விடை இந்துக்கள் என குறிப்பிட வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது.

## வேறுபட்ட நிலைகள்

நமது உச்ச நீதிமன்றம் இந்து மதம் ஒரு மதமல்ல என்று கூறும் அதே வேளையில் அரசு அலுவலகங்கள் அனைத்தும் இந்து மதம் ஒரு மதம் என்று ஏற்றுக்கொள்கிறது. இது சிந்திக்கும் எவரையும் வியப் பூட்டும் ஓர் நிலை ஆகும். எனவே இந்த குழப்படிகள் அனைத்திற்கும் காரணம் என்ன என்பதை குறித்து ஆராய வேண்டியது மிகவும் அவசியம் ஆகும். அதுமட்டுமல்ல, இந்த குழப்ப நிலை நீடிக்காமல் தகுந்த நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டியது இந்திய அரசாங்கத்தின் கட்டாயமாகும்.

**அதிகாரம் 34**

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 9)

# இந்துத்துவ வாதிகளுக்கு கேள்விகள்

இந்தியாவில் இந்துத்துவா கொள்கையை நிலைநாட்டுவதற்காக ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் சங்கரமடத்துக்கு திராவிட சமயம் ஆசிரியரான Dr. M. தெய்வனாயகம் அவர்கள் 1994-ாம் ஆண்டு இது சம்மந்தமான 108 கேள்விகளை கேட்டு எழுதி அனுப்பியுள்ளார். ஆனால் அக்கேள்விகளுக்கு சங்கரமடத்திலிருந்து பதில் அனுப்பப்பட வில்லை. எனவே அந்த கேள்விகளை பொது மக்களின் கவனத்திற்காக 'சங்கர மடத்துக்கு 108 கேள்விகள்' என்ற தலைப்பில் ஒரு நூலாகவும் வெளியிட்டுள்ளார்கள். அதோடு சங்கரமடத்தோடு போராட வேண்டியது ஏன் என்ற மற்றொரு நூலும் வெளியிட்டிருக்கிறார். அந்நூல்கள் இந்துத்துவாவின் பல தன்மைகளை விளக்குகின்றன.

## பிரசுரிக்கப்பட்ட ரகசிய சுற்றறிக்கைகள்

அந்நூல்களில், வேறு பல பத்திரிக்கைகளில் (அதாவது விடுதலை ஞாயிறு மலர் 26-3-1995, தமிழக பறயர் குரல் ஏப்ரல் 1995,நமது உரிமை முரசு 1995, திராவிட சமயம் July 1995) வெளிவந்த R.S.S. மற்றும்

பிராமண சங்கம் ஆகிய இயக்கங்களின் இரகசிய சுற்றறிக்கைகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவைகள் வாசகர்களுக்காக இந்நூலின் இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

## இந்துத்துவா என்பது மதமல்ல

பின்னால் இணைக்கப்பட்டுள்ள இரகசிய சுற்றறிக்களையும் அவைக்கு அடிப்படையான மனுச்சட்டத்தையும் பார்க்கும் போது இந்துத்துவா என்ற ஜாதிக் கொள்கை ஒரு மதம் அல்ல என்பது தெளிவாக புலன்படுகிறது. கடவுள் கொள்கைக்கும் இந்துத்துவா என்ற பிராமணீயத்துக்கும் எந்த தொடர்பும் இல்லை என்பது தெளிவாய் காண முடிகிறது. எனவே தான் இந்துத்துவ வாதிகள் இந்துமதம் ஒரு மதம் அல்ல என்று இப்போது கூறி வருகிறார்கள்.

## சமூக விரோத செயல்கள்

இந்துத்துவா என்பது ஒரு மதம் அல்ல என்று இருந்த போதிலும் அதன் கொள்கைகளும், செயல்பாடுகளும் மனித நேயத்திற்கு மாறானது என்பது வருந்தத்தக்கதாகும். சுற்றறிக்கைகளில் தாழ்த்தப் பட்டோர், பழங்குடியினர், அம்பேத்கார் இயக்கத்தினர், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், சமணர்கள், புத்தர்கள் போன்ற மண்ணின் மைந்தர்களான திராவிடர்களை படிப்படியாக ஒழித்துக் கட்ட இந்துத்துவா என்ற பிராமணீயக் கொள்கை எடுத்துக் கொள்ளும் செயல்பாடுகள் வியக்கத் தக்கவையாகும். எடுத்துக்காட்டாக அந்த இரகசிய சுற்றறிக்கைகளில் தொண்டர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள கட்டளைகளின் சில அம்சங்களாவன :-

- ★ சுடுகருவிகள், வெடிமருந்துகள் ஆகியவை திரட்டுவது.
- ★ தாழ்த்தப்பட்டவர்களுக்கு போலி மருந்துகளை தரும்படி செய்வது.
- ★ கள், சாராயம், சூதாட்டம், லாட்டறி முதலியவை தூண்டுவது.
- ★ இந்து அல்லாதோர் கோவில்களை சூறையாடுவது.
- ★ கீழ்சாதி பெண்களை பரத்தை தொழிலில் (விபச்சாரம்) ஈடுபடுத்துவது.

★ பிள்ளைகளுக்கு நஞ்சு கலந்த தின் பண்டங்கள் கொடுப்பது.

★ பள்ளிகளில் இந்து நெறிமுறைகளுக்கேற்ப வரலாற்றை கற்பிப்பது.

★ வேறு வழிபாட்டு தலங்களின் அருகில் படிமங்களை புதைத்து வைப்பது.

★ கீழ் சாதி பெண்களுக்கு தங்கள் ஆண் உறுப்பைக் காட்டவும் அவர்களை முத்தமிடவும் செய்வது.

★ மூட நம்பிக்கையை பரப்புவது.

★ பெண்களை கூட்டமாக சூரத் மாதிரியை பின்பற்றி கற்பழிப்பது. சாதிச் சண்டையை தூண்டுவது.

★ இந்து எதிர்ப்பாளர்களையும், பிராமண எதிர்ப்பாளர்களையும் கொலை செய்வது.

★ கொலை செய்த பிணத்தை துப்புக்கிடைக்காத வகையில் அப்புறப்படுத்துவது.

★ ஜெயின, பௌத்த, சீக்கியருக்கெதிராக தாக்குதல்கள் நடத்துவது.

★ உட்சண்டையை மூட்டி விடுவது. கீழ்ச்சாதியினரை ஒருவருக்கொருவர் சண்டையிட்டு மாண்டு அழியச் செய்வது.

★ பொய் பிரச்சாரம் செய்து மத உணர்ச்சியை தூண்டி சண்டை உருவாக்குவது.

இக்கட்டளைகள் அனைத்தும் மனுச்சட்டத்தின் தன்மைகளுக்கு ஒத்திருப்பவைகளாக காணப்படுகிறது. *(பக்கம் 166 பார்க்க)*

## பிராமணீயத்தை பாதுகாக்க

இணைக்கப்பட்டுள்ள பிராமண சமாஜத்தின் இரகசிய கடிதத்தின் 12, 13 ஆவது குறிப்புகள் செடியூல்டு வகுப்பினரோடு விரோதத்தையும் சண்டையையும் உருவாக்க வேண்டும். அப்போது தான் பிராமணரின் பிள்ளைகள் தங்கள் ஆதிக்கத்தை அரசாங்க ஆட்சியமைப்பிலும் அரசியலிலும் கட்டிக்காக்க முடியும். பிராமணீயத்தை பாதுகாக்க

பிராமணப்பெண்கள் தங்களை அற்பணித்து பிராமணீயத்தை பாதுகாப்பது மிகவும் இன்றியமையாதது." இவைகள் சமூக விரோத செயல்களை தூண்டி விடுவதாகும்.

### சுற்றறிக்கை கடைபிடித்தல்

கடந்த இந்துத்துவா ஆட்சி காலத்தில் மேலே கூறப்பட்ட R.S.S. மற்றும் பிராமண சமாஜ் அமைப்புகளின் இரகசிய சுற்றறிக்கைகளில் கட்டளை இடப்பட்டவை அனைத்தும் தேசத்தின் நாலா பாகங்களிலும் நிறைவேற்றப்பட்டுக் கொண்டே இருந்தது என காணப்படுகிறது.

ஆஸ்ட்ரேலியா மிஷனறியான கிரகாம் ஸ்டெயின்ஸ் குடும்பத்தினரை உயிருடன் எரித்தது, கிறிஸ்தவ கன்னியாஸ்திரிகளை கற்பழித்தது, கிறிஸ்தவ பாதிரிமாரை சித்திரவதை செய்தது, கிறிஸ்தவ ஆலயங்களை சுட்டெரித்தது, ஆலயங்களில் புகுந்து வெறிச் செயல்கள் நடத்தியது, தலித்துகள் அம்பேத்கார் இயக்கத்தினருக்கெதிராய் தாக்குதல்கள் நடத்தியது, முகமதியருக்கெதிராக கலவரங்கள் நடத்தியது, குஜராத்தில் முஸ்லீம்களை கொலை செய்து முஸ்லீம் பெண்களை கதறக்கதற கற்பழித்தது இவை அனைத்தும் இரகசிய சுற்றறிக்கையின் கட்டளைகளுக்கு உட்பட்டவைகளே ஆகும்.

அதிகாரம் 35

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 10)

# இந்துத்துவாவுக்கு சமீபகால எதிர்ப்புகள்

இந்நாட்களில் திராவிட மக்களில் பெரும்பாலானோர் தங்களின் மேன்மை நிறைந்த ஆதி நிலைகளையும் அன்னியர்களான ஆரியர் களால் தங்களுக்கு ஏற்பட்ட சூழ்ச்சிகளையும் வருணாசிரம தர்மம் என்ற ஜாதிக் கொள்கை தங்கள் மேல் திணிக்கப்பட்ட விதங்களையும் தங்கள் மத கொள்கைகளுக்கு ஆரியர்களால் ஏற்படுத்தப்பட்ட சீர்கேடுகளையும் குறித்து உணர தொடங்கி விட்டார்கள். Dr. மு. தெய்வநாயகம் அவர்களை போன்ற திராவிட ஆராய்ச்சியாளர் கள் தங்கள் ஆராய்ச்சிகளின் அடிப்படையில் இந்தியாவில் முதலாம் நூற்றாண்டுக்குப் பின் தோன்றிய சைவ, வைணவ மதங்கள் தோமாவால் கொண்டு வரப்பட்ட ஆதி இந்திய கிறிஸ்தவம் என்று நிரூபித்திருக்கிறார்கள். ஜனங்கள் வருணாசிரம தர்மம் என்ற இந்துத்துவாவின் ஜாதிக் கோட்பாட்டை எதிர்த்து நிற்க தொடங்கி இருக்கிறார்கள்.

### சங்கர மடத்துக்கு சைவர்களின் எதிர்ப்பு

வருணாசிரம கொள்கையை நிலை நாட்டி ஆரியர்களின் ஆதிக் கத்தை நிரந்தரமாக இந்தியாவில் ஸ்தாபிக்க வேண்டும் என்பதற்காக

இந்தியாவில் U.P. ஜோஷி மடம் 2. குஜராத்தில் துவாரகை 3. ஒரிசாவில் பூரி 4. கன்னடத்தில் சிறிங்கேரி 5. தமிழ்நாட்டில் காஞ்சி ஆகிய ஐந்து இடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சங்கர மடங்களுக்கு சைவ, வைணவ மதங்களை சேர்ந்த திராவிடர்கள் தங்கள் எதிர்ப்புகளை தெரிவிக்க தொடங்கி இருக்கிறார்கள். ஆதி சங்கரனுடைய அத்வைத கொள்கையையும் மற்றும் நாத்திக கொள்கைகளையும் எதிர்த்து தங்கள் மும்மூர்த்தி கோட்பாட்டையும் தங்கள் வழிபாடுகளையும் நிலை நாட்டுவதற்காக போராட தொடங்கி உள்ளார்கள். சமீ பகால செய்தி தாள்கள் இதை தெளிவாக காண்பிக்கின்றன.

## ஓர்சில எடுத்துக்காட்டுகள்

### நெல்லையப்பர் கோயில் கும்பாபிஷேகம்

காஞ்சி சங்கராச்சாரியர் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் திருப்பணி செய்வதை ஆதீன சுவாமிகள் புறக்கணித்தனர்.

இந்த செய்தி 07-06-02 தினகரன் நாளிதழில் கீழ்கண்டவாறு வெளி வந்தது.

### செய்தி

"நெல்லையப்பர் கோயிலில் திருப்பணி செய்வதற்கு காஞ்சி சங்கராச்சாரியருக்கு உரிமை கிடையாது. அவர் தொடங்கி வைத்ததால் தான் ஆதீன சுவாமிகள் யாரும் விழாவில் கலந்து கொள்ளாமல் புறக்கணித்து விட்டனர்".

### சந்நியாசி

"சந்நியாசிகள் இந்த காரியத்தை செய்யக் கூடாது. சங்கராச்சாரியார் ஒரு சந்நியாசி. அவர் தாலியை எடுத்துக் கொடுக்கலாம். ஆனால், தாலி கட்ட கூடாது. சங்கராச்சாரியார் சிவன் கோயில்களில் தனது ஆதிக்கத்தை செலுத்தி வருகிறார். அவர் வெளியேற வேண்டும்."

### புறக்கணிப்பு

"அவர் திருப்பணியை தொடங்கி வைப்பார் என்று அழைப்

பிதழில் போட்டிருந்ததால் தான் தருமை ஆதினம், சண்முக தேசிகர், மதுரை ஆதீனம் , திருவாடுத்துறை ஆதீனம், சிவபிரகாச தேசிகர், குன்னகுடி பொன்னம்பல தேசிகர், திருபானந்தாள் தம்பிரான் சுவாமிகள் ஆகியோர் கலந்து கொள்ளாமல் புறக்கணித்தனர். சுலோகம் தெரிந்தவர் எல்லாம் பூஜை செய்து விட முடியாது....."

## குமுதம் றிப்போட்டர் செய்தி

"கிறிஸ்தவர் முஸ்லீம் போல சங்கராச்சாரியரும் அன்னியரே" என்ற தலைப்பில் வெளிவந்த செய்தியாவது:-

'இது ஒரு சிவாலயம். சைவ சமய கோயில்கள் 28 சைவ ஆகமங்களில் ஒன்றான "காமிகா" ஆகமப்படியே கோயிலின் வடிவம், வழிபாடு எல்லாமே உள்ளன. ஆனால் ஆகமமே இல்லை என்பது ஆதி சங்கரரின் வாக்கு. ஆகமங்கள் நிராகரித்தவர் அவர். சைவ சமயத்தின் உயிரான ஆகமத்தையே இல்லை என்று சொல்லும் ஆதிசங்கரரின் வழி தோன்றல் தான் காஞ்சி சங்கராச்சாரியார். இப்படி ஆகமத்தை நிராகரிப்பவர்கள் அறியாதவர்கள். ஆகம முறைப்படி நடத்தப்பட்ட வேண்டிய நெல்லையப்பர் கோயில் திருப்பணிக்கு தலைமை தாங்குவது எந்த வகையில் நியாயம் ? ஆகம விரோதம் அல்லவா ?'

## பசு, பதி, பாசம்

'இன்னொன்று பசு, பதி, பாசம் ஆகிய முப்பொருள்கள் உண்டென்பது சைவம். ஆனால் காஞ்சி சங்கராச்சாரியாரோ ஓரே பொருள் தான் என்று சொல்லும் ஏகான்மாவாதி. இப்படி தத்துவ ரீதியாய் மாறுபட்டவர்களை பிற சமயத்தை சேர்ந்தவர் என்றே சிவஞான போதம் கூறுகிறது. எனவே கிறிஸ்தவர்கள் முஸ்லீம்கள் போல் அவரும் அன்னியரே ......' .

## நீதிமன்றங்களில் வழக்கு

மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையில் திருநெல்வேலி கோடைகால விடுமுறை நீதி மன்றத்தில் 343 ஆப் 2002 நம்பர் ஆக ஓர்

வழக்கு பதிவு செய்யப்பட்டது. இது போன்ற வேறு சம்பவங்களும் வழக்குகளும் நாட்டில் பல பகுதிகளில் நடந்து வருகின்றன.

## இந்துத்துவா ஆட்சி - மக்கள் புறக்கணிப்பு

2004-ல் நடந்து முடிந்த 14 -ாவது மக்களவைத் தேர்தல் முந்தைய தேர்தல்களை விட சற்று வித்தியாசமாய் காணப்பட்டது.

B.J.P.-யின் இந்துத்துவா அணுகுமுறையை மக்கள் விரும்பவில்லை. இதற்கு காரணம் இந்துத்துவா கொள்கைகளுக்கு எதிராக திராவிட மக்களின் விழிப்புணர்வே ஆகும். எனவே மக்கள் இந்துத்துவா ஆட்சியை புறக்கணித்து விட்டார்கள். அதோடு தேவனே இந்துத்துவ ஆட்சியை கவிழ்த்துப் போட்டார் என்று மக்கள் நம்புகிறார்கள்.

## தோல்விக்கான காரணம் இந்துத்துவா

நடந்து முடிந்த 2004 மக்களவை தேர்தலில் பா.ஜ தோல்விக்கு மோடி (குஜராத் முதலமைச்சர்) கடைபிடித்த இந்துத்துவா கொள்கையே காரணம் என்று வெளிவந்த செய்தியாவது :-

"கோத்ரா சம்பவத்திற்கு பின்னர் குஜராத் முழுவதும் முஸ்லீம்களுக்கு எதிராக முதல்வர் நரேந்திர மோடி வன்முறையை கட்டவிழ்த்து விட்டார். முஸ்லீம் பெண்கள் நடுரோட்டில் கதறக் கதற கற்பழிக்கப்பட்டனர். கூட்டம் கூட்டமாக உயிரோடு கொளுத்தப்பட்டனர். இதற்கு உலகம் முழுவதும் கண்டனம் தெரிவிக்கப்பட்டது."

## எதிர்பாராத வெற்றி

"ஆனால் யாருமே எதிர்பாராத வகையில் முதல்வர் மோடி இரண்டாவது முறையாக ஆட்சியை பிடித்தார். இதை அடுத்து பா.ஜ தலைவர்கள் நரேந்திர மோடியை தலையில் தூக்கி வைத்து கொண்டாடினர். நாடு முழுவதும் மோடியின் "இந்துத்துவா" கொள்கையை கடை பிடிக்க முடிவு செய்தனர்."

‘அந்த முடிவு பா. ஜ வுக்கு எதிர் மறையாக அமைந்து விட்டது. மக்களவை தேர்தல் பிரச்சாரத்தின் போது குஜராத் கலவர காட்சிகளை காங்கிரஸ் உள்ளிட்ட மதசார்பற்ற கட்சிகள் நாடு முழுவதும் ஒளி பரப்பினர். அந்த கொடூர காட்சிகளை பார்த்த முஸ்லீம்களும், பொது மக்களும் பா.ஜ வுக்கு எதிராக வாக்கு எந்திரத்தை அழுத்தி விட்டனர். இதன் காரணமாகத்தான் குஜராத் மட்டுமின்றி நாடு முழுவதும் பா.ஜ தோல்வியடைந்திருக்கிறது”. இந்த செய்தியானது பெருவாரியான மக்களின் எண்ணத்தையே எடுத்துக்காட்டியுள்ளது.

## திரிணாமுல் காங்கிரஸ் எதிர்ப்பு

“இந்தியாவின் உண்மையான வரலாற்றை எழுதுகிறோம் என்று சொல்லி திராவிட இனமக்களின் நாகரீகத்தை ஆரிய இன நாகரீகம் போல் காட்டும் மோசடியை பாரதீய ஜனதா அரசு செய்ததாலும், மோகஞ்சதாரோ, ஹரப்பா போன்ற திராவிட நாகரீகங்களையும் ஆரிய நாகரீகம் தான் என்று வரலாற்றுப் பாடங்களில் விஷத்தை திணிக்க தொடங்கியதாலும், ஜோதிடம், நாள் பார்த்தல் , குறி செல்லுதல் போன்ற மூட நம்பிக்கைகளை அறிவியல் பூர்வமானது என்று போலித் தனமாக நிருபிக்க முயன்றதோடு அதை பாடத்திட்டங்களிலும் புகுத்தி மொத்தத்தில் கல்வியின் தரத்தைக் குறைக்க முயற்சி செய்ததாலும், காவிமயமாக்கும் முயற்சிகளில் தீவிரமாக இறங்கியதாலும்... பாரதீய ஜனதாவின் இந்துத்துவா கொள்கைக்கு மம்தா பானர்ஜியின் தலைமை யிலான திரிணாமுல் காங்கிரஸ் பலத்த எதிர்ப்பு தெரிவித்துள்ளது” என்றும் செய்தி வெளிவந்துள்ளது. திராவிடர்கள் உண்மைகளை உணரத்தொடங்கிவிட்டார்கள் என்று இங்கே காண்கிறோம்.

## இந்துத்துவாவுக்கு எதிராக தி.மு.க. மாநாட்டில் தீர்மானம்

*22-08-2004* அன்று சேலத்தில் கூடிய தி.மு.க. மாநாட்டில் பா.ஜ.க. அரசின் இந்துத்துவா கொள்கையை எதிர்ப்பது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்ட செய்திகளும் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளது.

## இந்துத்துவா எதிர்ப்பு மாநாடு

கரூரில் இந்துத்துவா எதிர்ப்பு மாநாடு நடத்தப்பட்ட செய்தி திராவிட சமயம் பத்திரிகையில் வெளிவந்துள்ளது. அதன் விபரமாவது.

## தமிழ்மொழியில் குடமுழுக்கு

2002 ஆம் ஆண்டு கரூரில் உள்ள மணி முத்தீசுரர் கோயிலில் வழக்கறிஞர் ராசேந்திரன் முதலியோரின் முயற்சியால் தமிழ் வழியில் குடமுழுக்கு நடைபெற்றது.

## பிராமணர்களின் வழக்கு

அதையடுத்து கோயம்புத்தூரை சேர்ந்த இரண்டு பிராமணர்கள் கரூர் உரிமையியல் நீதி மன்றத்தில் தமிழ் வழியில் குடமுழுக்குகள் நடத்த தமிழ்நாட்டில் தடைகோரி ஒரு வழக்கு பதிவு செய்தனர்.

## வழக்கு வாபஸ்

அவ்வழக்கை எதிர்த்து வழக்கறிஞர் ராசேந்திரன் எதிர்மனுதாரராகி வழக்காடினார். அவர் நீதிமன்றத்தில் தாக்கல் செய்த எதிர்மனுவில் கூறப்பட்ட ஆழமான தமிழ்வழிபாட்டின் உரிமைக்குரலைக் கண்டு பிராமணர்கள் அவ்வழக்கை வாபஸ் பெற்றுக்கொண்டார்கள்.

## தேசதுரோகிகள் என்ற குற்றச்சாட்டு

இந்நிலையில் கரூர் வந்த பி.ஜே.பி. மாநில செயலாளர் H. ராஜா அவர்கள் தமிழ் ஆர்வலர்கள் தேசத்துரோகிகள் என்று பேட்டி அளித்தார். அதை தொடர்ந்து கரூரில் இந்துத்துவா எதிர்ப்பு மாநாடு நடத்தப்பட்டது.

## எதிர்ப்பு மாநாடு

மாநாட்டில் கலந்து கொண்ட திராவிட ஆன்மீய இயக்கத்தின் தலைவர் டாக்டர். மு. தெய்வனாயகம் இந்துத்துவாவின் பிடியிலிருந்து இந்து மதத்தை விடுவிப்பது எவ்வாறு என்பதைப்பற்றி தெளிவாய் விளக்கினார்.

## மாவட்டங்கள்தோறும் இந்துத்துவா எதிர்ப்பு

எல்லா மாவட்ட தலைநகரங்களிலும் இதுபோன்ற இந்துத்துவா எதிர்பபு மாநாடுகளை நடத்த வேண்டுமென்று கூட்டத்தில் கலந்துகொண்ட எல்லோரும் ஒரே குரலில் அறிவித்திருப்பதாகவும் அச்செய்தியில் கூறப்பட்டுள்ளது.

## இந்துத்துவாவிலிருந்து விடுதலை பெற்றால் ?

ஆரியர்களின் இந்துத்துவாவிலிருந்து திராவிடர்கள் விடுதலை பெறும்போது ஏற்படும் நிலைகளாவன :-

1. இந்திய மக்கள் ஜாதி ஏற்றத்தாழ்வு இல்லாமல் ஒன்றுபட்ட சகோதர வாழ்க்கை வாழ வழி திறக்கும்.
2. இந்து மதம் என்ற போலிப்போர்வை கிழிக்கப்படும்.
3. அப்போது அதின் உள்ளே அடக்கப்பட்டிருக்கும் சைவ, வைணவ மதங்கள் வெளிக்கொண்டு வரப்படும்.
4. சைவ வைணவ மதங்கள் தோமாவின் ஆதி இந்திய கிறிஸ்தவத்தால் ஏற்பட்டவை என்ற உண்மை வெளியாகும்.
5. அம்மதங்களின் இலக்கியங்களில் காணப்படும் கிறிஸ்தவ கொள்கைகள் வெளியரங்கமாக்கப்படும்.
6. அவ்விலக்கியங்களில் புகுத்தப்பட்ட கறைகள் மாசுகள் உட் சொருகல்கள் அனைத்தும் அகற்றப்பட்டு தூய்மையாக்கப்படும்.
7. அப்போது விவிலியத்தில் கூறப்படும் உண்மைகளை சைவ வைணவ மதங்களும் ஏற்றுக் கொண்டுள்ளது என்னும் உண்மையை எல்லோரும் கண்டு கொள்வார்கள்.
8. இந்தியாவில் பெரும்பான்மையான மக்கள் தோமா வழிவந்த கிறிஸ்தவர்கள் என்ற உண்மை வெளியாகும்.

**அதிகாரம் 36**

# ஆரியர்களின் ஜாதிக்கொள்கை

(தொடர் - 12)

## புதுயுக இயக்கம்
**(New Age Movement)**

பிசாசுகளின் உபதேசங்களுக்கு செவி கொடுத்து விசுவாசத்தை விட்டு விலகிப் போவார்கள் என்ற வேத வசனத்தின்படி இந்நாட்களில் செயல்பட்டு வரும் இயக்கமே புதுயுக இயக்கம் (New Age Movement) என்பதாகும். இதை இந்துத்துவா என்ற ஆரியர்களின் இனவெறி கொள்கையின் விரிவாக்கம் என்றே கூறலாம். NAM (New Age Movement) என்பது உலகில் வேகமாக பரவிக் கொண்டிருக்கும் ஓர் மதமாக கூறப்படுகிறது. இதற்கு Cosmic Humanism, New Globalism, Aquarius, The New World order, போன்ற பல பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

### பல பயிற்சிகள்

இதற்கு பல வழிகளில் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. அவையாவன Holistic Education Meditational exercises like T.M., Zen and yoga martial arts such as T' aichi; Alternative medicines and therapies like Acupressure, Reiki & Pranic Healing, the current fascination with UFOS or unidentified flying objects : Near Death Experiences or NDES; the so called 'mind sciences' and hypnosis; Health Foods; Ecology (Protection of the en-

vironment and animal rights) Disarmament campaigns; positive thinking, psycho-training and stress reduction courses for leaders in management and industry etc.

## போதனைகள்

இது மேற்கத்திய நாடுகளை மட்டுமல்ல இந்தியாவில் நம் சபைகளையும் பாதிப்பதாக காணப்படுகிறது. முறையான உணவு உட்கொள்ளும் பழக்கம், ஓய்வு, உடல்தகுதி, சமாதானம், சகோதரத்துவம், எல்லா சிருஷ்டிகளுக்கும் மரியாதை கொடுப்பது போன்ற போதனைகள் ஆவிக்குரிய நிலைகளில் இருப்பது போல தென்பட்ட போதிலும் அவைகள் தீய உட்கருத்துக்கள் கொண்டவை களாய் முடிவில் செயலாற்றப்படுகிறது.

## குழந்தைகளை ஈர்ப்பது

குழந்தைகள் புதுயுக இயக்கத்தில் அதிகமாக ஈர்க்கப்படுகிறார்கள். குறிப்பாக திரைப்படங்கள், இலக்கியம், இசையோடு கூடிய விளையாட்டுகள், கண்கட்டு வித்தைகாரர்கள் செய்வது போன்ற சில செயல்பாடுகள் போன்றவை சிறுவர்களுக்கு உற்சாகம் ஊட்டுகிறது.

## அமைதியான தோற்றம்

ஒரு சமயம் இன்னொரு சமயத்தை விட சிறந்தது அல்ல. எம்மதமும் சம்மதம் என்ற சிந்தை கிறிஸ்தவ சபைக்குள்ளும் உருவாக்கப்படுகிறது. கிறிஸ்துவின் நற்செய்திகள் பிறமத உபதேசங்க ளோடு ஒப்பிட்டு நாளடைவில் எல்லாமே ஒன்று தான் என்ற கருத்து எழும்பப் பண்ணுவதே இதன் நோக்கம்.

## புதுயுக இயக்கம் ஆரம்பம்

புதுயுக இயக்கத்தின் ஆரம்பம் *1875*-ல் Theosophical society-யின் ஸ்தாபகரான ஃப்ளெவெஸ்கி (Blavasky) யினால் ஏற்பட்டது எனலாம். புதுயுக இயக்கத்தின் குறிக்கோள் உலக ஆதிக்கம் நிறுவுவது ஆகும். உலக அரசாங்கம் (World Government), உலக மதம் (World Religion)

இவையே புதுயுகத்தாரின் இலட்சியம். இவைகளுக்காக அவர்கள் ஒரு உலகப் பெரும் போதகரை (World Teacher) எதிர்பார்க்கிறார்கள். அதோடு உலக சமாதானத்தையும் அமைதியையும் எதிர்நோக்கு கிறார்கள்.

### புதுயுக இயக்கத்தின் தன்மைகள்

1. ஆரியர்களின் (வெள்ளையர்களின்) ஆதிக்கம் - ஜாதிக்கொள்கை.
2. புதுயுக இயக்கத்தை ஆதரிக்காதவர்கள் அகற்றப்படுதல்.
3. ஜனத்தொகை மட்டுபடுத்தப்படுதல்.
4. லூசிபருக்கு அர்ப்பணம் செய்தல். வேதபுத்தகமும்,வேத வசனங்களும் இதற்காக தவறாய் பயன்படுத்தப்படுதல்.

### ஏகான்மவாதம் (Monism)

இவர்களுடைய தத்துவ கொள்கைகளில் ஒன்று ஏகான்மவாதம் (Monism) என்பதாகும். அதாவது எல்லாமே ஒன்று; இரண்டல்ல, என்பதாகும். இது ஆதி சங்கரரரின் அகம் பிரம்மாஸ்மி என்ற கொள்கை ஆகும். எல்லாமே ஒன்று; ஒன்று தான் எல்லாம். எல்லாமே கடவுள்தான்; எல்லா பொருளும் கடவுளே. எல்லா மனிதரும் தேவர்களே. நானே கடவுள்.

### பிறவிச்சுழற்சி

அவர்களின் மற்றுமோர் கொள்கை பிறவிச் சுழற்சிக் கொள்கை ஆகும். மனிதனின் (உயிர்) ஜீவான்மா அனேக (மறு)பிறவிகளுக்குப் பின் தூய்மை அடைந்து தன்னை உணர்ந்து பரமாத்மாவை அல்லது பிரம்மத்தை அடைந்து விடுகிறது.

புதுயுக இயக்கத்தார் கடவுளை ஓர் ஆள் தத்துவமாக கொள்வதில்லை. கடவுள் ஆள் தத்துவமில்லாத ஒரு ஆற்றல் (force). அவர்கள் மனிதனே கடவுள் என்றும், மனிதன் கடவுளை தனது ரூபத்தின்படி உண்டாக்கி னான் என்றும் கூறுகிறார்கள்.

# புதுயுக இயக்கம் கிறிஸ்தவ பார்வையில்

கிறிஸ்தவர்கள் புதுயுகத்தாரின் உலக அரசாங்கம், உலக சமயம் ஆகியவை அந்திக் கிறிஸ்துவின் வருகைக்கு அடையாளமாக கருதுகிறார்கள். வெளி. 13:4-ல் வலு சர்ப்பத்தை வணங்குவதைக் குறித்து எழுதப்பட்டிருக்கிறது. சாத்தானானவன் புதுயுக இயக்கத்தினரை வஞ்சித்துக் கொண்டிருக்கிறான்.

## சாத்தானின் வஞ்சனை

சாத்தான் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமானவன். அவன் தன் கைவரிசையை ஏதேன் தோட்டத்தில் காண்பித்தான். அதையே இன்றும் செயல்படுத்திக் கொண்டிருக்கிறான். பொய்யான அவன் வார்த்தைகளை ஆதி. 3 : 4, 5 வசனங்களில் பார்க்கிறோம். அதில் நான்கு அம்சங்கள் அடங்கியுள்ளன.

### 1. "நீங்கள் சாகவே சாவதில்லை"

இது பிறவிச் சுழற்சி கொள்கையை ஊக்குவிக்கிறது. உயிர் அழியாதது. மரணமுமில்லை, கடவுளிடம் கணக்கு ஒப்புவிக்க வேண்டுவதுமில்லை. இந்த போதனை மனிதனுக்கு நியாயத்தீர்ப்பு இல்லை என்ற நிலைக்கு கொண்டு செல்கிறது.

### 2. "உங்கள் கண்கள் திறக்கப்படும்"

இதுவே புதுயுக இயக்கத்தாரின் ஞானோதயம் (Enlightenment) நீ உன் தத்துவத்தை (வல்லமையை) அல்லது ஆற்றலை அறிந்து கொள்வாய். தன்னை அறிந்து கொள்வதே இரட்சிப்பு (விடுதலை). நாம் அடைய வேண்டிய ஆற்றல் நம்மிலேயே அடங்கி உள்ளது. நம்மை இரட்சிக்க மற்றொரு கடவுள் தேவை இல்லை. அந்த ஆற்றல் நம்மிடமே உள்ளது. ஆனால் அதை அறிந்து கொள்ள வேண்டும்.

### 3. "தேவர்களைப் போல இருப்பீர்கள்"

உனக்கும் கடவுளுக்கும் வித்தியாசம் இல்லை. உனக்கு வேறொரு கடவுள் தேவை இல்லை. கடவுள் உனக்குள்ளேயே இருக்கிறார். நீயே கடவுள். நீ செய்யும் ஒரே பாவம் என்னவென்றால் நீயே கடவுள் என்ற உண்மையை அறிந்து கொள்ளாத அறியாமையேயாகும்.

### 4. "நீங்கள் நன்மை தீமை அறிவீர்கள்"

நன்மை தீமை என்பவை இரண்டு தன்மைகள் என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். ஆனால் புதுயுக இயக்கத்தவருக்கு நன்மை தீமை என்பது ஒன்றுதான். அதாவது ஒரே தன்மையை இரு கோணங்களிலிருந்து பார்க்கும் இரு பார்வைகள் என்று எடுத்துக் கொள்கிறார்கள். ஒருவனுக்கு நன்மையாக தெரிவது மற்றொருவனுக்கு தீமையாகத் தெரியும். கடவுள் தனித்தன்மை இல்லாதவராகையால் அவர் நன்மையும் தீமையும் இல்லாதவர் ஆகும். இதிலிருந்து புதுயுக இயக்கத்தாருக்கு சன்மார்க்க நெறியென்று ஒன்று ஏற்படுத்திக் கொள்ள முடியாது என்று வெளிப்படுகிறது.

புதுயுக இயக்கத்தின் பின்னால் செயல்படுவது சாத்தானே அல்லாமல் வேறல்ல. திருச்சபைக்கெதிரான சாத்தானின் செயல்பாடு களை நாம் ஆதி நாட்களிலிருந்தே பார்க்கிறோம்.

### 1. சாத்தான் ஐரோப்பிய கிறிஸ்தவத்தில்

கி.பி. முதலாம் நூற்றாண்டில் கிறிஸ்தவம் பலஸ்தீனாவிலிருந்து மேற்கிலும் கிழக்கிலும் கொண்டு செல்லப்பட்டது. பரிசுத்த பவுல், பேதுரு ஆகியோரால் மேற்கில் ஐரோப்பா நாடுகளுக்கு கொண்டு செல்லப்பட்ட கிறிஸ்தவம் சாத்தானால் ஏற்படுத்தப்பட்ட 'பாபிலோனிய இரகசிய'த்தால் கறைபடுத்தப்பட்டு விக்கிரக வணக்கங்களுக்கும் பலவித சடங்காசாரங்களுக்கும் உள்ளாகி சீரழிக்கப்பட்டது.

### 2. சாத்தான் ஆதி இந்திய கிறிஸ்தவத்தில்

அதேவிதமாய் பரி. தோமாவால் இந்தியாவுக்கு கொண்டு

வரப்பட்ட ஆதி இந்திய கிறிஸ்தவம் சாத்தானால் ஏற்படுத்தப்பட்ட ஆரியர்களின் ஜாதிக் கொள்கை என்ற இந்துத்துவாவில் சிக்கிவிட்டது. தோமாவின் கடவுள் கொள்கைகளை ஏற்றுக் கொண்ட திராவிட மக்களால் ஏற்படுத்தப்பட்ட சைவ வைணவ மதங்கள் இந்து மதம் என்ற போலிப்போர்வைக்குள் அடக்கப்பட்டு கிறிஸ்தவக் கொள்கைகள் புதைக்கப்பட்டுவிட்டது. விக்கிரகங்களும் பலவிதவழிபாடுகளும் சடங்காசாரங்களும் புகுத்தப்பட்டது. அதினிமித்தம் இந்தியாவில் சைவம் வைணவம் என்ற ஆதி இந்திய கிறிஸ்தவம் பலவித சீர் கேடுகளுக்குள்ளாயிற்று.

ஆனால் தேவன் இந்நாட்களில் தமது பரிசுத்த ஆவியைக் கொண்டு கிறிஸ்தவத்தை அதன் ஆதிநிலையில் கொண்டு சென்று உலகம் முழுவதும் உள்ள திருச்சபையை தமது வருகைக்காக ஆயத்தப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

## பிரிவு : XI

# உலகப் பெருமதங்களில் கிறிஸ்துவே வழி

## அதிகாரம் 37

### உலகப் பெருமதங்கள்

இந்துமதம் ஒரு மதமல்ல என்ற உண்மையை இந்நாட்களில் இந்துத்துவ வாதிகள் ஏற்றுக் கொண்டிருப்பதாலும், அவ்வாறு நம் நாட்டின் உச்ச நீதி மன்றம் சில வழக்குகளில் தீர்ப்பு கூறியிருப்பதாலும் "இந்துமதம்" என்பது உலகப்பெருமதங்களின் வரிசையிலிருந்து விலக்கிக் கொள்ளப்படும் போது அவ்விடத்தில் சைவம், வைணவம் ஆகியவை சேர்க்கப்படுகிறது. எனவே உலகப்பெரும் மதங்களின் வரிசையில் இன்று நாம் பார்ப்பது கிறிஸ்து மார்க்கம், யூதமதம், சுராஷ்ர மதம், சமணமதம், புத்தமதம் , இஸ்லாமியமதம், சீக்கிய மதம், சைவமதம், வைணவ மதம் ஆகியவை ஆகும்.

## (Summary) சுருக்கம்

கடல்போன்ற ஆழமான கருத்துக்களை உடையவை உலக சமயங்கள். அதைக்குறித்து மின்னல் பார்வையில் மட்டும் சிலவற்றை இங்கு பார்த்துள்ளோம்.

## முதலாவது கிறிஸ்து மார்க்கம்

கிறிஸ்து உலகத் தோற்றத்திற்கு முன்னிருந்தவர். அவர் வார்த்தை யாயிருந்த தேவன். அந்த வார்த்தை தேவ திட்டப்படி மாம்சமாயிற்று. அவர் உலகத் தோற்றத்திற்கு முன் அடிக்கப்பட்ட தேவ ஆட்டுக்குட்டி என்று பார்க்கிறோம். அவரே உலக வரலாற்றில் மனிதனாக அவதரித்த தேவன். அவர் உலகத்தில் அவதரிக்க காரணம் உண்டு. அவர் உண்டு பண்ணின மனிதன் அவரை விட்டு விலகி மரணத்துக்கு உள்ளானதே அந்த காரணம். தேவன் தாம் சிருஷ்டித்த மனிதனுக்கு மீண்டும் நித்திய ஜீவனை அருள்வதற்காக மனிதனாகத் தோன்றினார். அவர் மனிதனை மீட்டுக் கொள்ளும் மார்க்கமானார்.

இவைகளைக் குறித்து விவரிப்பதே விவிலியம் ஆகும். விவிலியத்தின் முதற்பகுதியான பழைய ஏற்பாட்டில் கிறிஸ்து உலகத்தில் வெளிப்படுவதைக் குறித்து வெளிப்படுத்தப்பட்டுள்ளது. தீர்க்கத்தரிசிகள் இதைக் குறித்து விளக்கியிருக்கிறார்கள். விவிலியத்தின் இரண்டாம் பகுதியான புதிய ஏற்பாட்டில் கிறிஸ்து உலக வரலாற்றில் எவ்வாறு அவதரித்தார் என்பதைக் குறித்தும் அவர் எவ்வாறு தம்மையே பலியாக்கி மனிதனை பரத்துக் கொண்டு சேர்க்கும் மார்க்கமாக அமைந்தார் என்பதைக் குறித்தும் விவரிக்கப்படுகிறது. மட்டுமல்ல அவர் மறுபடியும் வந்து மீட்கப்பட்டவர்களை எவ்வாறு தம்மோடு சேர்த்துக் கொள்கிறார் என்பதைக் குறித்தும் கூறப்படுகிறது. இவ்விதமாய் கிறிஸ்துவே தேவனால் ஏற்படுத்தப்பட்ட மார்க்கம் என்று காண்கிறோம்.

## யூத மதம்

இரண்டாவதாக நாம் பார்ப்பது யூத மதத்தையாகும். தீர்க்கத்தரிசிகளின் உரைப்படி கிறிஸ்து யூத ஜாதியில் பிறந்தார். ஆனாலும் யூதர்களில் ஒரு பிரிவினர் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை. அப்பிரிவினர் விவிலியத்தின் பழைய ஏற்பாட்டோடு நின்றுவிட்டார்கள். எனவே யூத மார்க்கம் ஒரு தனி மார்க்கமாய் கருதப்படுகிறது.

## சுராஷ்டிர மதம்

உலக மதங்களில் மூன்றாவது மதமாக காணப்படுவது சுராஷ்டிர மதமாகும். பல தெய்வக் கொள்கையுடைய பெர்சியரின் ஆட்சியின் கீழ் ஏகதெய்வ கொள்கையுடைய இஸ்ரவேல் ஜனங்கள் அடிமைகளாக வசிக்கலாயினர் (B.C. 6 நூ.ஆ). அந்நாட்களில் யூதர்களில் ஒருவனான தானியேல் என்பவன் சில அதிகாரிகளின் சூழ்ச்சியால் சிங்கக்கெபியில் போடப்பட்டான். ஆனால் தானியேலின் தேவன் தானியேலை சிங்கங்களுக்கு தப்புவித்தார். இதைக்கண்ட தரியூ ராஜா தேசமெங்கும் தானியேலின் தேவனே மெய்யான தேவனென்று பறைசாற்றினான். யூதர்களின் ஏகதெய்வக் கொள்கையின் தாக்கம் பெர்சியாவில் சுராஷ்டிரர் என்பவர் ஏக தெய்வக்கொள்கை உடைய சுராஷ்டிர மதத்தை ஸ்தாபிப்பதற்கு காரணமாயிருந்ததென்று கருதப்படுகிறது.

## சமண பவுத்த மதங்கள்

அதே காலங்களில் (கி.மு. 6-ஆம் நூற்றாண்டு) இந்தியாவில் கடவுள் கொள்கை அற்ற சமண பவுத்த மதங்கள் மகாவீரர், கௌதம புத்தர் என்பவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. ஆனாலும் அவை பின்னால் கிறிஸ்தவ கொள்கைகளால் மாற்றம் அடைந்திருப்பதை காண முடிகிறது. கி.பி. முதலாம் நூற்றாண்டில் அவ்விரு மதங்களும் அப்போஸ்தலனாகிய தோமாவின் கடவுள் கொள்கையை, ஏற்றுக் கொண்ட காரணத்தால் சமண மதத்தில் ஸ்வேதாம்பரம் என்றும் புத்தமதத்தில் மகாயானம் என்றும் இரு பிரிவுகள் வளர்ச்சியடைந்ததை காணமுடிகிறது.

## இஸ்லாமிய மதம்

கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் அரபு தேசத்தில் இஸ்லாமிய மதம் ஸ்தாபிக்கப்பட்டது. இஸ்லாமியரும் யூதர்களைப் போல வரலாற்றுப் படி ஆபிரகாமிலிருந்து தோன்றிய ஜாதியினராகும். அரேபியாவில் முகமது நபியால் ஸ்தாபிக்கப்பட்ட இஸ்லாமிய மதம் ஏக தெய்வ கொள்கையுடைய பழைய ஏற்பாட்டு சத்தியங்களையும் புதிய ஏற்பாட்டு சத்தியங்களையும் சில மாற்றங்களோடு கொண்டதாய்

காணப்படுகிறது. அனேக காரியங்களில் இஸ்லாம் விவிலியத்தோடு ஒன்றுபட்டதாய் காணப்படுகிறது.

## சீக்கிய மதம்

யூத, கிறிஸ்தவ மார்க்கங்களின் அடிப்படையிலான ஏக தெய்வ கொள்கையுடைய இஸ்லாமிய மதக் கொள்கைகளையும் அன்றைய இந்து மதத்தின் (ஆதி இந்திய கிறிஸ்தவமாகிய சைவ வைணவ மதத்தின்) கொள்கைகளையும் ஒன்று கலந்து தேவையான மாற்றங்க ளோடு உருவாக்கப்பட்டதே இந்தியாவில் குருநானக் தோற்றுவித்த சீக்கிய மதம்.

## மத ஸ்தாபகர்கள்

மதங்களின் ஸ்தாபகர்களான சுராஷ்டிரர், மகாவீரர், கௌதம புத்தர், முகமது நபி, குருநானக் ஆகிய அனைவரும் மனிதர்களாக பிறந்து இறந்தவர்கள்.

அவர்களில் ஒருவரும் தாங்கள் மனிதர்களாக அவதரித்த தேவன் என்று தங்களைக் குறித்து அறிவிக்கவில்லை. மனுக்குலத்தின் பாவத்துக் காக அவர்களில் எவருமே எந்தப் பரிகாரமும் செய்யவில்லை. அவர்களில் ஒருவரும் மரித்தபின் உயிர்த்தெழும்பி பரத்துக்கு ஏறிச் செல்லவுமில்லை. அவர்கள் சிறந்த வழிமுறைகளைக் குறித்து போதித்த நல்ல மனிதர்கள் மட்டுமே.

## சுராஷ்டிரர்

சுராஷ்டிர மத ஸ்தாபகரான சுராஷ்டிரர் என்பவருக்கு மூன்று மனைவிகளும் பிள்ளைகளும் இருந்தார்கள். அவர் தம் 77-ஆவது வயதில் ஓர் போர் வீரனால் கொல்லப்பட்டார்.

## வர்த்தமான மகாவீரர்

சமண மதத்தை ஸ்தாபித்த வர்த்தமான மகாவீரர், வைசாயி என்ற இடத்தில் சித்தார்த்தனின் மகனாகப் பிறந்தார். அவர் எசோதை என்ற

ஸ்திரீயை மணந்து ஓர் குழந்தை பிறந்தபின் உண்மையைத் தேடி தன் வீட்டை விட்டு புறப்பட்டார். தம் 84-ஆவது வயதில் பாவா என்ற இடத்தில் காலமானார்.

## கௌதம புத்தர்

கௌதம புத்தர் சுத்தோதனன் என்பவருக்கும் மாயாதேவிக்கும் மகனாகப் பிறந்து, யசோதரை என்பவளை மணந்தார். அவர்களுக்கு ராகுல் என்ற குழந்தை பிறந்த ஏழாம் நாள் அவர் ஞானத்தை தேடி புறப்பட்டார். சுந்தன் என்ற கொல்லன் கொடுத்த பன்றி சூப்பை குடித்த பின் ஏற்பட்ட சுகவீனத்தால் குசீனாரா என்ற இடத்தில் வைத்து மரித்துப் போனார்.

## முகமது நபி

இஸ்லாமிய மத ஸ்தாபகரான முகமது என்பவரின் பெற்றோர் சிறு வயதிலேயே இறந்து போய்விட்டபடியால் சித்தப்பாவான அபுதாலிப் என்பவருடன் வளர்ந்து கதீஜா, சாடா, அயிஷா ஆகியோரை மணந்து குழந்தைகளை பெற்று கி.பி. 632ல் கடும் ஜுரத்தால் தாக்கப்பட்டு காலமானார்.

## குருநானக்

சீக்கிய மத ஸ்தாபகராக கருதப்படும் குரு நானக் என்பவர் கி.பி. 1469-ல் பிறந்து நல்லுபதேசங்களை கூறி கி.பி. 1538-ல் மரித்துப் போனார்.

## கிறிஸ்து இவர்களிலிருந்து மாறுபட்டவர்

- ★ கிறிஸ்து ஆதியிலே வார்த்தையாய் இருந்த தேவன். உலக வரலாற்றில் மனிதனாக அவதரித்த தேவன் அவரே. அவருடைய கன்னிப் பிறப்பு இயற்கைக்கு அப்பாற்பட்டது.
- ★ அவருடைய பிறப்பு தீர்க்கத்தரிசிகளால் முன்னறிவிக்கப்பட்டது.
- ★ ஓர் விசேஷித்த நட்சத்திரம் தோன்றி இயேசுவின் பிறப்பை வெளிப்படுத்தியது.

★ இயேசுவின் பிறப்பு உலக வரலாற்றை கி.மு என்றும் கி.பி என்றும் இரண்டாக பிரித்தது.

★ கிறிஸ்துவுக்கு முன்னோடியான யோவான் ஸ்நாபகன் இயேசுவை சுட்டிக்காட்டி இதோ உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக் குட்டி என்று சாட்சி கொடுத்தான்.

★ இரு வேளைகளில் பிதாவாகிய தேவன் வானத்திலிருந்து இவர் என் நேச குமாரன் என்று வெளிப்படுத்தினார்.

★ இயேசு மறுரூப மலையில் தம் மகிமையை வெளிப்படுத்தினார்.

★ இயேசு தம்மைக் குறித்து அனேக வேளைகளில் தாம் தேவனுடைய குமாரன் என்று வெளிப்படுத்தினார்.

★ இயேசு தம் மரணத்தையும் உயிர்தெழுதலையும் குறித்து அனேக தடவைகளில் முன்னறிவித்தார்.

★ அவர் தம் ஊழிய காலங்களில் மாபெரும் அற்புதங்களையும் அடையாளங்களையும் செய்தார்.

★ கன்னி மரியாள் பரிசுத்த ஆவியினாலே கர்ப்பவதி ஆனபடியால் இயேசு ஜென்ம பாவம் இல்லாதவராய் பிறந்தார்.

★ என்னில் பாவம் உண்டென்று எவன் கூறக்கூடும் என்ற சவாலோடு வாழ்க்கையில் பாவமில்லாதவராய் வாழ்ந்தவர் கிறிஸ்து ஒருவரே.

★ விசாரணையில் குற்றமற்றவர். இவரில் குற்றம் ஒன்றும் காணேன் என்று கூறி அவரை விசாரித்த பிலாத்து கைய்யைக் கழுவினான்.

★ மரண நேரத்தில் தேவாலயத்தின் திரைச்சீலை கிழிந்து, பூமி அதிர்ந்து, கன்மலைகள் பிளந்து, காரிருள் மூடியது. இவைகளை பார்த்த நூற்றுக்கதிபதி, மெய்யாகவே இவன் தேவனுடைய குமாரன் என்று சாட்சி பகர்ந்தான்.

★ இயேசு மரித்த பின் மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தவர்.

★ உயிர்த்தெழுந்த பின் 40 நாட்கள் பூமியில் வாழ்ந்து சீஷர்களை பலப்படுத்தினவர்.

★ அனேக ஜனங்களுக்கு முன்பாக பரலோகத்துக்கு ஏறிச் சென்றவர்.

- ★ பரிசுத்த ஆவியாகிய தேவனை உலகத்துக்கு அனுப்பினவர்.
- ★ இயேசு மறுபடியும் வரப்போகிறவர். மறுபடியும் வந்து அவர் ஏற்படுத்திய இரட்சிப்பை ஏற்றுக் கொண்டவர்களை தம்மோடு சேர்த்துக் கொள்ளுகிறவர்.

## இரட்சிப்பு என்றால் என்ன?

### சேற்றில் புதைந்த ஒருவன்

சேற்றில் புதைந்த ஒருவனை அதே சேற்றில் கிடக்கும் மற்றொருவன் தூக்கி விட முடியாது. அவர்கள் தாங்களாக செய்யும் ஒவ்வொரு முயற்சிகளும் தங்களை மேலும் மேலும் சேற்றினுள் ஆழ்த்திக் கொண்டே இருக்கும். பாவச் சேற்றில் தவிக்கும் மனிதனை ஓர் பாவ மனிதன் தூக்கி விட முடியாது. எனவே தான் பாவ மறியாத தேவனே உலகத்தில் வந்து இரட்சிப்பை நிறைவேற்றினார்.

### ஜீவன் அளிக்கும் படகு

ஆழ்கடலில் சாவோடு போராடிக் கொண்டிருக்கும் ஒருவன் தனக்குக் கிடைத்த ஓர் மரத்துண்டை பிடித்துக் கொண்டு மரணத்தை எதிர் நோக்கிக் கொண்டிருக்கும் போது அவனை மீட்டு உயிரளிக்க வந்து நிற்கும் படகைப் போல இயேசுவின் இரட்சிப்பு காட்சியளிக்கிறது. இதை ஏற்றுக் கொள்கிறவர்கள் நித்திய ஜீவனுக்குச் செல்வார்கள். ஏற்றுக் கொள்ளாதவர்கள் நித்திய மரணம் அடைவார்கள்.

### ஆலோசனை மட்டும் போதாது

ஆற்று வெள்ளத்தின் ஒழுக்கில் சிக்கிக் கொண்ட ஒருவனைக் கண்டு கரையில் நின்று கொண்டு அவனுக்கு மீட்புக்கான நல்ல ஆலோசனை சொல்லுவதினால் அவனை இரட்சித்து விட முடியாது. தன் உயிரை பொருட் படுத்தாமல் ஒருவல்லவன் ஆற்றில் குதித்து அவனை இழுத்து கரை ஏற்றினால் மட்டுமே இரட்சிப்பு உண்டு. உலக மதங்களை ஸ்தாபித்த அனேக நல்லவர்கள் நல்ல உபதேசங்களை

கூறியிருக்கிறார்கள். ஆனால் பாவ வெள்ளத்தில் மூழ்கும் மனிதனை மீட்கும்படி பரத்திலிருந்து குதித்தவர் இயேசு ஒருவரே ஆவார்.

## இயேசுவே இரட்சகர்

மனிதனின் பாவத்துக்காக ஜீவனைக் கொடுத்தவர் கர்த்தராகிய இயேசுக் கிறிஸ்து ஒருவரே. அவர் ஒருவரால் மட்டுமே பாவத்திலிருந்து மனிதனை இரட்சிக்க முடியும். ஏனென்றால் அவர் நம் தண்டனையை தாமே ஏற்றுக் கொண்டு நம்மை விடுதலையாக்கி விட்டார்.

## கிறிஸ்து சகல ஜனங்களுக்கும் உரியவர்

இயேசுக் கிறிஸ்து ஒரு குறிப்பிட்ட மதத்தவருக்கோ, இனத்தவருக்கோ, மொழியினருக்கோ மட்டும் உரிமைப் பட்டவர் அல்லர். அவர் சர்வ சிருஷ்டிகர். அவர் எந்த மதத்தையும் ஸ்தாபிக்க வராமல் எல்லா மனிதருக்கும் இரட்சிப்பை உண்டு பண்ணவே வந்தார். அவர் தம் மரணத்தால் சம்பாதித்து தந்த இரட்சிப்பை விசுவாசித்து ஏற்றுக் கொண்ட எந்த மனிதனுக்கும் மீட்பு உண்டு. தேவனோடு வாழும் நித்திய வாழ்வும் உண்டு. நித்திய ஜீவனுக்கான ஒரே வழி கிறிஸ்துவால் கிடைக்கும் இரட்சிப்பு மட்டுமே. கடவுள் எல்லாருக்கும் தேவனானவர். அவர் சம்பாதித்து தந்த இரட்சிப்பும் எல்லா ஜனங்களுக்கும் உரியதே ஆகும்.

## உலகமெங்கும் இரட்சிப்பு

இன்று இந்த இரட்சிப்பை ஏற்றுக் கொண்ட போதிலும் தங்களை கிறிஸ்தவர்கள் என்று வெளிப்படையாய் சொல்லிக் கொள்ளாத பல்லாயிரக்கணக்கானோர் பல்வேறு மதங்களிலும், ஜாதிகளிலும், தேசங்களிலும், பாஷைக்காரர்களிலும் உண்டு. அவர்களை கர்த்தரே தம் சபையில் சேர்த்துக் கொண்டிருக்கிறார். அப்போஸ்தலனான பரிசுத்த யோவான் உலகத்தின் முடிவில் பரலோகத்தில் நிற்கும் பரிசுத்தவான்களின் காட்சியை தன் கண்கள் முன் கண்டு அதை வெளி 7:9,10-வசனங்களில் விளக்குகிறார்.

## யோவானின் காட்சி

"இவைகளுக்குப் பின்பு, நான் பார்த்த போது இதோ சகல ஜாதிகளிலும், கோத்திரங்களிலும், ஜனங்களிலும், பாஷைக் காரரிலும் இருந்து வந்ததும், ஒருவனும் எண்ணக் கூடாததுமான திரளான கூட்டமாகிய ஜனங்கள் வெள்ளை அங்கிகளை தரித்து, தங்கள் கைகளில் குருத்தோலைகளைப் பிடித்து, சிங்காசனத்திற்கு முன்பாக நிற்கக் கண்டேன். அவர்கள் மகா சத்தமிட்டு : இரட்சிப்பின் மகிமை சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கிற எங்கள் தேவனுக்கும் ஆட்டுக் குட்டியானவருக்கும் உண்டாவதாக என்று ஆர்ப்பரித்தார்கள்". என்று வாசிக்கிறோம். பரலோகம் இரட்சிப்பை ஏற்றுக் கொண்ட எல்லா ஜனங்களுக்கும் உரியது என்று காண்கிறோம். அதற்கு கிறிஸ்துவே மார்க்கமாயிருக்கிறார்.

"இயேசுவானவர் தமது மாம்சமாகிய திரையின் வழியாய் புதிதும் ஜீவனுமான **மார்க்கத்தை** நமக்கு உண்டுபண்ணினார்..." *(எபி. 10:19).*

# இணைப்பு

## R.S.S. -இன் இரகசியச் சுற்றறிக்கை

### சுற்றறிக்கை : 411 / RO300311 / RSS003

### *(31-வது அத்தியாயத்தில் குறிப்பிட்டபடி இணைக்கப்படும் இரகசிய சுற்றறிக்கையின் நகல்)*

*உள்ளூர் தலைவர்களுக்கு*

பழைய கடமைகளோடு புதிய கடமைகளும் இங்கு தரப்படுகின்றன. சில மாற்றியமைக்கப்பட்டுள்ளன. நாட்டுப் பற்றுள்ளவர்களுக்கும், தொண்டர்களுக்கும் இவற்றை புகட்டுக. மாற்றுக் கருத்துகளைத் தலைமையகத்துக்குத் தெரிவிக்கவும். கீழ்க்காணும் அறிவுறுத்தல்களை உறுப்பினர்களுக்குத் தெரிவித்து விட்டு இச்சுற்று மடலை எரித்து விட வேண்டும்.

1. சுடு கருவிகளையும் வெடி மருந்துகளையும் திரட்டுவது வேகப் படுத்தப்பட வேண்டும்.

2. முகமதியர்களையும் அம்பேத்காரின் இயக்கத்தவரையும் எதிர்த்துப் போராடுவதற்கெனத் தாழ்த்தப்பட்டோரையும் பிற்படுத்தப்பட்டோரையும் வென்றெடுக்க வேண்டும்.

3. இந்துத்துவக் கொள்கை அதிகாரிகளிடம் வேகமாகப் பரப்பப்பட வேண்டும்.

4. மருத்துவர்களிடையே இந்துத்துவக் கொள்கையை எடுத்துச் சொல்ல வேண்டும். காலாவதியான பழைய மருந்துகளையும், போலி மருந்துகளையும் தாழ்த்தப்பட்ட, பழங்குடியினர், முகமதியருக்கும் தரும்படி அவர்களைத் தூண்ட வேண்டும். குருதிக் கொடை(இரத்த தானம்) தருவதென்னும் சாக்கில் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் சூத்திரருக்கும் பிறந்த பச்சிளம் குழந்தைகளுக்கு ஊசி வழியில் நஞ்சை ஏற்றி அக்குழந்தைகளை ஊனமாக்க வேண்டும்.

5. இந்து எதிர்ப்பு (பிராமண எதிர்ப்பு) நிகழ்ச்சிகளையும் போலி மதச் சார்பின்மை நிகழ்ச்சிகளையும் புறக்கணிக்கவும்.

6. தாழ்த்தப்பட்டோருக்கும், பிற்படுத்தப்பட்டோருக்கும் பிறந்த பச்சிளம் குழந்தைகள் இருக்குமிடங்களில் ஓம் என்றும் செய்சிறீராம் என்றும் ஒலிக்க வேண்டும்.

7. பிற்படுத்தப்பட்டோரும், தாழ்த்தப்பட்டோரும் பெருமளவில் வாழ்கின்ற பகுதிகளில் கள், சாராயம், போதைப் பொருட்கள், சூதாட்டம், பரிசு (லாட்டரி) சீட்டு விற்பனை முதலானவற்றைப் பெருக்குமாறு அவற்றை விற்பவரைத் தூண்ட வேண்டும். அரசு அலுவலகங்களில் சமயம் சார்ந்த சடங்குகளையும் வழிபாடுகளையும் ஊக்குவிப்பது மட்டுமல்லாது, புதிய கோவில்களைக் கட்டுவதையும் பழைய கோவில்களைப் புதுப்பிப் பதையும் ஊக்கு விக்க வேண்டும். முகமதியரின் வழி பாட்டுத்தலங் களையும், இந்து அல்லாதோரின் கோவில்களையும் சூறையாட வேண்டும்.

8. தாழ்த்தப்பட்ட சாதிப்பெண்களையும் முகமதியப் பெண்களையும் பரத்தைத் தொழிலில் (வேசித் தொழில்) ஈடுபடுமாறு ஊக்குவிக்க வேண்டும்.

9. தொண்டர்களின் வழியாகவும், தின்பண்டம் விற்போரின் வழியாகவும் ஆசிரியரின் வழியாகவும் பள்ளிக்குச் செல்லும் தாழ்த்தப்பட்ட சாதிப் பிள்ளைகளுக்கு, குறிப்பாக அம்பேத்கார் இயக்கத்தின் பிள்ளைகளுக்கு நஞ்சு கலந்த தின்பண்டங்களைக் கொடுத்து அவர்களின் மன, உடல் வளர்ச்சியை முடமாக்க வேண்டும்.

10. நமது பள்ளிகளில் தாழ்த்தப்பட்ட, பழங்குடி மக்களின் பிள்ளைகளை அதிகமாகச் சேர்க்க வேண்டும். நாம் காட்டும் இந்து நெறிமுறைகளுக் கேற்ப அவர்களுக்கு வரலாற்றைக் கற்பிக்க வேண்டும்.

11. முகமதியர், அம்பேத்கார் இயக்கத்தினர், புத்த மதத்தவர்களுக்கு எதிரான கலவரங்களைத் தூண்டுவதை வேகப்படுத்த வேண்டும். நம்முடைய உறுப்பினர்கள் வாழும் இடங்களில் இருந்து தொலைவாக உள்ள இடங்களில் புதிய உள்ளூர் குண்டர்களைக் கொண்டு வந்து, அத்தகைய கலவரங்களைத் தூண்ட வேண்டும். இந்து எதிர்ப்பாளர்களைத் தாக்குமாறு காவல் துறையையும், ஆயுத படையினரையும் தூண்டி விட வேண்டும்.

12. இந்துக்களுடையதல்லாத சில வழிபாட்டுத் தலங்களுக்கு அருகில் சில படிமங்களையும் சிலைகளையும் மண்ணுக்கடியில் புதைத்து வைப்பது முன் போலவே தொடர வேண்டும். கிறித்துவக் கோவில்களும், முகமதியரின் தொழுகை(பள்ளி வாசல்) யிடங்களும் நினைவுத் தூண்கள் எல்லாம் பழைய இந்துக் கோயில்களே என மெய்ப்பிப்பதற்குத் தலைமையகத்தை அணுக வேண்டும்.

13. கலவரங்களின் போது முகமதிய, தாழ்த்தப்பட்ட சாதி பெண்களைக் கூட்டாகக் கற்பழிக்க வேண்டும். அந்நேரத்தில் நண்பரென்றும் பழக்கமானவரென்றும் ஈவு இரக்கம் பார்க்கக் கூடாது. இங்கு சூரத் மாதிரியை பின்பற்ற வேண்டும்.

14. இசுலாமிய எதிர்ப்பு வெளியீடுகளையும் புத்தமத எதிர்ப்பு வெளியீடு களையும் வெளிக் கொணர்வதில் முனைப்புடன் இருக்க வேண்டும். அசோக மாமன்னன் புத்தன் அல்லன் என மெய்பிப்பதற்குப் புதுப்புதுக் கட்டுக் கதைகளைப் புனைய வேண்டும்.

15. பிராமணீய எதிர்ப்பு இலக்கியங்களும் தாழ்த்தப்பட்டோர், அம்பேத்கார் இயக்கம், பொதுவுடைமை இயக்கச் செய்தி வெளியீடுகளும் அழிக்கப் பட வேண்டும். அத்தகைய இலக்கியங்கள் பொது நூலகங்களிலும் அரசு நூலகங்களிலும் நுழைய விடாமல் தடுப்பது தொடர்ந்து கொண்டிருக்க வேண்டும். அம்பேத்கார் பற்றிய நம்முடைய வெளியீடுகளைத் தாழ்த்தப் பட்ட பிற்பட்டோரிடம் பரப்ப வேண்டும்.

16. அறிவுறுத்தப்பட்டவாறே, தாழ்த்தப்பட்டோரிடமும் பழங்குடியினரி டமும் உள்ள தேக்க நிலை தொடர வேண்டும்.

17. இராமரின் உருவம் தாங்கிய பட ஒட்டிகளையும், நாட்காட்டிகளையும் துண்டுப் பிரச்சார வெளியீடுகளையும் பெருமளவில் பரப்ப வேண்டும்.

18. பிற்படுத்தப்பட்டோரிடையேயும், தாழ்த்தப்பட்டோரிடமும் மூட நம்பிக்கையைப் பரப்ப வேண்டும். அதற்காகச் சாமியார்களையும், சாதுக்களையும் தொடர்ந்து பயன்படுத்த வேண்டும்.

19. சைனர்களையும், பௌத்தர்களையும், சீக்கியர்களையும் இந்துக்களாக் குவது தொடர வேண்டும். சைனக் கோவில்களில் இராம வழிபாடு அறிமுகப்படுத்தப்பட வேண்டும். இதிலான முன்னேற்றத்தைத் தலைமையத்திற்குத் தெரிவிக்க வேண்டும்.

20. பொதுவுடைமை, பொதுவுடைமையர் தாழ்த்தப்பட்டோர், சூத்திரர்கள் ஆகியோருக்கு எதிரான தாக்குதல்கள் நடத்த வேண்டும்.

21. மண்டல் பரிந்துரைகளுக்கு எதிரான கிளர்ச்சியைத் தொடர வேண்டும்.

22. வெவ்வேறு சாதிகளுக்கு இடையில், குறிப்பாக தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட சாதிகளுக்கு இடையில், சாதிச் சண்டைப் பூசல்களைத் தூண்டி விட வேண்டும்.

23. சங்க மனு நீதி தொடர வேண்டும்.

24. தாழ்த்தப்பட்டவருக்கும் அம்பேத்காரியக்கத்திற்கும் எதிராகக் காதல் திருமணத்தை வரைமுறையின்றிக் கடை பிடிக்க வேண்டும். அவர் தம்

பெண்களுக்கு நம்முடைய ஆணுறுப்பைக் காட்டவும், அவர்களை முத்தமிடவும், அருவருக்கத்தக்க ஆபாசமான ஒளிப்படங்களை அவர்களுக்கு காட்டவும் சிறு போதை மருந்துகளை அவர்கள் பயன்படுத்தும்படியும் செய்ய வேண்டும்.

25. தாழ்த்தப்பட்ட பழங்குடியினருக்கும் ஊட்டச்சத்து இல்லாமை நீடிக்க வேண்டும். முன் சொன்னது போலவே அவர்கள் அருந்தும் கள்ளிலும், சாராயத்திலும் நஞ்சைக் கலக்க வேண்டும். அவர்களின் உணவில் நஞ்சூட்டுவதும் மெதுவாகத் தொடர வேண்டும்.

26. செய்தி ஏடுகளின் மீதான நம்முடைய பிடிப்புகள் வலுப்படுத்தப்பட வேண்டும். இசுலாமிய எதிர்ப்பு, மண்டல ஆணை எதிர்ப்பு, இந்து ஆதரவு, இராம வழிபாடு ஆதரவுக் கட்டுரைகள் உள்ளூர் ஏடுகளில் மிகையாக வெளியிடும் வகையில் அந்த ஏடுகளின் ஆசிரியர்களை இந்துத்துவக் கொள்கைக்கு உட்படுத்த வேண்டும்.

27. இந்துத்துவக் கொள்கைக் கேற்ப இயங்கும் அரசியல் கட்சிக்குத் தாழ்த்தப்பட்ட சாதியினரிடமிருந்தும் பழங்குடியினரிடமிருந்தும் பிற்படுத்தப்பட்டவர்களிடமிருந்தும் பெருமளவில் உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும். அவர்களை வடிகட்டி எடுப்பதற்கு வளமையான முறையைப் பின்பற்ற வேண்டும்.

28. முசுலிம் எழுத்தாளர்கள், இசுலாமிய மதத் தலைவர்கள் மண்டலறிக் கைக்கு எதிராகவுள்ள பிற்படுத்தப்பட்ட சாதி எழுத்தாளர்கள் ஆகியோரை வென்றெடுக்க வேண்டும். போலி மதச் சார்பின்மையென்னும் கருத்தாக்கத்தைப் பரவலாக ஆள வேண்டும்.

29. இந்துக்களல்லாதவர்கள், இந்து எதிர்ப்பாளர்கள், பிராமண எதிர்ப் பாளர்கள் ஆகியோரின் செயற்பாடுகளைத் தொடர்ந்து கண்காணித்து, அவர்களைப் பற்றிய செய்திகளைத் தலைமையகத்திற்குத் தெரிவிக்க வேண்டும்.

30. இந்து எதிர்ப்பாளர்களையும், பிராமண எதிர்ப்பாளர்களையும் கொல்லுவது தொடர்ந்து கொண்டிருக்க வேண்டும். அவர்களின் பிணங்களை முன்னர் அறிவுறுத்தியவாறே துப்புக் கிடைக்காத வகையில் அப்புறப்படுத்தி விட வேண்டும்.

31. தொண்டர்களின் வெள்ளுவாக் (பவுர்ணமி) கூட்டம் தொடர்ந்து நடைபெறட்டும்.

32. ஊதுவது (Whistle) தொடரட்டும் . செய்சிறீ ராம்

இரண்டாவதாக பிராமண சங்கத்தின் சுற்றறிக்கை கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

ஆரிய வர்ணாசிரம தர்மத்தில் சூத்திரர்கள் என்று குறிக்கப்பட்ட திராவிடப் பகுதியினர், இப்போது பிற்படுத்தப்பட்ட மக்கள் என்ற பிரிவிலும் பஞ்சமர்கள் என்று குறிக்கப்பட்ட மக்கள் இப்பொழுது ஷெட்யூல்டு வகுப்பினர் அல்லது அம்பேத்கார் இயக்கத்தினர் என்ற பிரிவுகளிலும், மதம் மாறிய திராவிடராகிய இஸ்லாமியரும், கிறிஸ்தவரும் மதச் சிறுபான்மையினர் என்ற பிரிவிலும் அடக்கபட்டுள்ளனர். இந்த மூன்று பகுதியினராக விளங்கும் திராவிடர்களை ஒடுக்குவதற்கும் அழிப்பதற்கும் ஆரியப் பிராமணர்கள் செய்கின்ற நடைமுறை சூழ்ச்சிகள் இரகசிய சுற்றறிக்கைகளாக வெளியிடப்பட்டிருக்கின்றன.

*(வெளிவந்த பத்திரிக்கைகள் : விடுதலை-ஞாயிறு மலர் 26. 3.95; தமிழக பறயர் குரல் ஏப்ரல் 95; நமது உரிமை முரசு-ஏப்ரல் 95; திராவிட சமயம் ஜூலை 95)*

## மத்தியப் பிரதேசம் பாலகாட்
## பிராமண சமாஜத்தின் இரகசியக் கடிதம்

அன்பு நண்பர்களே,

பிராமண சமாஜத்தின் மாவட்ட அளவிலான கூட்டம் ஆகஸ்டு 15 ஆம் நாள் பாலகாட்டில் நடைபெற்றது. ஜபல்பூரின் தலைசிறந்த புனிதர் திரு திரிவேதியின் தலைமையில் அது நடை பெற்றது. அக் கூட்டத்தில் கீழ்க் காணும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. பிற்படுத்தப்பட்ட வகுப்பார்களாகிய பவார், மாரர், லோடி, காசர் போன்ற சூத்திரங்களை மத சார்பான நிகழ்வுகளில் ஈடுபடுத்த வேண்டும். அப்போது தான் அரசியல் உரிமைகளில் தங்கள் கவனத்தைச் செலுத்தாமல், எப்போதும், அடிமைகளாகவும், பிராமண ஆதரவாளர் களாகவும் இருப்பார்கள்.

2. செட்யூல்டு வகுப்பினர், பழங்குடியினர், பிற்படுத்தப்பட்டவர், சமயச் சிறுபான்மையினர் போன்றவரிடையே வளர்ந்துள்ள அரசியல் விழிப்புணர்ச்சி, பிராமணீயத்தின் தலைமைக்கு அச்சுறுத்தலை உருவாக்கியுள்ளது. எனவே, அவர்களுக்குள் ஒரு குழப்பத்தையும் மோதலையும் ஏற்படுத்தினால் தான் தங்களுக்குள்ளாகச் சண்டையிட்டுக் கொண்டேயிருப்பார்கள்.

3. நாலாவது வருணத்தாராகிய சூத்திரர்களிடத்தில் சென்று, அரசியல் சட்டம் இந்துக்களுக்கு எதிராக அமைந்துள்ளது. என்றும் அதை மாற்ற வேண்டும் என்றும் நாம் கூற வேண்டும். இந்த விழிப்புணர்ச்சி உருவாக்கப்பட்டுப் பொது மக்களிடையே பரப்பபட வேண்டும்.

4. பிராமணீயத்தின் தலைமைக்கு ஆபத்து உருவாகியுள்ளதால் காங்கிரஸ், பி.ஜே.பி. கம்யூனிஸ்ட், சமுதாயம் மற்றும் மத அமைப்புகளில் உள்ள பிராமணர் ஒவ்வொருவரும் பிராமணீயம் என்ற பெயரில் ஒன்று சேரவேண்டும்.

5. தவறான குழப்பங்களைப் பவார், மாரர் லோடி போன்ற பிற்படுத்தப் பட்ட வகுப்பினரிடையேயும் செட்யூல்டு வகுப்பி னரிடையேயும் சமயச் சிறுபான்மையினரான முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பௌத்தர்கள் ஆகியோரிடையேயும் உருவாக்கி அது பரவுமாறு செய்ய வேண்டும். இதனால் அவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு மாண்டு அழியுமாறு செய்ய வேண்டும்.

6. கான்சிராமின் பகுஜன் சமாஜ் கட்சியின் அரசியலாலும் தலித் மக்களிடையே ஏற்பட்டுள்ள விழிப்புணர்ச்சியினாலும் பிராமணீயத்தின் தலைமைக்கு அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளது. இதை எதிர்ப்பதற்கு இக்கட்சி மகர்களுக்கும் (Mahars) சாமர்களுக்கும் (Chamars) மட்டுமே உரியது என்று மக்களிடம் சொல்ல வேண்டும். அப்போது தான் பிற சிறு சிறு சாதிகள் அதில் சேர்ந்து விடாமல் இருக்கும்.

7. செட்யூல்டு வகுப்பினர், பிற்படுத்தப்பட்டவர், முஸ்லிம்கள் ஆகிய தொழிலாளர்கள் தங்கள் உடம்பில் கொழுப்பைச் சேர்த்து வைத்துள்ளனர். எனவே, அவர்களின் உடலும் உள்ளமும் சித்திரவதை செய்யப்பட வேண்டும். அவர்களுக்கு மேலே உள்ள பிராமண அதிகாரிகள், அலுவலகச் செயற்பாடுகளையும் பிற பணிகளையும் இரகசியமாகச் செய்து அவர்களை மிகவும் இழிவுபடுத்த வேண்டும்.

8. இட ஒதுக்கீட்டை, செட்யூல்டு வகுப்பு மக்கள் தவறாகப் பயன் படுத்துவதால் தான் கீழ்ச் சாதியைச் சேர்ந்த வேலையில்லா இளைஞர் களுக்குக் கிடைக்க வேண்டிய வேலை வாய்ப்பு கிடைக்கவில்லை என்று உயர் பதவி வகிக்கும் பிராமணர்கள், கீழ்ச்சாதி இளைஞர்களிடம் பரப்ப வேண்டும். அப்போது தான் அவர்கள் தங்களுக்குள்ளாக எப்போதும் சண்டை போட்டுக் கொண்டே இருப்பார்கள்

9. பிராமணர்கள் தங்களையும் பிராமணீயத்தையும் பாதுகாப்பதற்காக ஒரே மேடையில் சேரவில்லையென்றால் அது வெட்கப்படுவதற்கும் சாவதற்கும் ஏதுவானதாகும். அதோடு தீண்டத்தகாவர்களுக்கு அடிமை களாக மாறியும் விடுவார்கள். எனவே, பிராமணர்களையும் அவர்கள் கொண்டுள்ள நாட்டின் தலைமையையும் காப்பாற்றுவதற்காக எல்லாச் சூழ்ச்சிகளையும் கையாள வேண்டும்.

10. பிராமணர்களைப் பாதுகாக்கும் கவசமாக விளங்கும் பிற்படுத்தப்பட்ட மக்களை ஜெய்ஸ்ரீராம் என்ற மந்திரத்தை உச்சரிக்கச் செய்து அவர்களை

முன்னணியில் வைத்திருக்க வேண்டும். காயத்திரியக்ளும், பிரமகுமாரி நிறுவனம், ஸ்ரீத்தி சத்ய சாய் போன்ற மதச் செயற்பாடுகள் மூலம் அவர்களைக் குழப்பிக் கொண்டேயிருக்க வேண்டும். 'சிவ பத்ரா' என்பதன் மூலம் பௌத்தர்களை குழப்ப வேண்டும்.

11. காந்தியம் என்பது பிராமணீயம் அம்பேத்காரிசம் நாட்டில் வளர்ந்தால் பிராமணீயம் அழிந்து விடும். ஆர்.எஸ்.எஸ்ஸின் தலைசிறந்த மனிதர்களான டாக்டர் ஹெட்கோவார் , கோல்வால்கர் குருஜி போன்றவர்களின் பெயர்களைப் பயன்படுத்த ஒருவரும் இருக்கமாட்டார். எனவே, அவர்களின் ஒவ்வோர் அமைப்பினுள்ளும் ஊடுருவி, இரகசியமாக அவர்களின் செயற்பாடுகளை அறிந்து அவர்களின் ஒவ்வொரு திட்டத்தையும் வீழ்த்த வேண்டும்.

12. பிராமணீயத்தை உயிருள்ளதாக வைத்திருக்க வேண்டுமானால், பிற்படுத்தப்பட்ட வகுப்பு இளைஞர்களிடம் மத உணர்ச்சிகளையும் நம்பிக்கைகளையும் தூண்டி அவர்களைக் குழப்பி, செட்யூல்டு வகுப்பினரோடு விரோதத்தையும் சண்டையையும் உருவாக்க வேண்டும். அப்போது தான் பிராமணர்களின் பிள்ளைகளும் தங்கள் ஆதிக்கத்தை அரசாங்க ஆட்சியமைப்பிலும் அரசியலிலும் கட்டிக்காக்கமுடியும்.

13. பிராமணீயத்தை பாதுகாக்கப் பிராமணப் பெண்கள் தங்களை அர்பணித்து பிராமணீயத்தைப் பாதுகாப்பது மிகவும் இன்றியமையாதது. பிராமணனைப் பாதுகாக்க ஒரு பிராமணப் பெண் முன்வந்தால் மனுஸ்மிருதியின் படி அவர்களுக்குப் புண்ணியம் கிடைக்கும்.

நண்பர்களே, இவை அனைத்தும் இரகசியமாகச் செயற்படுத்தப்பட வேண்டும். இந்த கடிதம் கீழ்சாதிக்காரர்களின் கைகளில் சிக்கி விடக்கூடாது. இது இரகசியக் கடிதம்.

தலைவர்

மாவட்ட அளவிலான பிராமண சமாஜம் பாலக்காட்

(Mulnivasi Times VO1. No.1/No.1,
Jan 95 D.K. Kahaparde)

# BIBLIOGRAPHY


1. Dake's Annotated Reference Bible
2. Thompson Chain Reference Bible
3. The Reese Chronological Bible
4. சொல்லோவிய வேதாகமம்
5. Daniel Reference Bible
6. The N.I.V. Study Bible
7. History of Christianity in India. Source Materials - M.K. Kuriakose.
8. An Introduction to Church History - F. Hrangkhuma
9. History of the Christian Church - Henry C. Sheldon
10. Church History - John Foster
11. Pentecost and after - M.R. Dehaan, M.D.
12. Highlights of Church History - Howard F. Vos
13. After the Apostles - John Foster
14. From Jerusalem to New Delhi - M.F. Gibbs
15. Beginning from Jerusalem - John Foster
16. The Development of Civilization and Religion in India and Its Influence on the World Society - Dr. Alexander Harris.
17. Christianity in Hinduism - Dr. M. Deivanayagam, M.A., Ph.D., Dr. D. Devakala M.A., Ph.D.
18. Comparative Religion - Kedar Nath Tiwari
19. Assian Religions - Geoffrey Parrinder
20. Bharatheeya Matha Samgraham - R. Krishnan Kuttiy
21. சிவஞான போதம் உரை - டாக்டர். மு. தெய்வநாயகம்
22. திருக்குறள் புத்தாய்வு - டாக்டர். இரா. அருளப்பா
23. திருநீரா? சிலுவையா? - டாக்டர். மு. தெய்வநாயகம்
24. சுருதி இலக்கியம் - அறிவர். ச. கங்காதரன்
25. புத்த சமயம் - எம்.ஏ. இரத்தினராஜா
26. சிந்துவெளி தொல்தமிழ் நாகரீகம் - பி. இராமநாதன்
27. விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வு - டாக்டர். மு. தெய்வநாயகம்.
28. கிறித்துவமும் தமிழும் - மயிலை சீனி வேங்கடசாமி
29. சங்கரமடத்தோடு போராட வேண்டியது ஏன் ?
    - டாக்டர். மு. தெய்வநாயகம் M.A., Ph.D.
30. இந்தியா ஒரு கிறிஸ்தவ நாடு - சுந்தர் யேசுவடியான்

31. சங்கரமடத்துக்கு 108 கேள்விகள் - டாக்டர். மு. தெய்வநாயகம் M.A., Ph.D.

32. இந்து நாகரிகமா - நயவஞ்சமகா ? அம்பேத்கார்.

33. இந்துத்துவாவின் பிடியிலிருந்து இந்து மதத்தை விடுவிப்பது எவ்வாறு ?
- டாக்டர். மு. தெய்வநாயகம்

34. திருக்குறள் - டாக்டர். ந. சுப்பு ரெட்டியார்.

35. மொஹஞ்சொதாரோ அல்லது சிந்துவெளி நாகரீகம்
- டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனார்.

36. தமிழர் சமயம், தமிழர் வேதம், தமிழகத்து கோயில்கள்
- யு. சுப்ரமணியன் ஐ.ஏ.எஸ்.

37. தோமா வழி ஆதி இந்தியக் கிறிஸ்தவம் - முனைவர். யா.தா. பாசுகரதாசு.

38. பரிசுத்த வேதாகமத் துணைநூல் - M. கிறிஸ்டோபர்

39. சிந்துஸ்தான் டைம்ஸ் - M. சுந்தர் யேசுவடியான்

40. Dravidian Lineages A Social Study - Dr. M. Immanuel

41. Christian Hindu Interaction in Tamil Sangam Literature - Pr. T. Sam

42. Thirukkural and its central thought - Most Rev. Dr. R. Arulappa

43. இந்துத்துவாவிலிருந்து விடுதலை - M. கிறிஸ்டோபர்

44. திராவிட சமயம் பத்திரிகை

வெளியிடப்பட்டுள்ள மற்று புத்தகங்கள் :-

1. **பரிசுத்த வேதாகமத் துணை நூல்**
2. **கர்த்தரின் நாள்**
   **(இயேசுவின் இரண்டாம் வருகை)**
3. **விவிலிய பாதை**
   **(ஏதேன் முதல் எருசலேம் வரை)**
4. **இந்துத்துவாவிலிருந்து விடுதலை**
5. **(யுகா யுகங்களில்)**
   **சாத்தானுடைய போராட்டங்கள்**
6. **Love Hindus**
7. **குமாரனாகிய இயேசு**
   **[விவிலியம், திருக்குறள், சைவ சித்தாந்தங்களில்]**
8. **திருக்குறள்**
   **அடிப்படை கிறிஸ்தவமே - விளக்க உரை**

***Copies can be had from :***

**Bible Institute**, Gems Complex, Kalluketty,
Kuzhithurai - 629 163. Ph : 04651 - 260354, 260404.

**Diocesan Book Depot**
Nagercoil. Ph : 04652 - 230395

**Shalom Bible Books**
Nagercoil. Ph. 04652 - 225406.

**Word of Christ**
Green Ways Road, Chennai. Ph : 044 - 24616161.

**Word of Christ**
Madurai. Ph : 0452 - 2536240.

**B.L.S. Head Office**
Vepery High Road, Chennai. Ph. 044 - 25323231.

**Living Voice**
Palayamkottai. Ph. 0462 - 2502098.

**Bible Book Club**
Palayamkottai. Ph : 0462 - 2586784.

**C.L.S.**
Chennai. Ph. 044 - 25354296, Madurai. Ph : 2342405.

**Gem India Honey Complex**
Mogapair, Chennai. Ph. 044 - 26521326.

***Also available in all***
***Leading Christian Book Stalls in Tamil Nadu.***

---


**ஆசிரியர் விலாசம் :-**

**M. கிறிஸ்டோபர், M.A., LL.B.**
**பெனாயா, கல்லுக்கெட்டி, குழித்துறை – 629 163,**
**குமரி மாவட்டம். Ph. 04651 - 260404.**

## உள்ளே

- ★ கிறிஸ்தவத்தின் வரலாற்றுப் பின்னணி
- ★ கிறிஸ்தவத்தின் வளர்ச்சிப் பாதையில் பிற மதங்களின் தோற்ற வளர்ச்சிகள்
- ★ கிறிஸ்தவத்தின் தற்காலப் போக்கு

## இந்துத்துவா

- *"இந்து மதம் ஒரு மதமல்ல" – சொல்லப்படுவது ஏன்?*
- *சைவ–வைணவ மதங்களுடன் கிறிஸ்தவத்துக்கு என்ன உறவு?*
- *சைவக் கோவில்களில் விவிலிய ஆகம முறையா?*
- *சங்கர மடங்களின் இலட்சியம் எது?*
- *மனுதர்மத்தின் இலாபம் யாருக்கு?*

## உலகப்பெருமதங்கள்

1. கிறிஸ்து மார்க்கம்
2. யூத மதம்
3. சுராஷ்டிர மதம்
4. சமண மதம்
5. புத்த மதம்
6. இஸ்லாமிய மதம்
7. சீக்கிய மதம்

* இந்து மதம் எனப்படும்

8. சைவ மதம்
9. வைணவ மதம்




Gems, Gems complex, Kallukatty, Kuzhithurai - 629 162.
Kanyakumari Dist. Ph: 04651-260404